# நச்சினார்க்கினியர் உரையில் சமூக வெளிப்பாடு

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.,)
பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**மா.லெட்சுமி**

(பதிவு எண்.0165)

நெறியாளர்

பேரா.முனைவர். **மு. பாண்டி**






தமிழ்த்துறை

## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் மறுதரமதிப்பீட்டில் ‘A’ மதிப்புப் பெற்றது)

**காரைக்குடி – 630 003**


ஜூன் - 2015

**மா.லெட்சுமி,**
*பதிவு எண்:0165,*
*முனைவர்பட்ட ஆய்வாளர்,*
*தமிழ்த்துறை,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி – 630 003.*

*நாள்:*

## ஆய்வாளர் உறுதிமொழி

**'நச்சினார்க்கினியர் உரையில் சமூக வெளிப்பாடு'** *என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும் இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.*

***(மா.லெட்சுமி)***
**ஆய்வாளர்**

**உறுதிக் கையொப்பம்**
பேரா.முனைவர் **மு.பாண்டி,**
*தமிழ்த்துறைத் தலைவர்,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி–630 003.*

**பேரா.முனைவர் மு.பாண்டி,**
*பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி - 630 003.*

*நாள்:*

# <u>நெறியாளர் சான்றிதழ்</u>

**‘நச்சினார்க்கினியர் உரையில் சமூக வெளிப்பாடு’** *என்னும் தலைப்பில் ஆய்வாளர் திருமதி.மா.லெட்சுமி அவர்களால் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப் பெற்ற இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னிச்சையாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்வுக்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.*

**(***பேரா.முனைவர்.***மு.பாண்டி)**

**நெறியாளர்**

# நன்றியுரை

**‘நச்சினார்க்கினியர் உரையில் சமூக வெளிப்பாடு’** எனும் தலைப்பில் ஆய்வு செய்வதற்கு இசைவளித்த **அழகப்பா பல்கலைக் கழகத்திற்கும் துணைவேந்தர்** அவர்களுக்கும் முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வினை செம்மையுற எழுதுவதற்குப் பல்லாற்றானும் நெறிப்படுத்திய எனது நெறியாளரும் துறைத்தலைவருமான முனைவர் **மு.பாண்டி** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

இவ்வாய்வினை எழுத பொருளுதவி அளித்த **(யூ.ஜி.சி.) இராஜீவ்காந்தி நிதிநிறுவனத்திற்கு** என் நன்றியைச் சமர்ப்பிக்கிறேன்.

ஈரைந்து மாதங்கள் சுமந்து என்னை ஈன்று இறைவனடி சேர்ந்த **தாய்**க்கு என் நன்றியை காணிக்கையாக்குகின்றேன். **தந்தை**க்கு நன்றிகள் பல உரித்தன.

ஆய்வுத் தரவுகளைத் திரட்டுவதற்கு உதவிபுரிந்த **அழகப்பா பல்கலைக்கழக மைய நூலகம், சேலம் பெரியார் பல்கலைக்கழக நூலகம், சென்னை கன்னிமாரா,** மற்றும் **மறைமலையடிகள் நூலகம், உ.வே.சா. நூல்நிலையம், புதுக்கோட்டை ஞானாலயா கிருஷ்ணமூர்த்தி நூலகம், டெல்லி தமிழ்ச்சங்கம்,** மற்றும் **டெல்லி சாகித்ய அகாடமி நூலகம், காரைக்குடி** மற்றும் **கோட்டையூர் கிளை நூலகம்** ஆகிய நூலகங்களுக்கும் நூலக அலுவலர்களுக்கும் என் நன்றிகள் உரியன.

இவ்வாய்வினை நன்முறையில் எழுத பல நிலைகளிலும் உதவியாகவும், ஊக்கமாகவும் இருந்த எனது குடும்பத்தார்களான, மாமா திரு.**க.மாரியப்பன்**, அத்தை திருமதி.**சீ.லெட்சுமி**, என் கணவர் திரு.**மா.சரவணன்**, எனது தம்பிகள் **மா.மணிவண்ணன், மா.மதிவாணன்,** எனது அன்புப் புதல்வர்கள் **மா.ச.நிரஞ்ஜன், மா.ச.தீபாஞ்ஜன்** அனைவருக்கும் எனது அன்பை இங்கு பதிவு செய்யக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

இவ்வாய்வினைச் சிறப்புறச் செய்வதற்கு உதவியாக இருந்த எனது உறவினர்கள் மாமா திரு.**சந்திரவாணன் நளாயினி**, அத்தை திருமதி.**சரஸ்வதி பழனியப்பன்,** சகோதரிகள் திருமதி.**முத்தாத்தாள் முருகேசன்**, திருமதி.**கஸ்தூரி சுரேஷ்**, திருமதி.**கலா பாலா** மற்றும் தங்கை **ப.பிரவீனா** அனைவருக்கும் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

இறுதியாக இருந்தாலும் செம்மையாக ஆய்வு செய்வதற்கு உதவிய நண்பர்களுக்கும் குறிப்பாக திருமதி.**பா.கவிதா இராஜேந்திரன்** அவர்களுக்கும், ஆய்வேட்டை உரிய காலத்தில் கணினியில் தட்டச்சு செய்து தந்த அருண் கணினியகம் நிறுவனத்தார் திருமதி.**சாந்தி பாண்டியன்** அவர்களுக்கு என்றும் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

நன்றியுடன்

**மா.லெட்சுமி**

## உள்ளுறை

**இயல் மூன்று**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகம். | - | அகநானூறு |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலித். | - | கலித்தொகை |
| கற்பு. | - | கற்பியல் |
| குறிஞ்சிப். | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| குறள். | - | திருக்குறள் |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| செய். | - | செய்யுளியல் |
| சொல். | - | சொல்லதிகாரம் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| நெடுநல். | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பட்டினப். | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பி.ம். | - | பிறர் விளக்கம் |
| புறத். | - | புறத்திணையியல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |

| | | |
|---|---|---|
| பொருநர். | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மணி. | - | மணிமேகலை |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| முருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| வேற்றுமை மயங்கு. | - | வேற்றுமை மயங்கியல் |
| வை.மு.கோ. | - | வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியார் |

# நச்சினார்க்கினியர் உரையில் சமூக வெளிப்பாடு

## முன்னுரை

தமிழில் பழைமையான படைப்புகள் செய்யுள் வடிவிலேயே இருந்தன. செய்யுள் வடிவிலான பழந்தமிழ் நூல்களுக்குப் பிற்காலத்தில் விளக்கம் எழுதியவர்கள் உரையாசிரியர்கள். அவர்கள் எழுதிய விளக்கம் உரைகள் எனப்படும். 'உரை என்பதற்குச் சொல், சொற்பொருள், அறிவுரை, பழிப்புரை, பொன், நூல், புகழ், மாற்று, எழுத்தின் ஒலி, புகழுரை, விரிவுரை, விடை, ஆசிரிய வசனம்' போன்ற பல பொருளைக் கழகத் தமிழ் அகராதி கூறுகின்றது.

## உரைகளின் தோற்றம்

நூல்கள் அவை தோன்றிய காலத்தில் விளங்கும் நிலையில் இருந்தன. 'உரையும் விளக்கமும் இல்லாத மூலநூல்களே அனைவரும் கற்று மகிழும் இயல்பினவாய் இருந்தன' என்பார் மு.வை.அரவிந்தன். இந்நிலை மாற்றம் பெற்று நூல்கள் தோன்றித் தலைமுறைகள் பல கடக்கும் போது அந்நூலை முற்றிலும் புரிந்து கொள்ள இயலாமல் போய்விடக்கூடும். அக்காலக் கட்டத்தில் தான் மூல நூல்களுக்கு உரை எழுத வேண்டிய தேவை ஏற்பட்டது. மூலநூல்களை நன்கு கற்றறிந்த சான்றோர் பலர் உரை எழுத முற்படுகின்றனர்.

தமிழ் இலக்கிய வரலாற்றில் உரையாசிரியர்களின் காலம் மிகச் சிறந்ததாகும். அவர்கள் தொன்மையான இலக்கிய, இலக்கணங்களுக்கு உரை கண்டமை மொழியின் ஆக்கத்திற்குச் சிறந்த அடிப்படையாகும்.

தமிழில் தோன்றிய உரையாசிரியர்களுள் பல நூல்களுக்கு உரை வரைந்த பெருமைக்குரியவர் நச்சினார்க்கினியர். இலக்கணம், இலக்கியம் ஆகிய இரண்டிற்கும் உரை கண்டுள்ளார். தமிழ் இலக்கியப் பரப்பில் தனக்கென தனி முத்திரையை ஆழமாகப் பதித்துக் கொண்டவர்.

நச்சினார்க்கினியர் எழுதிய உரைகளைப்பற்றி பழம்பாடல் ஒன்று சான்று பகர்கின்றது. அது,

**“பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும்**
**ஆரக் குறுந்தொகையுள் ஐந்நான்கும் சாரத்**
**திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்**
**விருத்திநச்சி னார்க்கினிய மே”**

என்பதாகும். இவற்றுள் குறுந்தொகை தவிர ஏனைய உரைகள் கிடைத்துள்ளன. சங்க இலக்கியத்துள் பத்துப்பாட்டிற்கு எழுதிய உரையில் சமூகம் குறித்த பதிவுகளை வெளிக்கொணர்வதாக இவ்வாய்வு அமைகின்றது.

**ஆய்வுத் தலைப்பு**

**“நச்சினார்க்கினியர் உரையில் சமூக வெளிப்பாடு”** என்பது இவ்வாய்வுத் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

உரையாசிரியர்கள் மூல நூலுக்குப் பொருள் காணும் நிலையில் விளக்க முறையிலும் தருக்கமுறையிலும் மூலநூலை முன்னெடுத்துச் செல்கின்றனர். சொல்லுக்குச் சொல் பொருள் காண்பதுடன், காரணம் காட்டுதல், எடுத்துக்காட்டு தருதல், ஒப்புமைப்பகுதி சுட்டடல், சிறப்பு விளக்கம் தருதல், வரலாறு கூறுதல், திறனாய்வு செய்தல், சமகால வழக்கினைச் சுட்டுதல், ஆய்வுக் களங்களை முன்வைத்தல் முதலான பன்முகப் பார்வை கொண்டவர்கள் உரையாசிரியர்கள். அவ்வகையில் நச்சினார்க்கினியர் உரையில் காணலாகும் சமூகக் கருத்துக்களைக் கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**அணுகுமுறை**

நச்சினார்க்கினியரின் உரைகளை விளக்கிக்காட்ட விளக்கவியல் அணுகுமுறையும் (Descriptive Approach), அவரின் உரைகளில் சமுதாயத்தைக் கண்டறிய சமுதாயவியல் அணுகுமுறையும் (Sociological Approach),

அவர் காலத்து அறவியல் கூறுகளை நோக்க அறவியல் அணுகுமுறையும் (Ethical Approach) இவ்வாய்விற்குறிய அணுகுமுறைகளாக இடம்பெறுகின்றன.

**ஆய்வு எல்லை**

நச்சினார்க்கினியர் எழுதிய உரை நூல்களுள் ஒன்றான பத்துப்பாட்டு மட்டும் ஆய்வு எல்லையாக அமைகின்றது.

**ஆய்வுத் தரவுகள்**

இவ்வாய்விற்குப் பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை வழியாகப் பெறப்பட்ட தரவுகள் முதன்மைச் சான்றுகளாக அமையும். பத்துப்பாட்டு தொடர்பான திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், இதழ்கள், கருத்தரங்கக் கட்டுரைகள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாக மேற்கொள்ளப்பெறும்.

**கருதுகோள்**

இலக்கண, இலக்கிய நூல்களுக்கு உரை எழுதியோர் படிப்போர் மனங்கொள்ளத்தக்க வண்ணம் பலவற்றை எடுத்துக்காட்டுகளாகத் தந்துள்ளனர். நச்சினார்க்கினியர் எடுத்துக் காட்டுகளைக் காட்டும் பொழுது தம் உரையில் சமூகத்தை வெளிப்படுத்தி யிருக்கக்கூடும் என்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வுப் பகுப்பு**

‘***நச்சினார்க்கினியர் உரையில் சமூக வெளிப்பாடு***’ எனும் இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக மூன்று இயல்களைக் கொண்டமைகின்றது. அவையாவன;

1. நச்சினார்க்கினியர் வாழ்வும் பணியும்
2. பத்துப்பாட்டு உரையில் சமூக வெளிப்பாடு
3. நச்சினார்க்கினியரின் பத்துப்பாட்டு உரைச் சிறப்புகள்

என்பனவாகும்.

**முதல் இயல்**

**‘நச்சினார்க்கினியாரின் வாழ்வும் பணியும்’** எனும் முதலாமியல், அவரின் பெயர், மரபு, சமயம், சமயப்பொறை, நாடு, காலம், உரை எழுதிய நூல்கள், முதலில் உரை வரைந்த நூல், நச்சினார்க்கினியரின் புகழ் போன்றவற்றை விளக்குவதாக அமைகின்றது.

**இரண்டாம் இயல்**

உரையாசிரியர்களின் உரைகளில் தம் காலச் சமூகத்தையும் வெளிப்படுத்தியுள்ளனர். இலக்கியம் படைக்கப்பெற்ற காலம் ஒன்றாகவும் உரை எழுதப்பெற்ற காலம் வேறாகவும் அமைவதால் மாறிவிட்ட சமூக, அறிவியல், பொருளாதாரச் சூழல்கள், உரையாசிரியர்களின் சார்புத் தன்மை ஆகியவை உரைகளில் படிந்திருப்பதைக் காணமுடிகிறது. நச்சினார்க்கினியர் அக்காலச் சமூக நிலைகளான அரசு, பட்டம், ஊர், பெயர்கள், ஆடை, அணிகலன்கள், இருப்பிடம், தொழில் பெயர்கள், பழக்க வழக்கம், நம்பிக்கை போன்றவற்றைத் தனது உரையில் பதிவு செய்துள்ளார். இத்தகைய சமூக நிலையினை விளக்குவதாக இவ்வியல் அமையப்பெறுகின்றது. சான்றாக, பிள்ளைகளைப் பெற்றால் வளையல் அணியும் பழக்கம் இல்லாத நிலையினை நச்சினார்க்கினியர் தமது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

**“புள்கை போகிய புன்றலை மகாரோடு”  (மலைபடு.253)**

என்ற அடிக்கு உரை எழுதுகின்ற போது, “வளைகையினின்றும் போதற்குக் காரணமான சிவந்த தலையினையுடைய பிள்ளைகளோடே, பிள்ளையைப் பெற்றால் வளையிடாராகலின் வளை போதற்குப் பிள்ளைகள் காரணமாயின” என்று விளக்கம் அளிக்கின்றார். இதன் வழி நச்சினார்க்கினியர் காலத்தில் பிள்ளையைப் பெற்றெடுக்கும்போதும் பெற்ற பின்னரும் பெண்கள் வளையல் அணியாத பழக்கத்தினை அறியமுடிகின்றது. ஒரு பெண் தாய்மை அடைந்த ஏழாவது அல்லது ஒன்பதாவது மாதத்தில் வளைகாப்பு (சீமந்தம்) என்ற சடங்கினை நடத்துவர்.

பெண்ணுக்குக் கைகளில் வளையல் அணிவதால் அவளின் மனநிலை மகிழ்ச்சியாக இருக்கும். குழந்தைக்கும் இவ்வளையல் ஓசையினால் கேட்கும் திறன் அதிகரிக்கும். வளையல் கையினின்றும் போதற்குரிய அறிவியல் காரணம், பிள்ளைப்பேற்றின் போது தாயிக்கு அவ்வளையல் கைகளில் குத்தி இரத்தக்காயம் ஏற்பட்டுவிடும் என்பதற்காக வளையல்களைக் கலட்டியிருக்கக்கூடும். குழந்தை பிறந்தபின் வளையல் குழந்தையின் மீது குத்தாமல் இருக்க வேண்டும் என்பதற்காக வளையல் போடாத நிலை ஏற்பட்டிருக்கக்கூடும்.

**விருந்தோம்பல்**

மகளிர் தம் இல்லத்திற்கு வரும் விருந்தினரைத் தத்தம் பிள்ளைகளுக்கு அண்ணன், அம்மான் போன்ற உறவுமுறைகளைச் சொல்லி உபசரித்ததனைத் தமது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

**“மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவீர்” (மலைபடு.185)**

என்ற அடிக்கு, ‘தத்தம் பிள்ளைகளுக்கு உறவுமுறை சொல்லித் தடுக்கையினாலே மனைகடோறும் பெறுகுவீர். அண்ணன், அம்மான் என்றாற் போல்வன முறை’ என்று பொருள் கூறுகின்றார். இவற்றுள் ‘அம்மான்’ என்ற உறவுமுறைப் பெயருக்குத் தொ.பரமசிவன் அவர்கள், “அண்ணன் மனைவி அண்ணியானது போல, மாமன் மனைவி மாமி ஆயிருக்க வேண்டும். அம்மையுடன் பிறந்தவனைக் (தாய்மாமன்) குறிக்கும் சொல்லாக ‘அம்மான்’ வழங்குகிறது. இச்சொல் இன்றும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களிடம் வழங்கி வருகிறது” என்று விளக்கம் அளிக்கிறார். இன்று அம்மான் என்ற சொல் வழக்குப் பெரும்பான்மை நாட்டுக்கோட்டைச் செட்டியார்களிடமும் சிறுபான்மை பிற இனத்தாரிடமும் காணப்படுகிறது. மேலும், விருந்தினரை வழியனுப்பும் போது, விருந்தினரின் பின்னே காலின் ஏழடி வந்து வழியனுப்பும் பழக்கம் இருந்தமையைத் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

**"காலின் ஏழடி பின் சென்று"  (பொருநர்.166)**

என்ற அடிக்கு, 'தான் காலாலே ஏழடி பின்னே வந்து, ஏழடி வருதல் மரபு; ஏழிசைக்கும் வழிபாடு செய்தானாகக் கருதுதலின்' என்று உரை விளக்கம் தருகின்றார். இதன்வழி விருந்தினரின் பின் ஏழடி சென்று வழியனுப்பும் மரபு இவர் காலத்திலும் இருந்தமைப் புலனாகின்றது.

**மூன்றாம் இயல்**

விளக்கம் கூறுதல், கொண்டு கூட்டிப் பொருள் கூறுதல், நூலாசிரியரைப் போற்றுதல், பிறர் உரை கூறுதலும் மறுத்தலும், மேற்கோள் காட்டுதல், பாடவேறுபாடு சுட்டல், பல்கலை அறிவு, உரைவேறுபாடு சுட்டல், பிற உரையாசிரியரிடமிருந்து வேறுபடும் தன்மைகள் போன்றவற்றை விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

**"தடவு நிலைப் பலவின் முழுமுதல் கொண்ட**
**சிறுசுளைப் பெரும் பழம் கடுப்ப"  (பெரும்பாண்.77–78)**

என்ற அடிகளுக்கு உரை கூறுகின்றபோது, 'பெருமையையுடைய நிலையினையுடைய பலாவினடியிலே குலை கொண்ட சிலவாகிய சுளையினையுடைய பெரிய பழத்தை யொப்ப நல்ல பழம் சுளை மிக இராதென்றார்' சுவை மிகுதியாக உடைய பலாப்பழத்தில் சுளைகள் மிகுதியாக இருப்பதில்லை என்று நச்சினார்க்கினியர் விளக்கம் கூறுவதிலிருந்து அவரின் பயிரியல் பற்றிய நுண்ணறிவு வெளிப்படுகிறது.

**"வெள்ளி வள்ளி வீங்கிறைப் பணைத் தோள்"  (நெடுநல்.36)**

என்ற அடிக்கு, 'வெளுக்கப்பட்ட சங்கு வளையல்' என நச்சினார்க்கினியர் உரை கொண்டுள்ளார். இவ்வாறே, பொ.வே.சோமசுந்தரனாரும் உரை கூறுகின்றார். ஆனால், 'வெள்ளியால் இயன்றவளை' எனப் பொருள் கொள்கிறார் வை.மு.கோ. மூன்றாம் வேற்றுமை உருபு பயனும் உடன் தொக்கத் தொகை எனக் கொண்டால் வெள்ளியால் இயன்ற வளை எனும்

கருத்து ஏற்புடையதாக இருப்பினும், சங்க காலத்தில் சங்கு வளையல்கள் மிகுதியான பயன்பாட்டில் இருந்தமை கருதி நச்சினார்க்கினியர் சங்கு வளையல் எனக் குறிப்பிட்டிருக்கலாம். எனவே, பயன்பாட்டில் அடிப்படையில் பார்க்கும் பொழுது 'வெள்ளி வள்ளி' என்பதற்கு 'வெளுக்கப்பட்ட சங்கு வளையல்' எனும் நச்சினார்க்கினியர் உரை பொருத்தமாக அமைகின்றது எனலாம்.

**ஆய்வு முடிவுரை**

ஆய்வின் மூலம் பெறப்பட்ட முடிவுகள் முடிவுரையில் அளிக்கப்பெறும். ஆய்வுக்குப் பயன்படுத்தப்பெற்ற நூல்கள், ஆய்வேடுகள், இதழ்கள், ஆய்வுக் கட்டுரைகள் போன்றவை துணை நூற்பட்டியலில் இடம்பெறும்.

**முன்னுரை**

*பிற்காலச் சோழர்கள் காலமான கி.பி.11 ஆம் நூற்றாண்டு முதல் 14 ஆம் நூற்றாண்டு வரையிலான காலக்கட்டத்தில் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் தோன்றியவர்கள் உரையாசிரியர்கள். தமிழில் தோன்றிய உரையாசிரியர்களுள் பல நூல்களுக்கு உரை வரைந்த பெருமைக்குரியவர் நச்சினார்க்கினியர். இலக்கணம், இலக்கியம் ஆகிய இரண்டிற்கும் உரை கண்டுள்ளார். அளவால் மட்டுமின்றித் தரத்தாலும் மிகச் சிறந்த உரைகளை அளித்தவராக அறிஞர் பெருமக்களால் போற்றப்பெறுகின்றார். ‘உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினியர்’ என்று இலக்கணக்கொத்து ஆசிரியரும், செந்தமிழ்மாமுகில்வள்ளல் என்று மறைமலையடிகளும் இவரை வியந்து பாராட்டுவர். மூலநூல் இலக்கியங்களை நுனிதறிந்து பொருள் கூறுவதுடன் தமிழ் நூல்களின் பல பாடல்களை மேற்கோள்களாகவும் ஒப்புமைக் கூறுகளாகவும் எடுத்தாள்பவர். தமிழ் இலக்கியப் பரப்பில் தனக்கென தனித்த முத்திரையை ஆழமாகப் பதித்துக் கொண்டவர். இத்தகு சிறப்புடைய நச்சினார்க்கினியரின் வாழ்வியல் மற்றும் பணிகளை ஆராயும் வகையில் இவ்வியல் அமைகிறது.*

**பெயர்**

*நச்சினார்க்கினியர் என்பது இறைவன் பெயர்களுள் ஒன்று என்பர். கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசர் திருநாகேச்சரப் பதிகத்தில்,*

***“கச்சைசே ராவர் போலுங் கறையணி மிடற்றர் போலும்***
***பிச்சைகொண் டுண்பர் போலும் பேரரு ளாளர் போலும்***
***இச்சையான் மலர்க டூவி யிரவொடு பகலுந் தம்மை***
***நச்சுவார்க் கினியர் போலு நாகவீச் சுரவ னாரே”[1]***

*என்று பாடியுள்ளார். “இதன்கண் வரும் ‘நச்சினார்க்கினியர்’ எனும் தொடர் ‘இறைவன் அடியார்க்கு அடியான்’ என்பது போல் ‘நச்சுவார்க்கு (விரும்புவார்க்கு) இனியன்’ என்றும் வழங்கப்பட்டிருக்கலாம்”[2] என்பர்.*

"'நப்பின்னை', 'நக்கீரன்' என்பனவற்றை 'நம்பின்னை நக்கீரன்' எனப் பிரித்து, நம் என்பது 'விரும்பப்படும் தன்மை வாய்ந்த என்ற பொருளில் வந்த உபசர்க்கம்' என்பர் மேலோர். இவற்றைப் போலவே, நாம் 'நச்சினார்க்கினியர்' என்பதை 'நம்சின்னார்க்கு இனியன்' எனப்பிரித்து 'விரும்பப்படும் தன்மை வாய்ந்த (ஆண்டினும் அறிவினும் அநுபவத்தினும்) சிறியோர்க்கு நலம்புரிபவன்' என்று பொருள் கொள்ளல் இழுக்கன்று"[3] என்பர் நச்சினார்க்கினியான் தொகுதி புத்தகத்தின் உரிமையாசிரியர்.

கி.பி.18ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சிவஞான முனிவர் தம் காஞ்சிபுராணத்துள்,

**"பச்சிலை பழம்போ தேனும் பறித்திட்டுப் பத்தி செய்வோர்க்**
**கெச்சமி லிருமைப் பேறு மளித்தரு ளிறைவா போற்றி**
**முச்சக முதலே போற்றி முலைச்சுவட் டணியாய் போற்றி**
**நச்சினார்க் கினியாய் போற்றி யெனத்துதி நவிலுங் காலை"[4]**
**(காஞ்சிபுராணம், சந்ததானப்படலம்.11)**

இறைவனை நச்சினார்க்கினியாய் என்று பாடிப்பரவியுள்ளார்.

**"தூய ஞான நிறைந்த சிவச்சுடர்**
**தானே யாகிய தன்மை யாளன்**
**நவின்ற வாய்மை நச்சினார்க் கினியன்"[5] (உரைச்சிறப்புப் பாயிரம்)**

என்று போற்றப்படுகின்றது. "சிவச்சுடர் என்று போற்றப்படுதலாலும் முழுமுதற் கடவுள் சிவபெருமானை நச்சினார்க்கினியன் என்று அழைப்பதலும் அப்பெயரினையே இவருக்கு இட்டனர்"[6] என்பர்.

இரா.மோகன் நச்சினார்க்கினியர் பெயரைப் பற்றிக் குறிப்பிடும் போது, "சிவபெருமானுக்கு நச்சினார்க்கினியர் என்ற பெயர் வழக்கு இருந்திருத்தல் கூடும் என்றும், அப்பெயரே புகழ் பெற்ற இவ்வுரையாசிரியர்க்கு இயற்பெயராய் அமைந்தது என்றும் உணரலாம்"[7] என்று குறிப்பிடுவர்.

நச்சினார்க்கினியரின் பெயரைப் பற்றிக் கூறுகின்ற போது, "இதில் பெயராக வந்திலது இறைவன் இயலாகவே வந்துளது என்பது எண்ணத்தக்கது.

அப்பரடிகளுக்குக் காலத்தால் மிகப்பிற்பட்ட சிவஞானமுனிவர் 'நச்சினார்க்கினியாய் போற்றி' என்றதும் இயல்விளிப்பெயரேயாம் பெயரன்று என்பதறிக. இவற்றால் இவர் இயற்பெயர் வேறொன்றாக இருந்தது. இவர் தம் உரைச் சிறப்பறிந்தவர்கள் இப்பெயரை வழங்கியிருத்தல் வேண்டும். அதுவே இயற்பெயர் போல் அமைந்துவிட்டது''[8] என்று கூறுவர்.

தாம் உரையெழுதிய பத்துப்பாட்டின் ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் 'மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று' எனும் தொடராலும் 'நவின்ற வாய்மை நச்சினார்க்கினியன்' என்று உரைச்சிறப்புப் பாயிரம் குறிப்பிடுவதாலும், அறிஞர்களின் கருத்துக்களின் வழியும் இவ்வுரையாசிரியரின் இயற்பெயர் நச்சினார்க்கினியன் என்பது தெளிவாகிறது.

**நச்சர் - நச்சினார்க்கினியர்**

திருக்குறளுக்கு முற்காலத்தில் உரை எழுதிய பதின்மரில் 'நச்சர்' என்பவரும் ஒருவர். நச்சர் என்பவர் நச்சினார்க்கினியரே என்றும், அவர் செய்த திருக்குறள் உரை இன்று மறைந்து போனது என்றும் சிலர் கூறி வருகின்றனர். இருவர் பெயரும் ஒன்றாக இருப்பதே இதற்குக் காரணம் என்பர். இக்கருத்து உண்மையன்று என்பதற்கு மு.வை.அரவிந்தனும், இரா.மோகனும் பின்வரும் காரணங்களைக் கூறுகின்றனர்.

1. பரிமேலழகர் திருக்குறள் முதல் பத்து உரையாசிரியர்களில் இறுதியில் தோன்றியவர். பத்தாவது உரையாசிரியர் அவரே. அவருக்குமுன் நச்சர், மணக்குடவர் முதலிய ஒன்பது உரையாசிரியர்களும் இருந்தனர். நச்சினார்க்கினியர் பரிமேலழகருக்குப் பிற்பட்டவர். நச்சினார்க்கினியர் பரிமேலழகரை மறுக்கும் இடங்கள் உண்டு. ஆதலின், பரிமேலழகருக்கு முன் தோன்றி, உரை எழுதிய நச்சர் வேறு; பரிமேலழகரை மறுக்கும் நச்சினார்க்கினியர் வேறு என்பது பெறப்படுகிறது.

*2.* நச்சினார்க்கினியர் இயற்றிய உரை நூல்களைக் குறிப்பிடும் பழம்பாடலும் உரைச் சிறப்புப்பாயிரமும் நச்சினார்க்கினியர் திருக்குறளுக்கு உரை இயற்றியதாகக் குறிப்பிடவில்லை.

*3.* நச்சினார்க்கினியர், இயற்றிய உரைகளில் தமது உரைகளைப் பற்றிக் குறிப்பிடுவதுண்டு. எவ்விடத்தும் அவர், திருக்குறளுக்குத் தாம் உரை இயற்றி இருப்பதாய்க் குறிப்பிடவில்லை.

*4.* திருக்குறளை எடுத்தாலும் இடங்களில் குறட்பாவுக்கு வேறு உரையும் புதுவிளக்கமும் தரும் இடத்திலும் நச்சினார்க்கினியர் திருக்குறளுக்கு உரை எழுதிய குறிப்பு எதுவும் இல்லை.

*5.* இனிப் பல செய்யுட்கண் வருமாறு சிந்தாமணியுள் யாம் கூறிய உரையான் உணர்க எனச் சிந்தாமணிக்கு உரை செய்தமையைக் குறிப்பிடுவது போன்று திருக்குறளுக்கு உரை எழுதியதாகக் குறிப்பிடவில்லை.

**மரபு**

நச்சினார்க்கினியர் பாரத்துவாச கோத்திரத்தார் என்பதனைத் தொல்காப்பியம், பத்துப்பாட்டு ஆகியவற்றின் ஒவ்வொரு பகுதி இறுதியிலும் ‘மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று’ எனும் தொடர் இடம் பெற்றிருத்தலால் அறியமுடிகிறது. மேலும்,

**“வண்டிமிர் சோலை மதுரா புரிதனில்**
**எண்டிசை விளங்க வந்த ஆசான்**
**பயின்ற கேள்விப் பாரத் துவாசன்**
**நான்மறை துணிந்த நற்பொருள் ஆகிய**
**தூய ஞானம் நிறைந்த சிவச்சுடர்**
**தானே யாகிய தன்மை யாளன்**
**நவின்ற வாய்மை நச்சினார்க்கினியரின்”**[9]

என்ற பாயிரப்பகுதியும் இவரைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. நச்சினார்க்கினியர் பாரத்துவாசக் கோத்திரம் என்பதால் அந்தணர் மரபைச் சேர்ந்தவர் என்பதை அறியமுடிகிறது.

“சங்ககாலக் கபிலர், பரணர், பெருங்கௌசிகனார், உருத்திரங் கண்ணனார் போன்றவர்கள் அந்தணர் மரபினர்; ஏனைய புலவரால் பாராட்டப்பட்ட பெரும்புலவர்களாய்த் திகழ்ந்தனர். அங்ஙனமே பிற்காலத்தில் இந்நச்சினார்க்கினியரும் திகழ்ந்தனர் எனக் கருதலாம்”[10] என்பர் மா.இராசமாணிக்கனார்.

“பாரத்துவாச குலம் வைணவர், ஸ்மார்த்தர், மாத்துவர் ஆகிய மூவரிடத்தும் காணப்படுகிறது. இம்மூவருள் நச்சினார்க்கினியர் அத்வைதிகக் கொள்கையைப் பின்பற்றும் ‘ஸ்மார்த்தர்’ எனும் பிரிவினைச் சார்ந்தவர் என்பதற்குத் தொல்காப்பியப் பொருளதிகார உரையில் குறிப்புக் காணப்படுகிறது”[11] என்பர். சான்றாக,

**“வேண்டிய கல்வி யாண்டு மூன்றிறவாது”[12]**

என்ற நூற்பாவுக்குக் கல்வி குறித்துப் பிரியும் பிரிவின் கால அளவு மூன்று யாண்டுக்கு மேல் மிகாது என்பது பொருளாகும். இக்கருத்தினையே இளம்பூரணரும் உரைத்தார். நம்பியகப்பொருள் காரரும் ‘ஓதற் பிரிவு ஒரு மூன்றியாண்டே’ என்று கூறினார். நச்சினார்க்கினியர் கல்விக்காகப் பிரியும் பிரிவிற்குக் கால எல்லை கூற உடன்படாராய் வேறு பொருள் உரைத்தார். இறவாது என்ற சொல்லை இரண்டிடத்தும் கூட்டி ‘கல்வி வேண்டிய யாண்டு இறவாது’ என்றும் ‘மூன்றிறவாது’ என்றும் கொண்டார். மேலும்,

“துறவறத்தினைக் கூறும் வேதாந்தம் முதலிய கல்வி வேண்டிய யாண்டைக் கடவாது; அக்கல்வி எல்லாம் மூன்று பதத்தைக் கடவாது ‘மூன்று பதமாவன அதுவென்றும் நீ என்றும் ஆனா என்றும் கூறும் பதங்களாம். அவை பரமும் சீவனும் அவ்விரண்டும் ஒன்றாதலும் ஆதலின் இம்மூன்று பதத்தின் கண்ணே தத்துவங்களைக் கடந்த பொருளை உணர்த்தும் ஆகமங்களை யெல்லாம் விரியுமாறு உணர்ந்து கொள்க என்று அவர் எழுதிச் சென்றார். அவருடைய உரை ‘தத்துவமஸி’ என்ற சொற்றொடரைக் குறிக்கிறது. ‘தத்துவமஸி, மகாவாக்கியம், சாந்தோக்ய உபநிஷத்தில்

தந்தை மகனுக்குச் சொல்வதாக அமைந்திருக்கிறது. இது எல்லோர்க்கும் பொதுவானதும் அத்வைதிகளோடு மிகுந்த தொடர்பு கொண்டதுமாகும். விசிட்டாத்துவைதிகளான வைணவர்களும் அத்வைதிகளான மாத்துவர்களும் ஸ்ரீமத் நாராயணனையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடுபவர்கள். அத்வைதிகளான ஸ்மாத்தர்கள் மகேசுவர பூசை செய்பவர்கள். வடமொழியில் ஈசுவர நாமம் சிவனுக்கே உரியதாகும்"[13] என்பார் மு.அண்ணாமலை.

**சமயம்**

நச்சினார்க்கினியர் என்ற பெயர் சிவனின் பெயராகக் கூறப்படுகிறது. 'நச்சுவார்க்கினியர் போலும் நாகவீச்சரவனாரே' என்று அப்பரும், 'நச்சினார்க்கினியாய் போற்றி' என்று சிவஞானமுனிவரும் சிவனை வாழ்த்திப் பாடுகின்றனர். 'தூய ஞான நிறைந்த சிவச்சுடர்' என்று இவரது உரைச் சிறப்புப்பாயிரம் இவரைக் குறிப்பிடுவதாலும் இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதை அறியமுடிகிறது.

இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதற்கு, "தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில், கண்டன், கந்தன், கம்பன், மன்றன் (நூன்.25) என்றும், திருச்சிற்றம்பலம், பெரும்பற்றப்புலியூர் (மொழி.12) என்றும் குறிப்பிடுகின்றார். திருவாசகம், திருக்கோவையார், திருவுலாப்புறம் முதலிய சைவ நூல்களிலிருந்து மேற்கோளை எடுத்தாண்டு இலக்கண, இலக்கிய தத்துவப் பொருள்களை எல்லாம் விளக்கியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. இவர்தம் சைவப் புலமையினை, திருமுருகாற்றுப்படை உரையிலும் சமணக் காப்பியமாகிய சீவகசிந்தாமணி உரையிலும் (பா.எண்.362.1141) காணலாம். 'ஆறெழுத்து அடங்கிய அருமறைக்கேள்வி' (திருமுருகு.186) என்ற அடிக்கு ஆறெழுத்தினைத் தன்னிடத்தே அடக்கியிருக்கின்ற கேட்டற்கரிய மறைய உச்சரிக்கப்படும் மந்திரத்தை, அது 'நமோகுமாராய' என்பதாம் எனப் பொருள் கூறுகிறார். ஆதலின், இவர் சைவ சமயத்தைச் சார்ந்த சிவச்சுடர் என்பது நன்கு தெளிவாகிறது. கிளவியாக்கத்து 33ஆவது நூற்பா உரையில் 'பன்னிருகையும்

பாற்படவியற்றி' (திருமுருகு.118), 'முருகற்கு கை பன்னிரெண்டும்' எனவும், 'முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே' (எச்.63) எனவரும் நூற்பா உரையில், முருகாற்றுப்படையுள், 'கச்சினன், கழலினன், செச்சைக்கண்ணியன்' (208-217) எனவும் எடுத்துக்காட்டுவர். திருமுருகாற்றுப்படையின் மேல் இவருக்கிருந்த ஈடுபாடு நன்கு புலனாகும். இவை யாவும் இவர் சைவர் என்பதை வலியுறுத்துகின்றன"[14] என்று ச.குருசாமி குறிப்பிடுகின்றார்.

**"ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப"   (முருகு.254)**

என்ற அடிக்கு, 'விசும்பும் தீயும் வளியும் நீரும் நிலனுமாகிய ஐவருள் தீ தன் அங்கையலே ஏற்ப, சதாசிவனும் மயேச்சுரனும் உருத்திரனும் அரியும் அயனும் பூதங்கட்குத் தெய்வமாகலின், ஐவரென்றார்; ஐவருளொருவன் என்றது உருத்திரன் தெய்வமாகிய தீயை, அவன் அங்கையேற்ப வென்றது, இறைவனிடத்தின்றும் இந்திரன் வாங்கிய கருபத்தினை முனிவர் வாங்கித் தமக்குத் தரிக்கலாகாமையின் இறைவன் கூறாகிய முத்திலக்குண்டத்தினை கூறிற்று'[15] என உரை எழுதியுள்ளார். இவற்றின் வழி சைவ சமயத்தின் மேல் இவருக்கு இருந்த பற்றினை அறியமுடிகிறது. ஆதலால் இவர் சைவராக இருக்கக்கூடும் எனலாம்.

**சமயப்பொறை**

நச்சினார்க்கினியர் பிறப்பால் சைவர் என்று அழைக்கப்பட்டாலும் அனைத்துச் சமயங்களையும் போற்றக்கூடிய பண்பாளராகக் காணப்படுவதை இவரது உரைகள் வழி அறிந்து கொள்ள முடிகிறது. "தெய்வத்தன்மையாற் சூழ்ந்த ஒளியினையுடைய வாடாத பூக்களையும் இதழ் குவியாத கண்ணினையும் அவியாகிய உணவினையுமுடைய அச்சம் பொருந்திய மாயோன் முருகன் முதலிய தெய்வங்கட்கு"[16] (மதுரைக்.456-458) என்ற உரையில் சுட்டுகின்றார். தொல்காப்பியச் சிறப்புப்பாயிர உரையில், 'நிலங்கடந்த நெடுமுடி யண்ணலை நோக்கி உலகந் தவஞ்செய்து வீடுபெற்ற மலையாதலானும் எல்லோரானும் அறியப்படுதலானும் வேங்கடத்தை எல்லையாகக் கூறினார்' என்றும்

*பொருளதிகார அகத்திணையியலில் 33ஆம் நூற்பா உரையிலும் 'மலய மாதவன் நிலங்கடந்த நெடுமுடியண்ணல்' என்றும் திருமால் வீற்றிருக்கும் மலையினையும் திருமாலையும் பற்றிக் குறிப்பிடுகின்றார்.*

*மொழி மரபில் (13) "கண்ணன் எழுத்துக்களின் அகரமாகின்றேன்"*[17] *எனக் கூறியவற்றானும் என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார். மதுரைக்காஞ்சியுள், "கண்ணன் எப்பொருளும் தானாயிருக்கின்றபடியைக் காட்டி ஸ்ரீ கீதை யருளிச்செய்து எல்லோரையும் போதித்தாற்போல"*[18] *(மதுரைக்.763) என்று கூறுகின்றார்.*

*பெரும்பாணாற்றுப்படை உரையில், திருமாலின் நூற்றிஎட்டு திருப்பதிகளுள் ஒன்றான "திருவெஃகாவினை"*[19] *(பெரும்பாண்.373) குறிப்பிடுகின்றார். சமண சமயக் காப்பியமான சீவகசிந்தாமணிக்கு உரை எழுதும் முன்னர் அச்சமயக் கருத்துக்களை நன்கு கற்றுத் தெளிந்து அச்சமயக் கொள்கையினையும் தமது உரையில் குறிப்பிட்டுள்ளார். "வீடுபேற்றிற்குரிய ஆண்மகனை உணர்த்துஞ் சிறப்பான் னகரம் பின் வைத்தார்"*[20] *(எழுத்து.1) என்று எழுத்ததிகார முதல் நூற்பா உரையில் சமண சமயத்தைச் சார்ந்தவர் போலக் கூறுகின்றார். புறத்திணையியலில், 'அருளொடு புணர்ந்த அகற்சி' என்பதனை விளக்க,*

***"புனிற்றுப் பசிஉழந்த புலிப் பிணவு தனாஅது***
***முலை மாறாஅக் குழவி வாங்கி வாய்படுத்து***
***இரையெனக் கவர்ந்து நோக்கி ஆங்கவ்***
***ஏரிளம் குழவி முன்சென்று தான் அக்***
***கூறுகிர் வயமான் புலவுவேட்டுத் தொடங்கிய***
***வாள் எயிற்றுக் கொள்கையில் தங்கினன் கதுவப்***
***பசிலைப் போதி மேவிய பெருந்தகை***
***ஆருயிர் காவல் பூண்ட***
***பேரருட் புணர்ச்சிப் பெருமை தானே"***[21]

*என புத்தபெருமானின் துறவினை எடுத்துக்காட்டாகக் குறிப்பிட்டுள்ளார். மு.அண்ணாமலை "இக்கதை யாரோ ஒரு தமிழ்க் கவிஞனின் உள்ளத்தைக்*

கவர்ந்திருக்கிறது. அதனால் பாடலாக மலர்ந்திருக்கிறது. அப்பாடலால் ஈர்ப்புண்ட இனியர் அதனை மேற்கோளாகக் காட்டியுள்ளார்"[21] என்பர்.

பட்டினப்பாலையில், தவம் செய்யும் 'அமண்பள்ளி', 'பௌத்த பள்ளி' பற்றியும் குறிப்பிட்டுள்ளார். வைதீகம், சமணம், பௌத்தம் போன்ற சமயக் கருத்துக்களின் கொள்கையினையும் தமது உரைகளில் பதிவு செய்துள்ளமையை வைத்து இவர் சமயப் பொதுநோக்குடையவர் என்பதை அறியமுடிகிறது.

**நாடு**

நச்சினார்க்கினியர் பாண்டிய நாடான மதுரையில் வாழ்ந்தவர் 'மதுரையாசிரியன் பாரத்துவாசி நச்சினார்க்கினியன்' என்று இவரது உரையின் இறுதியில் குறிப்பிடுவதாலும் 'வண்டிமிர்ச்சோலை மதுராபுரிதனில்' என்று உரைச் சிறப்புப்பாயிரம் கூறுவதாலும் 'கரைபெற்றதோர் பஞ்ச லட்சணமான' என்று பாண்டிமண்டலச் சதகம் கூறுவதாலும் இவர் மதுரையில் வாழ்ந்தவர் என்பது பெறப்படுகிறது.

ச.குருசாமி நச்சினார்க்கினியர் மதுரையைச் சார்ந்தவர் என்பதற்கு, "மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரர் என்பது போல மதுரை நச்சினார்க்கினியர் என்று வழங்கினர்"[23] என்பர்.

**காலம்**

இறையனார் களவியல் உரைகாரர், உரையாசிரியராகிய இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர் முதலிய உரையாசிரியர்களை இவர்தம் உரைகளில் ஆங்காங்குக் குறித்துள்ளார். எனவே இந்நால்வருக்கும் பிந்திய காலத்தவர் என்பதை அறியமுடிகிறது என்கிறார்.

உரையாசிரியரான இளம்பூரணரின் காலம் 11ஆம் நூற்றாண்டாகும். சேனாவரையர் "எம்மண்டலமும் கொண்டருளிய மாறவர்மன் குலசேகரபாண்டியன் (கி.பி.1268-1311) காலத்தைச் சேர்ந்தவர் என்பதை

மு.இராகவையங்கார் தம் 'சாசனத் தமிழ்க்கவி சரிதம்' என்ற நூலிலும் சதாசிவபண்டாரத்தார் தம் இலக்கிய வரலாற்றிலும் குறித்துள்ளனர்''[24] என்பார் மு.அண்ணாமலை.

ஆதலால் ''சேனாவரையர் கி.பி.13ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 14ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்தவராதலின் நச்சினார்க்கினியர் பதினான்காம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர் என்று ஒருவாறு முடிவு செய்யலாம்''[25] என்பர் மு.அண்ணாமலை.

''நச்சினார்க்கினியர், தொல்காப்பியச் சொல்லதிகார உரையில் நன்னூல் ஆசிரியரான பவணந்தி முனிவரின் கருத்துக்களை எடுத்துக் காட்டுகின்றார். 'தொடர்நிலைச் செய்யுள் என்பதனைக் காப்பியம் என்று வழங்கலாம்' என்ற அடியார்க்கு நல்லார் கருத்தை அவர் சீவகசிந்தாமணி உரையில் தொடக்கத்தில் மறுத்து எழுதுகின்றார். எனவே பவணந்தி முனிவரும் அடியார்க்கு நல்லாரும் நச்சினார்க்கினியருக்குக் காலத்தால் முற்பட்டவர்கள் ஆகின்றனர்''[26] என்பர்.

''சீவகசிந்தாமணி முத்தி இலம்பகத்தில் 'நாடகம் நயந்து காண்பார்' எனும் செய்யுள் (391) உரையில் 'கோடகம்' என்பதற்கு, 'தாமம், மகுடம், பதுமம், கோடகம், கிம்புரி என்னும் ஐவகையிற் சிகரமாய் செய்த முடி' என்று நச்சினார்க்கினியர் உரைப்பது சூடாமணி நிகண்டு கூறும் கருத்து (சூடாமணி ஏழாம் தொல் பகுதி: செயற்கை வடிவப் பெயர்த் தொகுதி.22). சூடாமணி நிகண்டு விசயநகரப் பேரரசு காலமான 14ம் நூற்றாண்டில் தோன்றியதாகும். எனவே நச்சினார்க்கினியர் காலம் பதினான்காம் நூற்றாண்டின் இறுதியாகும்''[27] என்று கூறுவர்.

திருமுருகாற்றுப்படை உரையில் 'நல்லம்பர் நல்ல குடியுடைத்துச் சித்தன் வாழ், வில்லந்தொருமூன் நெறியுடைத்து. நல்லரவப் பாட்டுடைத்துச் சோமன் வழி வந்த பாண்டியநின்னாடுடைத்து நல்ல தமிழ்' என்று ஔவையார் பாடலை எடுத்துக்கூறியும், பரிமேலழகர் கொள்கையினை மறுத்தும்

கூறியுள்ளார். ஆதலால் இவர் இவ்விருவரின் காலத்திற்குப் பிற்பட்டவர் என்பதை அறியமுடிகிறது.

இவரது காலத்தைப் பற்றி உ.வே.சாமிநாதையர் "இளம்பூரணர், சேனாவரையர், பேராசிரியர், ஆளவந்தபிள்ளையாசிரியர் முதலிய உரையாசிரியர்கள் இவருடைய உரையில் எடுத்துக் கூறப்பட்டிருத்தலின் அவர்களுக்கும் திருமுருகாற்றுப்படையுரையில் பரிமேலழகர் கொள்கையை மறுத்திருத்தலின் அவருக்கும் இவர் பிற்காலத்தவரென்று தெரிகின்றது"[28] என்பார்.

"கி.பி.16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருக்கலாம் என்று செல்வநாயகமும், மா.இராசமாணிக்கனாரும், ஏ.வி.சுப்பிரமணிய அய்யரும், மற்றும் சுப்பிரமணியப்பரமேசுவரன்"[29] போன்றோரும் குறிப்பிடுகின்றனர்.

"சேனாவரையர் காலம் கி.பி.13-ஆம் நூற்றாண்டு என்றும், அவர் கி.பி.1280-இல் உயிர் நீத்தார் என்றும் கூறுப. எனவே நச்சினார்க்கினியர் காலமும் கி.பி.13-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது 14-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று அறுதியிடலாம் என கு.சுந்தரமூர்த்தி சொல்லதிகாரம் நச்சினார்க்கினியர் உரைத்திறனில் குறிப்பிடுகின்றார்."[30] மேற்குறிப்பிட்ட அறிஞர்களின் சான்றுகள் அடிப்படையில் வைத்துப் பார்க்கும் பொழுது நச்சினார்க்கினியரின் காலம் கி.பி.14-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி என்பது தெளிவாகிறது.

**உரை எழுதிய (கண்ட) நூல்கள்**

'உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினியார்', ஒல்காப்புகழ் தொல்காப்பியம், கற்றறிந்தோர் ஏத்தும் கலி, மூத்தோர் பாடிய பத்துப்பாட்டு, நல்லகுறுந்தொகையுள் இருபது பாடல்கள், முத்தி நூல் அல்லது மணநூல் எனச் சிறப்பிக்கப்படும் சீவகசிந்தாமணி முதலிய நூல்களுக்கு உரை வரைந்துள்ளார். இதனை,

**“பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும்**
**ஆரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்கும் - சாரத்**
**திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்**
**விருத்திநச்சி னார்க்கினிய மே”[31]**

இவரது உரையைப் பற்றிக் குறிப்பிடும் இரா.இளங்குமரனார், “பாரத்தொல்காப்பியம் என்னும் வெண்பா நச்சினார்க்கினியர் உரையை ‘விருத்தி’ என்று கூறியிருப்பினும் தொல்காப்பியத்தில் ‘காண்டிகை உரை’ என்னும் குறிப்பே உள்ளது. பத்துப்பாட்டு, கலித்தொகை ஆகியவற்றிலும் ‘விருத்தி’ என்னும் குறிப்பு இல்லை. ஆதலால் இவ்வெண்பாப் பாடியவர் ‘விருத்தி’ என்று கருதினார் எனக் கொள்ளலாம். நச்சினார்க்கினியர் கருத்து அஃதன்று என்றும் கொள்ளலாம்”[32] என்பர்.

நச்சினார்க்கினியர் தாம் உரை எழுதிய நூல்களில் 82 அரும் பெரும் நூல்களைக் கற்றுத் தெளிந்து அவற்றிலிருந்த மேற்கோள் பல காட்டியுள்ளார் என்பர். இத்தகு புலமையுடைய இவரை, மு.வை.அரவிந்தன்,

**“நச்சினார்க் கினியன் எச்சில்**
**நறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்”**

என்று பாடிப் புகழ்வார் என தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். மேலும், இவரது உரைச் சிறப்பினை, ‘எத்தனை நூல்களுக்கு உரை கண்டுள்ளார் நச்சினார்க்கினியர்! நூல்களை மேற்கேள் காட்டியுள்ளார்! வாழ்நாளை எல்லாம் முற்றாக உரை வரைதற்கெனவே பயன்படுத்திய பெருந்தகை நச்சினார்க்கினியரே”[33] என்று கூறுகின்றார்.

நச்சினார்க்கினியர் தம் வாழ்நாள் முழுவதையும் உரை எழுதுவதில் கழித்திருக்க வேண்டும். உரை எழுத எடுத்துக்கொண்ட நூல்கள் அனைத்தையும் ஆழ்ந்து கற்றுத் தெளிந்து அவற்றிற்கேற்ப பல நூல்களையும்மேற்கோள் காட்டியுள்ளார். இவற்றிலிருந்து தம் வாழ்நாளின் பெரும்பகுதியைத் தமிழ் நூல்களுக்கு உரை எழுதப் பயன்படுத்தினார் எனலாம்.

**முதலில் உரை வரைந்த நூல்**

நச்சினார்க்கினியர் பல நூல்களுக்கு உரை செய்துள்ளார். இவற்றுள் எந்த நூலுக்கு முதன் முதலில் உரை செய்தார் என்பதில் ஐயப்பாட்டிற்கு அவர் செய்த உரைகள் காரணமாகின்றன. இதற்குப் பின்வரும் காரணங்களைச் ச.குருசாமி குறிப்பிடுகின்றார்.

"அகன்று பொருள் கிடப்பினும் (செய்.210) என்னும் நூற்பாவுரையிலும் 'மாட்டும் எச்சமும்' (செய்.211) என்னும் நூற்பா உரையிலும் முறையே, 'இனிப் பல செய்யுட்கள் வருமாறு சிந்தாமணியுள் யாம் கூறிய உரைகள் பலவற்றானும் உணர்க', 'சிந்தாமணியுள் மாட்டும் எச்சமும் இன்றி உடனிலையாய் அமைந்தன பலவும் யாம் கூறிய உரையான் உணர்க"[34] என்று இவரது உரைக் குறிப்புகளைக் குறிப்பிடுகின்றனர். இவ்விரு உரைக் குறிப்பினை வைத்துப் பார்க்கின்ற போது நச்சினார்க்கினியர் முதலில் சீவகசிந்தாமணிக்கு உரை எழுதினார் என்பது விளங்குகின்றது. இக்கருத்தினைக் க.வெள்ளைவாரணனார் தமது உரைவளம் எனும் நூலில் கூறியுள்ளார்.

"பத்துப்பாட்டு, கலித்தொகை, சீவகசிந்தாமணி ஆகிய இலக்கியங்களுக்கு உரை எழுதிய பின் தொல்காப்பியச் செய்யுளியலுக்கு நச்சினார்க்கினியர் உரை வரைந்துள்ளார் என்பது இவ்வுரைத் தொடரால் இனிது புலனாதல் காணலாம்"[35] (செய்.210) என்பர். இக்கருத்திற்கு மாறாக வேறு சில சான்றுகள் பத்துப்பாட்டு நச்சினார்க்கினியர் உரை எழுதிய நூலில் 'நச்சினார்க்கினியர் வரலாறு' எனும் பகுதியில் காணப்படுகின்றன.

"பொருநராற்றுப்படை 141, 143, 159-ஆம் அடிகளுக்கும், சிறுபாணாற்றுப்படை 9-11, 28-30, 140-143-ஆம் அடிகளுக்கும், பெரும்பாணாற்றுப்படை 183-ஆம் அடிக்கும், மதுரைக்காஞ்சி 468, 764-65 அடிகளுக்கும் எழுதியுள்ள விசேட இலக்கணக் குறிப்பாலும், கலித்தொகை 39, 127-ஆம் கவிகளின் விசேடவுரையாலும், சீவகசிந்தாமணி 72, 892, 893, 1913, 2690-ஆம் செய்யுட்களின் விசேடவுரைகளாலும் தொல்காப்பியத்திற்கே

முதலில் இவர் உரை இயற்றினாரென்று தெரிகின்றது என்பர்."[36] இந்நிலைக்கு உ.வே.சாமிநாதையர் செவிவழிச் செய்தியாக வரும் ஒரு வரலாற்றுக் குறிப்பினைக் கொண்டு முடிவு கூறுகின்றார். நச்சினார்க்கினியர் சீவகசிந்தாமணிக்கு முதன் முதலில் ஓருரை எழுதி, அதனைச் சைன வித்துவான்கள் சிலருக்குக் காட்டினார். அதனை அவர்கள் புறக்கணிக்க; பிறிதொரு உரை இயற்றி சைனர்களின் பாராட்டினைப் பெற்றார் எனும் செவிவழிச் செய்தியினைக் கொண்டு பின்வருமாறு கூறுகின்றார்.

"இந்த இரண்டு பகுதியுள் முதற்பகுதி இவர் தொல்காப்பியத்திற்கு உரை இயற்றுமுன் சிந்தாமணிக்கு முதல் முறை உரை இயற்றியதையும் இரண்டாவது பகுதி இவர் அந்நூலுக்கு உரை இயற்றியபின் அதற்கு இரண்டாம் முறை உரை இயற்றியதையும் ஒருவகையாகப் புலப்படுத்தி மேற்கூறிய வரலாற்றை வலியுறுத்தி நிற்றல் காண்க"[36] என்று தெளிவுபடுத்துகிறார்.

மேலும், "முதலில் இவர் செய்த உரையைச் சைன அறிஞர்கள் மறுத்துவிடவே சைன மரபைக் கற்று ஆருகத நூல்களை முறையாகப் பயின்று மற்றுமோர் முறை உரை எழுதி ஏற்குமாறு செய்தார் எனப் பழைய வரலாறு கூறும்"[37] என்று மு.அருணாசலம் தமது நூலில் குறிப்பிட்டுள்ளதாக ச.குருசாமி நச்சினார்க்கினியர் உரை நெறி எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார். இவ்வறிஞர்களின் கருத்துக்களின் வழி நச்சினார்க்கினியர் முதன் முதலில் உரை செய்த நூல் சீவகசிந்தாமணி என்பதும், இவ்வுரையைச் (சைனர்) சமணர் புறக்கணிக்க, தொல்காப்பியத்திற்கு உரை எழுதினார் என்பதையும் அறியமுடிகிறது.

"எந்தவித ஐயப்பாடும் இன்றி இவர் முதன் முதலில் உரை எழுதியது தொல்காப்பியத்திற்கேயாம். இதனைப் பத்துப்பாட்டு, கலித்தொகை, சீவகசிந்தாமணி முதலிய நூல்களில் இவர் எழுதியுள்ள விளக்கவுரையிலிருந்து அறியலாம்"[39] என்று கு.சுந்தரமூர்த்தி குறிப்பிடுகின்றார். நச்சினார்க்கினியர் உரையெழுதிய முதல் நூல் தொல்காப்பியம் என்பதற்கும், சீவகசிந்தாமணி

என்பதற்கும் சான்றுகள் உள்ளமையால் உ.வே.சாமிநாதையர் கூறும் கருத்தும் பொருத்தமுடையதாக இருக்கும்.

**புகழாரம்**

நச்சினார்க்கினியரின் உரைச்சிறப்பினைப் பலவாறு பாராட்டுகின்றனர். இளம்பூரணர், சேனாவரையர், பேராசிரியர் போன்ற உரையாசிரியர்களுக்குக் காலத்தால் பிற்பட்டவராதலின் இவர்களின் உரையைவிட நச்சினார்க்கினியரின் உரை மிகவும் எளிதில் புரிந்து கொள்ளும் தன்மையுடையதாக அமைந்துள்ளது. இவரின் உரைச் சிறப்பினை இ.மு.சுப்பிரமணியபிள்ளை, “செய்யுள் நடை வாய்ந்த நக்கீரர் உரை நடையும், விளக்கம் குறைந்த இளம்பூரணமும், கட்டுரைச்சுவை செறிந்த சேனாவரையரது இலக்கண நடையும் பொருட்செறிவுடைய பேராசிரியர் உரைநடையும் இவரது உரைநடைக்குப்பின் விளங்குவன அல்ல. ஆயின், நச்சினார்க்கினியர் உரைநடையில் தெளிவும் சந்தர்ப்பத்திற்கு ஏற்ற மேற்கோளும் பொருந்தி இருக்கின்றன”[40] என்று புகழ்ந்து கூறுகின்றார் என மு.வை.அரவிந்தன் குறிப்பிட்டுள்ளார். வ.வே.சு. ஐயர் நச்சினார்க்கினியரின் உரையினைப் பின்வருமாறு பாராட்டுகின்றார். “இவரது நடை எளிமையும் எழிலும் உடையது. சில இடங்களில் கவிதையாய்ப் பொலியும். தங்குதடையற்ற உயிரோட்டம் நிறைந்திருக்கும். நச்சினார்க்கினியரிடமிருந்து சிறந்த உரைநடை தொடங்கிற்று என்று நன்றாகக் கூறலாம்”[41] என்பார். (His style is simple and fine; The occasional poetic flow, the balance of style and the unembarrassed flow of diction are outstanting features of his writing and it may well be sand that prose writing commence with naccinarkiniyar-v.v.s.ayiar tamil language and literature-page-41.)

“நச்சினார்க்கினியர் வடமொழியில் மிகச் சிறந்த உரையாசிரியர்களுள் ஒருவராக மதிக்கப்படும் சிறிமல்லிநாதசூரியைப் போன்றவர்”[42] எனப் புகழ்கின்றார் உ.வே.சாமிநாதையர்.

“நூலின் சமயத்தையும் நூலாசிரியருடைய கொள்கையையும் அவர் கருத்தையும் அறிய வேண்டிய அளவு உழைத்தறிந்து அவற்றிற்கேற்ப உரை எழுதுதல் நச்சினார்க்கினியரின் இயல்பு”[43] என்பது சோமலெயின் கருத்தாகும். சுப்பிரமணியப்பரமேசுவரன். “நச்சினார்க்கினியர் மிகவும் பிரபலமான வலிமை வாய்ந்த ஆசிரியராவார். மிகப்பரந்த கல்வி அறிவு வாய்க்கப்பெற்றிருந்த அவர் சில வேளைகளில் தமது ஆழ்ந்தகன்ற அறிவை வெளியிட விரும்புவார். கூர்மையான கவித்துவ உணர்வு உடையவர், அதோடு சொற்களின் பயன்பாட்டைத் தீர அறிந்திருந்தவர். நியாயப்பூர்வமான அவரது உரைகள் கணத்துக்குக் கணம் தென்படும் திறனாய்வு நோக்கையும், தெளிந்த மனத்தையும், பரந்த புலமையினையும் வெளிக்காட்டி நிற்கும் சிறப்புப் பெற்றமையாகும்”[44] என்று நச்சினார்க்கினியரின் உரையினைச் சிறப்பித்துக் கூறுகின்றார்.

“அமிழ்தினும் இனிய தமிழ் மடவரல் செய்த அருந்தவத்தின் பெரும்பயனாக அவதறித்த அறிஞர் நச்சர்”[45] என்றும், “நச்சர் உரை தமிழ் இலக்கியக் கருவூலம் என்று மதிப்பிடப்படுகின்றது”[46] என்றும் உ.வே.சாமிநாதையர் நச்சினார்க்கினியரைப் புகழ்கின்றார்.

“ஆன்றோர் புகழ்ந்த அறிவினில் தெளிந்து சான்றோர் உரைத்த தண்டமிழ்த் தெரியல் ஒருபது பாட்டும் உண்பவர்க்கு எல்லாம் உரையற முழுதும் புரைபட உணர்த்தும்”[47] என்று சிறப்புப்பாயிரம் அவரைப் பாராட்டுகின்றது. மறைமலையடிகள் திருவெற்றியூர் மும்மணிக்கோவையுள்,

“தமிழ் வரம்பு உணர்ந்த கமழுறும் அறிவினும் உரைத்திறம் நிலையிடும் உரைபடா விறலினும் தானே தனக்கு நிகர்என விளங்கிய நச்சினார்க்கினியரினும்”[48] என்று பாராட்டுகின்றார்.

“எழில் மிகுந்த சொற்றொடர் உள்ளங்கவரும் உவமை, இனிய ஓசை கெழுமிய வாக்கியம், என்றும் நெஞ்சத்தால் நின்று நிலவும் எடுத்துக்காட்டு, இலக்கியச்சுவை முதிர்ந்த கவிதை மேற்கோள் ஆகியவற்றை நச்சினார்க்கினியர்

உரையில் காணலாகும்''[49] என்று மு.வை.அரவிந்தன் நச்சினார்க்கினியரைப் புகழ்கின்றார்.

''உரைப் பணியில் நச்சினார்க்கினியரின் தொண்டு சாலப் பெரிது. இவர் ஒருவரே பல்லும் நாவும் போல, இலக்கணவுரையாசிரியராகவும், இலக்கியவுரையாசிரியராகவும் இணைந்து விளங்கும்பெருமகன்''[50] என நச்சினார்க்கினியரின் உரைத் தொண்டினை வ.சுப.மாணிக்கம் நெஞ்சாரப் பாராட்டுகின்றார்.

''இலக்கண மரபுகளுக்கேற்ப இலக்கியங்கட்கும், இலக்கிய மரபுகளுக்கேற்ப இலக்கண நூலுக்கும் உரை எழுதி அவ்விருவுரை மரபுகளையும் பாதுகாத்த பெருமை நச்சினார்க்கினியரையே சாரும்''[51] என்று கா.ஆறுமுகனார் நச்சினார்க்கினியரை வியந்து பாராட்டுவர்.

''இலக்கண இலக்கியக் களஞ்சியம் என்று நச்சினார்க்கினியரைக் கூறுவது பொருந்தும்''[52] என்பது மு.அருணாச்சலத்தின் புகழுரையாகும்.

''நச்சினார்க்கினியர் தமிழ் இலக்கியத்துக்கும் இலக்கணத்துக்கும் உரையெழுதுதற்கென்றே பிறந்த பெருமகனாவார். இலக்கியங்களில் உரை நயம் கண்டவராதலின் இவர்தம் இலக்கணவுரையிலும் நயக்காட்சிகளைக் காணலாம். இவர்தம் நடை இளம்பூரணத்துக்கும் சேனாவரையரையத்துக்கும் இடைப்பட்டதாகும். இளம்பூரணத்துக்குப்பின் தொல்காப்பியத்திற்குப் பெரும்பாகம் உரை கண்ட பெருமையையுடையவர் நச்சினார்க்கினியர்''[53] என்று வ.சுப.மாணிக்கம் இவரின் சிறப்பினைக் குறிப்பிடுகின்றார்.

''நச்சினார்க்கினியர் கையாண்ட உரைநடையில் அவர் மனப்போக்குத் தெளிவாகப் புலப்படுகின்றது. கல்வி காரணமாக அவருக்கு உண்டான பெருமிதத்தை அவருரையெங்கும் காணலாம். சேனாவரையருரையிற் காணப்படும் தருக்க முறையாகச் சொல்லும் பண்பையோ அல்லது பரிமேலழகருரையிலுள்ள செறிவையோ அவருரையில் நாம் காணமுடிகிறது''[54] என்பது வி.செல்வநாயகத்தின் மதிப்புரையாகும்.

“நச்சினார்க்கினியர் பரந்த நூற்புலமையுள்ளவர். அவருக்கு நிகரான புலமையுடையவராக வேறு எந்த உரையாசிரியரையும் குறிப்பிட முடியாது”[55] என்பது மு.அண்ணாமலையின் கருத்துரையாகும்.

“நச்சினார்க்கினியர் உரைகளில், அவருடைய கடலனைய கல்வியும், செம்மையான பொருள் கூறும் திறனும், வாதாடும் ஆற்றலும், தெளிந்த தமிழ் ஆர்வமும் நன்றாய் விளங்குகின்றன”[56] என்பது ஏ.வி.சுப்பிரமணிய அய்யரின் பாராட்டுரையாகும்.

நச்சினார்க்கினியர் ஆசிரியர் பணியை மேற்கொண்டு, மாணவர்களுக்கு எளிதில் புரியும் வண்ணம் பல்வேறு வகையான இலக்கியங்களுக்கும், இலக்கணத்துக்கும் விளக்கம் எழுதித் தனது ஆசிரியப் பணியைச் செம்மையான முறையில் செய்துள்ளார். தன் வாழ்நாள் முழுவதையும் உரை எழுதும் பணியினை மேற்கொண்டிருக்க வேண்டும் என்பதை அவரின் உரைகள் உணர்த்துகின்றன.

**தொகுப்புரை**

- உரையாசிரியர்கள் கி.பி. 11ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.14ஆம் நூற்றாண்டு வரையிலான காலக்கட்டங்களில் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் தோன்றியவர்கள்.
- உரையாசிரியர்களில் குறிப்பிடத்தக்கவர் நச்சினார்க்கினியர்.
- இவர் இலக்கணம், இலக்கியம் ஆகிய இரண்டிற்கும் உரை எழுதியதால் இவர் ஒருவரே பல்லும் நாவும் போல இலக்கியவுரையாசிரியராகவும் இலக்கணவுரையாசிரியராகவும் இணைந்து விளங்கும் பெருமகன் என வ.சுப.மாணிக்கம் கூறும் கருத்துப் பொருத்தமுடையதாக அமைகிறது.
- இவர் எழுதிய உரை நூலின் சிறப்புப்பாயிரத்தால் இவரின் பெயர், மரபு, சமயம், உரைவரைந்த நூல்கள், நாடு ஆகியவற்றை அறியமுடிகிறது.
- இறைவன் பெயர்களுள் ஒன்றான நச்சினார்க்கினியர் என்பது இவரின் இயற்பெயராகும்.

❖ தூய ஞானம் நிறைந்த சிவச்சுடர் என்று இவரது உரைச் சிறப்புப்பாயிரம் குறிப்பிடுவதால் இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பது தெளிவாகிறது.

❖ களவியல் உரைகாரர், இளம்பூரணர், சேனாவரையர், பேராசிரியர் ஆகிய உரையாசிரியர்களின் கருத்துக்களைத் தமது உரையில் குறிப்பிட்டும், மறுத்தும் உரை எழுதியுள்ளார். ஆதலால் இந்நால்வருக்கும் பிற்பட்டவர் என்பது விளங்குகிறது.

❖ சீவகசிந்தாமணி உரையில் சூடாமணி நிகண்டின் கருத்தினைக் குறிப்பிட்டுள்ளார். சூடாமணி நிகண்டின் காலம் கி.பி.14ஆம் நூற்றாண்டாகும். இவற்றின் வழி நச்சினார்க்கினியரின் காலம் கி.பி.14ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி, 15ஆம் நூற்றாண்டின் முற்பகுதி எனக்கூறலாம்.

❖ இவரின் உரைச் சிறப்புப்பாயிரம் தொல்காப்பியம், கலித்தொகை, பத்துப்பாட்டு, குறுந்தொகை இருபது பாடல்கள், சீவகசிந்தாமணி முதலிய நூல்களுக்கு உரை இயற்றியுள்ளதாகக் குறிப்பிடுகின்றது.

❖ நச்சினார்க்கினியர் முதலில் சீவகசிந்தாமணிக்கு உரை எழுதி அதனைச் சமணர்கள் மறுக்க; பின் தொல்காப்பியத்திற்கு உரை இயற்றினார் என்பதை இவரது உரையின் வழி அறியமுடிகிறது. இதற்கு உ.வே.சாமிநாதையர் கூறும் கருத்தும் பொருத்தமுடையதாக அமைகிறது.

❖ நச்சினார்க்கினியர் ஆசிரியர் பணியை மேற்கொண்டு, மாணவர்களுக்கு எளிதில் புரியும் வண்ணம் பல்வேறு வகையான இலக்கியங்களுக்கும், இலக்கணத்துக்கும் விளக்கம் எழுதித் தனது ஆசிரியப் பணியைச் செம்மையான முறையில் செய்துள்ளார். இதன்மூலம் தன் வாழ்நாள் முழுவதும் உரை எழுதும் பணியினை மேற்கொண்டிருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது.

## சான்றெண் விளக்கம்

1. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும் நச்சினார்க்கினியர் வரலாறு, ப.ixi.
2. இரா.மோகன், உரைமரபுகள், ப.268.
3. நச்சினார்க்கினியன் தொகுதி, முன்னுரைப்பகுதி.
4. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும் நச்சினார்க்கினியர் வரலாறு, ப.ixii
5. மேலது, ப.x.
6. ச.குருசாமி, நச்சினார்க்கினியர் உரை நெறி, ப.21.
7. இரா.மோகன், உரைமரபுகள், ப.208.
8. இரா.இளங்குமரனார், தமிழர் வாழ்வியல் இலக்கணம், ப.228.
9. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும் நச்சினார்க்கினியர் வரலாறும், ப.ix
10. மா.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, பக்.765-766.
11. இரா.மோகன், உரை மரபுகள், ப.268.
12. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), தொல்.பொருள்.நூற்.188.
13. மு.அண்ணாமலை, நச்சினார்க்கினியர், ப.6-7.
14. ச.குருசாமி, நச்சினார்க்கினியர் உரைநெறி, ப.23.
15. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.71.
16. மேலது, ப.389.
17. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), தொல்.எழுத்து, ப.48.
18. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.428.
19. மேலது, ப.246.
20. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), தொல்.எழுத்து, ப.19.
21. மு.அண்ணாமலை, நச்சினார்க்கினியர், ப.8.
22. மேலது, ப.9.

23. ச.குருசாமி, நச்சினார்க்கினியர் உரைநெறி, ப.22.

24. மு.அண்ணாமலை, நச்சினார்க்கினியர், ப.9.

25. மேலது, ப.9.

26. ச.குருசாமி, நச்சினார்க்கினியர் உரைநெறி, பக்.24-25.

27. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள், ப.239.

28. சுப்பிரமணியம் பரமேசுவரன், நச்சினார்க்கினியரின் இலக்கியத் திறனாய்வு, ப.7.

29. இரா.மோகன், உரைமரபுகள், ப.271.

30. ச.குருசாமி, நச்சினார்க்கினியர் உரைநெறி, ப.25.

31. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும் நச்சினார்க்கினியர் வரலாறு, ப.ix

32. இரா.இளங்குமரனார், தமிழர் வாழ்வியல் இலக்கணம், ப.227.

33. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள், ப.239.

34. ச.குருசாமி, நச்சினார்க்கினியர் உரைநெறி, ப.38.

35. க.வெள்ளைவாரணனார், உரைவளம், ப.972.

36. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும் நச்சினார்க்கினியர் வரலாறு, ப.xii

37. ச.குருசாமி, நச்சினார்க்கினியர் உரைநெறி, ப.38.

38. மேலது, பக்.38-39.

39. மேலது, ப.39.

40. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள், ப.117.

41. மேலது, ப.118.

42. சுப்பிரமணியம் பரமேசுவரன், நச்சினார்க்கினியரின் இலக்கியத் திறனாய்வு, ப.5.

43. மேலது, ப.4.

44. மேலது, ப.5.

45. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள், ப.59.

46. மேலது, ப.60.

47. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் உரையும் நச்சினார்க்கினியர் வரலாறு, பக்.ix-x

48. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள், ப.311.

49. மேலது, ப.281.

50. வ.சுப.மாணிக்கம், சிந்தனைக் களங்கள், ப.8.

51. க.ஆறுமுகம், நச்சினார்க்கினியரின் இலக்கியத்திறன், ப.2.

52. மு.அருணாச்சலம், தமிழ் இலக்கிய வரலாறு, பதினான்காம் நூற்றாண்டு, ப.116.

53. இரா.மோகன், உரைமரபுகள், ப.273.

54. மேலது, ப.273.

55. மு.அண்ணாமலை, நச்சினார்க்கினியர், ப.10.

56. இரா.மோகன், உரைமரபுகள், ப.273.

**முன்னுரை**

உரையாசிரியர்கள் தமிழிலக்கிய வரலாற்றில் சிறப்பிடம் பெற்றுத் திகழ்பவர்கள். தங்கள் சிறந்த உரைகளால் பண்டைய நூல்கள் பல அழியாது நிற்கத் துணை செய்தவர்கள். காலம் பல சென்றாலும் தமிழன்னையின் அரிய இலக்கியச் செல்வங்களைப் பலரும் துய்க்கத் துணை செய்தவர்கள். இத்தகு சிறப்புடைய உரையாசிரியர்கள் தாம் உரை வரையும் நூலுக்கு இரண்டு நிலைகளில் உரை காணுவர். ஒன்று வழக்கு நிலை, மற்றொன்று செய்யுள் நிலை. அவ்வகையில் நச்சினார்க்கினியரும் இவ்விரு நிலைகளில் உரை விளக்கம் தந்துள்ளார். இவற்றுள் வழக்கு நிலைகளில் அதிகமாக உரைகளை விளக்குகின்றார். வழக்கினை மிகுதியாகக் கொண்டு இலக்கண, இலக்கியங்களுக்கு உரை வரைந்திருப்பதால் நச்சினார்க்கினியரின் உரைத்திறனை நன்கு அறியமுடிகிறது. வழக்கினைக் கொண்டு உரை எழுதுகின்ற போது தம் கால நிகழ்வுகளையும் உரைகளின் வழிப் பதிவு செய்துள்ளார். நச்சினார்க்கினியர் இந்நெறியால் அரசு, பட்டம், ஊர்ப் பெயர்கள், புலவர் பெயர்கள், நூற்பெயர்கள், தொழிற்பெயர்கள், நம்பிக்கை, பழக்க வழக்கம், ஆடை, அணிகலன்கள், உணவு, பயிரியல் போன்றவற்றால் அக்காலச் சமூக நிலையினை அறிந்து கொள்ள முடிகிறது. நச்சினார்க்கினியரின் பத்துப்பாட்டு உரையின் வழி இத்தகைய சமூக நிலையினை விளக்குவதே இவ்வியலின் நோக்கமாகும்.

**பத்துப்பாட்டு**

சங்க எட்டுத் தொகையும், பத்துப்பாட்டும் பல புலவர்கள் பாடிய பாடல்களின் தொகுப்பு ஆகும். சங்க இலக்கியங்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த பண்டைத் தமிழர்களின் வாழ்வியல் முறைகளையும் அக்காலச் சூழலையும் எடுத்து இயம்புவன. சங்க இலக்கிய நூல்களைப் பாட்டும் தொகையும் என்று கூறும் மரபும் உண்டு. பாட்டு என்றாலே பத்துப்பாட்டைத்தான் குறிக்கும். இதற்குச் 'சான்றோர் உரைத்த

தண்தமிழ்த் தெரியல் ஒருபது பாட்டும் என்ற நச்சினார்க்கினியர் உரைச் சிறப்புப்பாயிரத்தைச் சான்றாகக் கூறலாம்.' இங்குச் சான்றோர் என்பது சங்கப் புலவர்களைக் குறிக்கின்றது. பத்துப்பாட்டை நினைவில் கொள்வதற்குப் பழங்காலத்தில் ஒரு வெண்பா தோற்றுவித்தனர். அது,

**"முருகு பொருநாறு பாண்இரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி மருவினிய**
**கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்து"**

என்பதாகும்.

**பத்துப்பாட்டின் சிறப்பு**

பிற்காலத்தில் பத்துப்பாட்டின் சிறப்பினை உணர்த்தப் பல வெண்பாக்களை எழுதியுள்ளனர்.

**"மூத்தோர்கள்**
**பாடியருள் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும்"[1]**

எனத் தமிழ்விடு தூது ஆசிரியர் குறிப்பிடுவார்.

**"பத்துப்பாட்டாதிமனம் பற்றினார் பற்றுவரோ?**
**எத்துணையும் பொருட்கு இயையும் இலக்கணமில்**
**கற்பனையே"[2]**

என மனோன்மணீயம் சுந்தரனார் பத்துப்பாட்டைப் பாராட்டுவார்.

**"பண்டை இயற்கை வளங்கள் எல்லாம் - பத்துப்**
**பாட்டின் வளத்திற் கண்டறிந்து**
**மண்டல மெங்கும் புகழும் அருந்தமிழ் - வாசம்**
**நுகர்ந்து மகிழ்வோமே?"[3]**

என கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை பத்துப்பாட்டைச் சிறப்பித்துள்ளார்.

**பத்துப்பாட்டைப் பாடியோர்**

பத்துப்பாடல்களும் எட்டுப் புலவர்களால் பாடப்பட்டுள்ளன. பத்துப்பாட்டைப் பாடிய புலவர்களின் பெயர்களைப் பின்வரும் பழம்பாடல் குறிப்பிடுகின்றது.

> **“முருகு நல்வாடையும் கீரன்; முடதாமக் கண்ணி பொருநர்;**
> **மருவு பாண், பாலை உருத்திரங் கண்ணன், மகிழ்சிறு பாண்**
> **புரியுநத் தத்தன்; மருதம் நன் காஞ்சி; நப்பூதன் முல்லை**
> **வருமெங் கபிலன் குறிஞ்சி; மலைகடாம் கௌசிகனே”[4]**

**பாட்டுடைத் தலைவர்கள்**

*பத்துப்பாட்டில் பாட்டுடைத் தலைவர் அறுவர். கரிகாலனைப் பொருநராற்றுப்படை, பட்டினப்பாலை என்னும் இரு நூல்கள் பாடுகின்றன. இதனைப் ‘பொருநாறு, பாலை கரிகால்’ என்று பழம்பாடல் பகருகின்றது. மேலும் பாட்டுடைத் தலைவர்களைப் பின்வரும் வெண்பா குறிப்பிடுகின்றது. அது:*

> **“முருகாறு செவ்வேள்; பொருநாறு பாலை**
> **கரிகால் நெடுஞ்செழியன் காஞ்சி - இருபாணும்**
> **நல்லியக் கோடன் இளந்திரையன்; நன்னன்கடாம்**
> **கல்வித் தலைவர் கருது”[5]**

*என்பதாகும்.*

**பத்துப்பாட்டுப் பாடல்களின் எண்ணிக்கை**

| நூல் பெயர்கள் | | அடி எண்ணிக்கை |
|---|---|---|
| *1. திருமுருகாற்றுப்படை* | - | *317* |
| *2. பொருநராற்றுப்படை* | - | *248* |
| *3. சிறுபாணாற்றுப்படை* | - | *269* |
| *4. பெரும்பாணாற்றுப்படை* | - | *500* |
| *5. முல்லைப்பாட்டு* | - | *103* |
| *6. மதுரைக்காஞ்சி* | - | *782* |
| *7. நெடுநல்வாடை* | - | *188* |
| *8. குறிஞ்சிப்பாட்டு* | - | *261* |
| *9. பட்டினப்பாலை* | - | *301* |
| *10. மலைபடுகடாம்* | - | *583* |

பத்துப்பாட்டு 103 அடி முதல் 782 அடி வரையுள்ள நெடும் பாட்டுக்களைக் கொண்டுள்ளது. இத்தகைய நெடும்பாடல்களுக்கு நச்சினார்க்கினியர் உரை விளக்கம் தந்துள்ளார்.

**சமூகம் - விளக்கம்**

சமூகம், சமுதாயம் இரண்டும் ஒரே பொருளைத் தரும் சொற்களாகும். இதற்குக் குறிப்பிட்ட நிலப்பரப்பில் சேர்ந்து வாழும் மக்கட்தொகுதி என்று பொருள். "சமூகம் என்பது ஒரு வாழ்நெறியையும் பண்பாட்டையும் வளர்ப்பதில் பங்குபெறும் தனிமனிதர் பலரின் கூட்டமைப்பாகும். சமூகம் என்பது பண்பாட்டை வளர்க்கும் களம் என்பர். சமூகம் என்பது உயிர் வாழ்வதற்காகப் போராடும் மக்களினத்தின் தனித்தன்மையுள்ள ஒரு குழுவாகும். தமக்குத்தாமே அமைத்துக் கொண்ட அக்குழுவின் தலைவிதியையே அக்குழுவைச் சார்ந்த ஒவ்வொரு தனிமனிதனும் பெற்றிருக்கிறான். மனிதர்கள் மற்றவரைச் சார்ந்தும் மற்றவரின் கூட்டுறவோடும் வாழ வேண்டியவர்களாய் உள்ளனர்"[6] என்று சமூகம் என்பதற்குக் கு.வெ.பாலசுப்பிரமணியம் விளக்கம் அளிக்கிறார்.

"சமூகம் இதனை ஆங்கிலத்தில் 'சொசைட்டி' எனக் கூறுவார்கள். இதற்குப் பல்வேறுபட்ட மொழிபேசுபவர்கள், பல்வேறுபட்ட பண்பாடுகளைப் பேணுபவர்கள், பல்வேறுபட்ட சூழ்நிலையில் வாழ்பவர்கள், இவர்களைத் தம்முள் அடக்கி ஒரு அழகான வாழ்க்கை நெறியைக் கொண்டுள்ளதே சமூகம்"[7] என்று சி.எஸ்.எஸ்.சோமசுந்தரம் சமூகம் என்பதற்கு வரையறை கூறியுள்ளார்.

"ஆங்கிலத்தில் Society என அழைக்கப்படும் சமுதாயம் என்ற சொல் சோசியசு (Socius) எனும் இலத்தீன் சொல்லிலிருந்து பிறந்ததாகும். அதற்குக் கேண்மை அல்லது ஒன்று கூடுதல் என்பது பொருளாகும். தமிழில் சமூகம் என்றும் சமுதாயம் என்றும் இது வழங்கப்படுகிறது"[8] என்பார் இரா.குருநாதன்.

சி.இ.மறைமலை சமுதாயம் என்பதற்கு, “பல்வேறு சமூக நிறுவனங்களின் ஒருங்கிணைப்பாக விளங்கும் சமூகக் கட்டமைப்பு”[9] என்று குறிப்பிடுகிறார்.

“சமுதாயம் என்ற சொல்லிற்கு ‘மக்கள் திரள்’ என்னும் பொருளினைத் தமிழ்ப்பேரகராதியும் சொற்களஞ்சியமும் தெரிவிக்கின்றன”[10]

சமூகம் என்பதற்கு மு.வ., “ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதர்களுடன் கொண்டிருந்த தொடர்புகளைத் தான் சமூகம் என்கிறோம். சமூகவியல் அல்லது சமூகம் என்பது புலனாக உளச்சார்புடைய கருத்தியல் பொருள் ஆகும்”[11] என்பர்.

“சமுதாயம் என்பது நோக்கங்களின் முழுமையை உள்ளடக்கிய சமூகக் குழுவாகும். சமுதாயத்திலுள்ள உறுப்பினர்களின் வாழ்க்கை முழுமையுமே அடங்கிவிடும். சமூகத்திலுள்ளேயே சமூக உறவு முறைகளும் அடங்கும்”[12] என்பார் இராசகோபால்.

ரைட் என்பவர் “சமுதாயம் என்பது வெறும் மக்களின் கூட்டமன்று அது ஒரு நிலை; ஓர் உறவுமுறை என்பதாகத்தான் பொருள்படும்”[13] என்று விளக்குகிறார்.

பார்சன்ஸ் என்பவர், “சமுதாயத்தை விளக்கும் போது அது மனித உறவுகளின் கூட்டத்தொகுதி”[14] என்பார்.

“சமுதாயம் என்பது உறவு நிலைகளின் அமைப்புமுறை மனித இனத்தில் காணப்படும் உறவு நிலைகளின் அமைப்பு முறையே சமுதாயம் எனப்படும்”[15] என்பார் வ.ஜெயா.

“சமுதாயம் ஓர் அருவமான பண்பியலாக உள்ளது. ஏனெனில் அது சமூக உறவு, மரபு, சட்டம் முதலிய அடிப்படைக் கூறுகளால் அமைக்கப்பட்ட தாகும். இன்னும் ஒரு கோணத்திலும் சமுதாயத்தை நோக்க வேண்டும். மனித இனத்தின் நடத்தை அதன் பொருட்டு எழும் உறவுத் தொடர்பான சிக்கல்

பின்னர் அவற்றைச் சீர்படுத்துதல் போன்ற கண்ணோட்டங்களுடன் சமுதாயத்தைக் கவனிக்க வேண்டும்''[16] என்பார் ஓடம்.

''ஒரு குறிப்பிட்ட பிரதேச வட்டத்தினுள் வாழுகின்றவர்கள் என்ற வகையிலும் அவ்வாறு வாழும் பொழுது பல்வேறு ஊடாட்டங்களையும், தொடர்புகளையும், உறவுகளையும் கொண்டுள்ளவர்கள் என்ற வகையிலும் (அப்போதுதான் அந்தக்குழுமம் இயங்கும்) அந்தக் குழுமத்தினர் ஒரு சமூகம் என அழைக்கப்படுதல் மரபு''[17] என்பார்.

''மக்கள் தான் சமூகம், தனி மனிதர்களும், குடும்பங்களும், ஊர்களும் மக்கள் கூடும் எந்த அமைப்பும் சமூகமே; ஒவ்வொரு சமூகமும் தனக்கே உரிய வகையில் தனது சமூகத்தின் வாழ்வை நெறிப்படுத்த திட்டங்கள், செயல்பாடுகள், வழிமுறைகள், கொண்டாட்டங்கள், வழிபாடுகள், பண்புகள், கட்டுப்பாடுகள், கருத்தியல்கள் என உருவாக்கிக் கொள்கின்றன. இவையே சமூக நெறிகளாகின்றன''[18] என சமூகத்திற்குச் செபமாலைராஜா விளக்கம் அளிக்கிறார்.

''சமூகம் என்பது தனி மனிதர்கள் கூடி வாழும் குழுமம்; இக்குழுமம் என்பது, சாதி, மதம், மொழி, இனம், வகுப்பு, கிராமப்புறம், நகர்ப்புறம், ஆண், பெண் என வெவ்வேறு குழுமங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன''[19] என்பர்.

சமுதாயம் எது என்பதை டால்பாட் பார்சன் பின்வருமாறு விளக்குவதாக க.ப.அறவாணன் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். "Society may be difined as the total complex of human relationships in so far as they grow out action in terms of the means - end Relationship, Intrinsic or Sybolic"[20]

மு.வ. சமுதாயம் பற்றிக் கூறுகையில், ''நாகரிகம் வளர வளர மனிதர் சிறு கூட்டமாக இருந்து வாழ்ந்த நிலையிலிருந்து பெரிய சமுதாயமாக வாழும் நிலைக்கு உயர்ந்துள்ளனர். வரவர சிறு நாடுகள் பலவும் ஒரு குடும்பத்தின்

உறுப்புகள் போல் ஆகி உலகமே ஒரு பெருஞ்சமுதாய அமைப்பாக உருக்கொள்கிறது"[21] என்பர்.

கே.பாஸ்கல் கில்பர்ட், "குறிப்பிட்ட பொது நோக்கங்களை அடைவதற்காக ஒருசில நிலையான உறவு முறைகளினால் விளைவிக்கப் பட்டுள்ள மனிதக் கூட்டத் தொகுதியினையே சமூகம் என்கிறோம்"[22] என்று குறிப்பிடுவர்.

"சமுதாயம் என்ற சொல்லினுள் நம் வாழ்க்கையில் காணும் அனைத்தும் அடங்கும். நம்மிடையே காணும் சாதிப்பிரிவுகள், சாதிப் போராட்டங்கள், மதப்பிரிவுகள், மதச் சண்டைகள், பெண்ணடிமை, பெண்விடுதலை, கல்வி, கல்வி சார்ந்தவைகள், பண்பு, பண்பு சார்ந்தவைகள் எல்லாமும் சேர்ந்ததுதான் சமுதாயம் என்கிறார்"[23] முகிலை.இராசபாண்டியன்.

வாழ்வியற் களஞ்சியம், "ஒரு சிறிய நிலப்பரப்பில் ஒரு பொது வாழ்க்கை வழியைப் பின்பற்றிக் கூட்டமாக வாழும் மக்கள் தொகுதி சமுதாயம் எனப்படும். இது மக்கள் ஒன்று கூடி ஒன்றுபட்ட எண்ணத்துடன் ஓர் இடத்தில் வாழும் அமைப்பைக் குறிக்கும்"[24] என எடுத்துரைக்கும்.

ஜெ.நாராயணன், "சமுதாயம் என்பது நோக்கங்களின் முழுமையையும் உள்ளடக்கிய சமூகக்குழு"[25] என்று குறிப்பிடுகின்றார்.

"சமுதாயத்தில் சமூகம் அடங்கும் என்பர். மக்கள் ஒன்றிய நிலையில் சமூகமாகவும், செயல் குறித்த நிலையில் சமுதாயமாகவும் மிளிர்கிறது என்று கருதுவோரும் உண்டு. இவற்றால் சமூகம் பொதுப்பண்புகளாக அமைவதும், சமுதாயம் தனித்த பண்பாக அமைவதும் எண்ணற்பாலன. (luduring von misessocialism, p.292)"[26] என்று இராம.குருநாதன் சமுதாயம் என்பதற்கு விளக்கம் அளிக்கின்றார்.

மேற்குறிப்பிட்ட பலரின் கருத்துக்களின் வழிச் சமூகம் என்பது, மக்கள் தொகுதி, அவர்களின் நோக்கம், தேவை (Means), பழக்க வழக்கம்,

*நாகரிகம், பண்பாடு, கலாச்சாரம், மற்றும் மனித உறவுமுறைகள்* (human relationships), *கல்வி, மதம், சாதி, மொழி அனைத்தும் உள் அடங்கிய நிலையினைச் சமூகமாகக் கருதலாம்.*

**விளக்கம்**

*நச்சினார்க்கினியர் தம் காலத்திலுள்ள, அரசு, அரசர்களின் அரண்மனை அமைப்பு, அரசனைத் துயிலெழுப்பும் முறை, நாளோலக்க இருக்கை, முறை வழங்கல், அரசனின் பிறந்த நாள் விழா முதலான அரசு பற்றிய பதிவுகளைப் பத்துப்பாட்டு உரையின் வழி வெளிப்படுத்துகின்றார்.*

**அரண்மனை அமைப்பு**

*அரசர்கள் மிகப்பெரிய அரண்மனைகளில் வாழ்ந்துள்ளனர். இம்மனை, பாதுகாப்பு மிகுந்த அரண்களால் சூழப்பட்டமையால் அரண்மனை எனப்பட்டது. இதனைக் கோயில் எனவும் சங்க இலக்கியங்கள் சுட்டும்.*

*அரசர்களின் அரண்மனைகள் பரந்தகன்ற இடப்பரப்பில் உயர்ந்த மாடங்களோடு கட்டப்பட்டனவாகும்.*

***"இடம் சிறந்து உயரிய எழுநிலை மாடத்து"  (முல்லைப்.86)***

*என்ற அடிக்கு நச்சினார்க்கினியர், 'தனக்குள்ள இடமெல்லாம் பொன்னாலும் மணியாலும் சிறப்புப்பெற்று உயர்ந்த ஏழு நிலையினையுடைய மாடத்திடத்து' எனப் பொருள் விளக்கம் தருகின்றார். மேலும், அரண்மனையின் வாயில் அமைப்பு கதவு பொருத்திக் கோளமைத்த (தாழ்பால்) பிணப்பினையுடையதாக இருந்துள்ளதை,*

***"குன்று குயின்றன்ன ஓங்கு நிலை வாயில்"  (நெடுநல்.88)***

*என்ற அடிக்கு, 'மலையை நடுவே வெளியாகத் திறந்தாற் போன்ற கோபுரவாயில்களையும், ஓங்கிய நிலையையுடைய கோபுரத்தை ஓங்குநிலை யென்றார்; கதவு பொருத்திக் கோளமைத்த பிணர்ப்பினையுடைய நெடுநிலையினையுடைய வாயில்' என்று நச்சினார்க்கினியர் தம் காலத்து அரண்மனைகளின் வாயில் அமைப்பினை உரையின் வழிப் பதிவு செய்துள்ளார்.*

**பிறந்த நாள் விழா**

"மன்னனது பிறந்த நாள் விழா ஒவ்வொராண்டும் கொண்டாடப் பெற்றது"[27] என மணிமேகலை குறிப்பிடுகின்றது என்பார்.

"மன்னனின் பிறந்த நாள் 'பெருநாள்' எனப்பட்டது. அன்று சிறை நீக்கம் செய்து நல்கூர்ந்தார்க்கும் புலவர்கட்கும் மிகுந்த பரிசில்களை வழங்கி, படைஞர்கட்குச் சிறப்புச் செய்து அருளினான். முறையிருத்தப் பெற்றோர் விடுதலை பெற்றனர். வரி பாக்கி தள்ளுபடி செய்யப்பட்டது"[28] என்று கூறுவர்.

மன்னர்கள் அக்காலத்தில் தம் பிறந்த நாளைச் சிறப்பாகக் கொண்டாடினர் என்பதை,

**"பேரிசை நன்னன் பெறும் பெயர் நன்னாள்"     (மதுரைக்.618)**

என்ற அடிக்கு நச்சினார்க்கினியர், 'பெரிய புகழையுடைய நன்னன் கொண்டாடுகின்ற பிறந்த நாளிடத்து, அவன் பெயரை அந்நாள் பெறுதலின், பெயரைப்பெற்ற நன்னாள் என்றார்' என உரை விளக்கம் தருகிறார்.

**துயிலெழுப்பும் முறை**

அரசர்கள் வைகறையில் சூதர்பாட, துயில் எழுதல் நடைமுறையாகும். இதனைத் தொல்காப்பியர்,

**"தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்**
**சூதர் ஏத்திய துயல்எடை நிலை"**[29]

என்பர். நச்சினார்க்கினியர், "கிடந்தோர்க்கு எனப் பன்மை கூறவே, அவர் துயிலெடுப்புத் தொன்றுதொட்டு வரும் என்பதூஉம், சூதர், மாகதர், வேதாளிகர், வந்திகர் முதலாயனோருட் சூதரே இங்ஙனம் வீரத்தால் துயின்றாரைத் துயில் எழுப்புவர் என்பதூஉம், யாண்டும் முன்னுள்ளோரையும், பிறரையும் கூறப்படும் என்பதூஉம் கொள்க"[30] என விளக்குவர். இவற்றால் அரசர்களைத் துயிலெழுப்புதல் தொன்றுதொட்டு வரும் நடைமுறை வாழ்க்கை நிகழ்வு நச்சினார்க்கினியர் காலத்திலும் இருந்துள்ளது என்பதை அறியமுடிகிறது.

''வைகறையில் அரண்மனையுள் முரசு ஒலிக்கும் அது 'பள்ளியெழுச்சி முரசம்' எனப்படும்''[31] என்பர் மா.இராசமாணிக்கனார். அரசனின் துயில் எழுப்புதற்குப் பள்ளி எழுச்சி முரசு அக்காலத்தில் பாடப்பட்டதனை,

**"சூதர் வாழ்த்த மாகதர் நுவல**
**வேதா ளிகரொடு நாழிகை இசைப்ப**
**இமிழ்முர சிரங்க ஏறுமாறு சிலைப்பப்**
**பொறிமயிர்வாரணம் வைகறை இயம்ப"   (மதுரைக்.670-73)**

என்ற அடிகளுக்கு, 'நின்றேத்துவார் வாழ்த்த இருந்தேத்துவார் புகழைச் சொல்ல வைதாளிகர் தத்தம் துறைக்குரியனவற்றை யிசைப்ப நாழிகை சொல்லுவார் நாழிகை சொல்ல ஒலிக்கின்ற பள்ளி யெழுச்சி முரசு ஒலிப்ப ஏறுகள் தம்முள் மாறுபட்டு முழங்க, பொறியினையுடைய மயிரினையுடைய கோழிச்சேவல் விடியற்காலத்தே அறிந்து கூவ' என நச்சினார்க்கினியர் தம் உரையுள் குறிப்பிடுகின்றார்.

**பட்டம்**

எட்டி, காவிதி, ஏனாதி முதலிய பட்டங்கள் அக்காலத்தில் வழங்கப்பட்டன. ''அரசாங்க அலுவலர்க்கு அல்லது நாட்டிலிருந்த முக்கியமானவர்களுக்கு மன்னன் வழங்கிய கவுரவம் பொதுவாக மாராயம்''[32] எனப்பட்டது. மாராயங்கள் மூன்று நிலைகளில் வழங்கப்பட்டன. 1.எட்டி, 2.காவிதி, 3. ஏனாதி என்பனவாகும்.

**"மாராயம் பெற்ற நெடுமொழி யானும்"   (தொல்.புறத்.8)**

இவற்றுள் 'மாராயம்' என்பதற்கு இளம்பூரணர், 'உவகை' என்று பொருள் கூறுவர். நச்சினார்க்கினியர், 'வேந்தனால் பெறும் பெருஞ்சிறப்பு எனவும், அச்சிறப்பாவன ஏனாதி, காவிதி முதலிய பட்டங்களும் நாடும் ஊரும் முதலியனவும் பெறுதலுமாம்' எனவும், விளக்கம் தருகிறார்.

''பாண்டியநாட்டுக் காவிதிப்பட்டம் எய்தினோரும்... முதலியோருமாய் முடியுடை வேந்தர்க்கு மகட் கொடைக்கு உரிய வேளாளராம்''[33]

*(தொல்.அகத்.30, ந.உரை) என்பதனால் இப்பட்டம் உயர்ந்த வேளாளருக்கு அக்காலத்தில் அளிக்கப்பெற்றதனை அறியமுடிகிறது.*

*"காவிதி - வேளாளர்க்கு அரசர் கொடுக்கும் பட்டம்; காவிதிப்பூ - காவிதிப்பட்டத்துடன் அளிக்கப்படும் பொற்பூ"*[34] *என்று ந.சி.கந்தையாவின் கருத்தும் இதனை வலியுறுத்தும்.*

**"செம்மை சான்ற காவிதி மாக்களும்" (மதுரைக்.499)**

*என்ற அடிக்கு 'தலைமையமைந்த காவிதி பட்டங்கட்டின அமைச்சரும்' என்று விளக்குகின்றார்.*

**"வருபுனல் கல்சிறை கடுப்ப இடை மறுத்து**
**ஒன்னார் ஒட்டிய செருபுகல் மறவர்" (மதுரைக்.725-726)**

*என்ற அடிகளுக்கு மிக்குவருகின்ற யாற்று நீரிடத்துக் கல்லனை நின்று தாங்கினாற்போலத் தம்படையைக் கெடுத்து மிக்கு வருகின்ற பகைவர் படையை நடுவே தவிர்த்து அவரைக்கெடுத்த போரை விரும்பும் படைத்தலைவர், "வருவிசைப் புனலைக் கற்சிலை போல, ஒருவன் தாங்கிய பெருமையானும்" (தொல்.புறத்.8) என்று வஞ்சித்துறை கூறினார். இது கூறவே முன்னர் மாராயம் பெற்றவர்களே இப்போரைச் செய்வாரென்பது ஆண்டுப் பெற்றாமாகலின், இவர்கள் ஏனாதிப்பட்டம் முதலிய சிறப்புப் பெற்ற படைத்தலைவர் என்பது பெற்றாம். இவ்வுரைகளின் வழி வேளாளரில் சிறந்தோர்க்கும் படைத்தலைவரில் சிறந்தோர்க்கும் ஏனாதி, காவிதி முதலிய பட்டங்கள் அரசனால் வழங்கப் பட்டதனை அறியமுடிகிறது. "ஏனாதி, காவிதி, எட்டி என்பன அக்காலத்து ஒருவரைப் பாராட்டும் முகமாகக் கொடுக்கப்பட்ட சிறப்புப் பெயராகும்"*[35] *என்று கூறும் கு.சுந்தரமூர்த்தியின் கருத்தும் ஈண்டு அரணாக அமைகிறது.*

**அவையம்**

*அரசர்கள் தினமும் அவைக்கு வருதலை நடைமுறையாகக் கொள்வர். அரசர்களது அவையின் தன்மையைத் தொல்காப்பியர்,*

**"எட்டுவகை நுதலி அவையகம்"**[36]

என்பர். இது எட்டுப் பாகுபாட்டுடன் கூடிய அவை என்ற பொருள் தரும். அவ்வெட்டு வகை எவை எனத் தொல்காப்பியர் தெளிவுறுத்தவில்லை.

இளம்பூரணர், "குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவுநிலைமை, அழுக்காறாமை, அவாவின்மை"[37] என்ற எட்டு வகையால் சிறப்புப்பெற்றது அவை என விளக்குவர்.

"அரசனது ஆட்சிக்குழு கூடும் இடம் அவை எனப் பெயர் பெற்றது. அரசனைச் சார்ந்த சான்றோர், பெரியோர் கூடும் இடம் அரசவையாகும்"[38] என்பார் அ.ஆறுமுகம்.

பனம்பூமாலையணிந்த சேரனுடைய நாளோலக்க இருக்கையில் பல சமயத்தாரும் கூடி மாறுபட்டுத் தருக்கம் செய்ததனை,

**"ஒள் பூ கோதை பெருநாள் இருக்கை**
**விழுமியோர் குழீஇ**
**விழைவு கொள் கம்பலை கடுப்ப கல்லென" *(மதுரைக்.524-26)***

என்ற அடிகளுக்கு 'ஒள்ளிய பனந்தாரையுடைய சேரனுடைய பெரிய நாளோலக்க இருப்பிலே, எல்லாக் கலைகளையுமுணர்ந்த சீரியோர் திரண்டு அவன் கேட்பத் தருக்கங்களைக்கூறி விரும்புதல் கொண்ட ஆரவாரத்தை யொப்பக் கல்லென்ற ஓசை நடக்க, பல சமயத்தாரும் தம்மிற்றம் மாறுபட்டுக் கூறுந் தருக்கத்தைச் சேரக் கூறக் கேட்டிருக்கின்ற கம்பலை போல வென்றார்.' இவ்வுரையின் வழி நச்சினார்க்கினியர் அக்காலத்தில் சேரன் அவையில் இருக்கும் போது சான்றோர் பலர் தங்களது கருத்துகளைக் கூறி வினா எழுப்பித் தருக்கம் நிகழ்த்தியதனை விளக்குகின்றார். சேரன் அவைக்களத்தே பல சமயத்தோரும் கூடிச் சொற்போர் புரிவர் என்பதனை,

**"நளைமகழ் கூந்த ஙங்கை நீயும்**
**முறைமையின் இந்த மூதூர் அகத்தே**
**அவ்வவர் சமயத்து அறிபோருள் கேட்டு" *(மணி.வஞ்சி.62:4)***

என வரும் மணிமேகலை அடிகளாலும் அறியமுடிகிறது.

**ஊர்ப்பெயர்கள்**

நச்சினார்க்கினியர் தம் உரையில் ஏரகம், ஆவினன்குடி, வேலூர், சாலியூர், சோழநாடு, அருவாளநாடு, மலைநாடு, காட்டுநாடு, தண்பனை நாடு முதலிய ஊர்ப் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார்.

**"பெரிது உவந்து ஏரகத்து உரைதலும் உரியன்"**

***(முருகு.188-189)***

என்ற அடிக்கு, 'பெரிது மகிழ்ந்து ஏரகமென்கின்ற ஊரிலே இருத்தலுமுரியன்; ஏரகம் மலை நாட்டகத்தொரு திருப்பதி' என்று பொருள் கூறுகின்றார். இதன்வழி ஏரகம் என்ற ஊர் மலைநாட்டில் உள்ள திருப்பதி என்று அறியமுடிகிறது. இருப்பினும் சோழநாட்டிலுள்ள சுவாமிமலை என்று உ.வே.சா. குறிப்பிடுகின்றார்.

**"ஆவினன்குடி சின்னாள் அசைதலும் உரியன்"**

***(முருகு.175-176)***

என்ற அடிக்கு, 'ஆவினன்குடி யென்னும் ஊரிலே சிலநாள் இருத்தலுமுரியன்; இனிச் சித்தன் வாழ்வென்று சொல்லுகின்றவூர் முற்காலத்து ஆவினன்குடி யென்று பெயர் பெற்றதென்றுமாம்' என்று விளக்குகின்றார். நச்சினார்க்கினியர் காலத்தில் ஆவினன்குடி என்னும் ஊர் சித்தன் வாழ்வு என்று வழக்கில் இருந்தமையை அறியமுடிகிறது.

**"திறல் வேல் கேணி பூத்த**
**விறல் வேல் வென்றி வேலூர் எய்தின்"** ***(சிறுபாண்.172-173)***

வேலூர் என்ற ஊரினை விளக்கவந்த நச்சினார்க்கினியர், 'முருகன் கையில் வலியினையுடைத்தாகிய வேலின் நுதிபோல கேணி பூக்கப்பட்ட வெற்றியையுடைய வேலாலே வெற்றியையுடைய வேலூரைச் சேரின், என்றது; நல்லியக்கோடன் தன்பகை மிகுதிக்கு அஞ்சி முருகனை வழிபட்ட வழி அவன் இக்கேணியிற் பூவை வாங்கிப் பகைவரை எறியென்று கனவிற்கூறி அதிற் பூவைத் தன் வேலாக நிரூமித்ததொரு கதை கூறிற்று. இதனாலே வேலூரென்று பெயராயிற்று' என்று விளக்கம் தருகிறார்.

**“குறுபல் ஊர் நெடு சோணாட்டு”  (பட்டினப்.28)**

என்ற அடிக்கு, ‘ஒன்றற்கொன்று அண்ணிதாய்ப் பலவாகிய ஊர்களையுடைய பெரிய சோழநாட்டில், சோழன் நாடென்பது சோணாடென மரூஉ முடிபு. சோழநாட்டுப் பட்டினமென்க’ என்று பொருள் கூறுகின்றார். நச்சினார்க்கினியர் காலத்தில் சோணாடு என்பது சோழநாடு என்று வழங்கி வந்தமையை அறியமுடிகின்றது.

**“வீறு வளம் சுரக்கும் அவன்நாடு படு வல்சியும்” (மலைபடு.68)**

‘பிறர் நாட்டுக்கு இல்லாத செல்வத்தைக் கொடுக்கும் அவன் நாடு விளைகின்ற உணவுகளும், நாடெனவே, மலைநாடும் காட்டு நாடும் தண்பணை நாடுங் கூறினார்’ என்பர்.

**“சீர் சான்ற உயர் நெல்லின்**
**ஊர் கொண்ட உயர் கொற்றவ”  (மதுரைக்.87-88)**

என்ற அடிகளுக்கு, ‘தலைமையமைந்த உயர்ந்த நெல்லின் பெயரைப் பெற்ற சாலியூரைக் கொண்ட உயர்ந்த வெற்றியையுடையவனே’ என்று விளக்குகின்றார்.

**அணிகலன்கள்**

அணிகலன்களையும் ஆடை ஆபரணங்களையும் அணிந்து தன்னை அலங்கரித்துக் கொள்வதில் மனிதன் அளவற்ற ஆசை கொண்டவன். இதில் ஆண், பெண் என்ற பேதம் இல்லை. ஆடைகளால் தன்னை அழகுபடுத்தி அலங்கரித்துக் கொள்வதில் ஆர்வம் காட்டுவது இருபாலர்க்கும் பொதுவான இயல்பே ஆகும். அணிகளால் மட்டுமன்றிப் பலவித மலர்களைக் கொண்டும் அலங்கரித்திருந்தனர். பண்டைய மக்கள் தாங்கள் அணிந்து வந்த நகைகளை மரத்தில் செதுக்கினார்கள். பின்பு ஈயம் அல்லது செம்பை உருக்கி மர அச்சில் வார்த்தார்கள். புற்களையும் நார்களையும் முருக்கிக் கை, கழுத்து, இடை முதலிய இடங்களில் அணிந்தாற் போலவே, பொன் வெள்ளிக் கம்பிகளை முருக்கிப் பல அணிகளைச் செய்தார்கள். உலோகத்தகடுகள் கொண்டு

பழங்களைப் போலவும் விதைகளைப் போலவும் இலைகளைப் போலவும் நகைகளைச் செய்தார்கள்.

ஆயின் அவற்றுக்கு முதற்பெயர்களை இட்டு வழங்கினார்கள். அவை அரைஞாண், தொடி, குழை, மாலை, கத்தரிப்பூ, இலவங்கப்பூ, வளை எனப் பலவாறு பெயர் பெற்றன. மிக மெல்லிய அழகிய கொடிகளால் ஆன இடையணி காலப்போக்கில் 'சில்காழ்' எனவும் 'பல்காழ்' எனவும் பெயர் பெற்றது. வடமொழியில் 'மேகலை' எனப் பல பெயர் பெற்றது. நகைகள் தொடர்பான படிப்படியான வளர்ச்சியைத் தென்னிந்தியாவிற் காணமுடிகிறது. நச்சினார்க்கினியர் காலத்தில் உள்ள மக்கள் அணிந்த அணிகலன்களைத் தனது உரையின் வழிப் பதிவு செய்துள்ளார்.

**தலையணிகள் (தலைக்கோலம்)**

அக்காலத்தில் மகளிர் கூந்தலில் பல்வகையான அணிகலன்களை அணிந்திருந்தனர். சீதேவி யென்னும் தலைக்கோலம், சுறாவினது அங்காந்த வாயாகப் பண்ணின தலைக்கோலம், மற்றும் தாமம், முகுடம், பதுமம், கிம்புரி, கோடகம் முதலிய அணிகலன்களை அணிந்திருந்தமையைக் குறிப்பிடுகின்றார்.

**"தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்**
**திலகம் தைஇய தேம் கமழ் திருநுதல்**
***மகரப்பகுவாய் தாழமண்ணுறுத்து"* (முருகு.*23-25*)**

என்ற அடிகளுக்கு, 'சீதேவி என்னும் தலைக்கோலத்துடன் வலம்புரி வடிவாகச் செய்த தலைக்கோலத்தையும் வைத்தற்குரிய இடத்தே வைத்து, திலகமிட்ட மணநாறுகின்ற அழகினையுடைய நெற்றியின் கண்ணே சுறாவினது அங்காந்த வாயாகப் பண்ணின தலைக்கோலம் தங்கப்பண்ணி' என்று பொருள் கூறுகின்றார்.

***"சுறவு வாய் அமைந்த சுரும்பு சூழ் சுடர் நுதல்"***
***(பெரும்பாண்.385)***

என்ற அடிக்கு, 'மகரவாயாகிய தலைக்கோலத்தைச் சேர்த்தின சுரும்புகள் சூழும் ஒளியையுடைய நுதலினையும்' என்று உரை விளக்குகின்றார். இவற்றின் வழி நெற்றியின்கண் சுறாவினது வாயாகப் பண்ணின தலைக்கோலம் அணிந்தமை புலப்படுகின்றது.

சீதேவி யென்னும் தலைக்கோலம், சுறாவினது வாய் போன்று பண்ணின தலைக்கோலம் முதலியவற்றை மகளிர் தலையில் அணிந்திருந்தமையை இவ்வுரையின் வழி அறியமுடிகிறது.

**"ஐவேறு உருவின் செய்வினை முற்றிய முடியொடு**
**விளங்கிய முரண்மிகு திருமணி"** ***(முருகு.83-84)***

என்ற அடிக்கு, 'ஐந்தாகிய வேறுபட்ட வடிவினையுடைய முடிக்குஞ் செய்யுந் தொழிலெல்லாம் முற்றுப்பெற்ற முடியோடே கூடி விளங்கிய ஒன்றற்கொன்று மாறுபாடு மிகும் அழகினையுடைய மணி. ஐவேறுருவு, தாம முகுடம் பதுமம் கிம்புரி கோடமிவை முடிக்கைவே றுருவே' என்று உரை விளக்கம் அளிக்கின்றார். இவ்வைந்து உறுப்புகளும் ஒருங்கே அமையப்பெற்ற விலை மதிப்பற்ற வேலைப்பாடு நிறைந்த முடியை அணிந்திருந்தமையை அறியமுடிகிறது.

தொல்காப்பியம் அரசர்க்குரிய உறுப்புகளுள் ஒன்றாக முடியையும் கூறுகின்றது.

**"தாரும் முடியும் நேர்வன பிறவும்"** ***(தொல்.1573)***

என்ற நூற்பாவின் வழி அரசர்க்குரிய உறுப்புகளுள் முடியும் ஒன்றெென்பதனை அறியமுடிகிறது. "தாமம், முகுடம், பதுமம், கோடகம், கிம்புரி" ஆகிய ஐந்தும் முடியுறுப்புகள் எனத் திவாகரமும் பிங்கலந்தையும் கூறுகின்றன.

**காதணிகள்**

தொடக்கக் காலத்தில் இயற்கைப் பொருளாகிய தாவரங்களையும், செடி, கொடிகளையும், மலர்களையும் ஆபரணம் போன்று அணிந்தனர்.

காதில் தளிரை அணிந்தனர். அதனைக் குழை என்று கூறினர். காதில் பூ இதழ்களை அணிந்தனர். பூ இதழ்கள் தோடு என்று பழங்காலத்தில் பெயர் பெறும். இப்போது காதணியைத் தோடு என்கின்றோம். நச்சினார்க்கினியர் காதில் அணியக்கூடிய அணிகலனை மகரக்குழை, தாளுருவி என்று குறிப்பிடுகின்றார்.

**"சிறு குழை துயல் வரும் காதின்" (பெரும்பாண்.161)**

'தாளுருவி அசையும் காதினையும்' என்று உரை விளக்குகின்றார். இதன்வழி காதில் அணியும் அணியைத் தாளுருவி என்று கூறும் வழக்கம் இருந்தமை புலப்படுகின்றது.

**தொடி**

கைகளிலும் தோளிலும் தொடுத்துக் கொண்ட அணி 'தொடி' எனப்பட்டது. ஒளி பொருந்திய தொடி 'ஒண்டொடி' எனவும், தொடிகளுள் சிறந்ததாக ஆராய்ந்து அணியப்பெற்றது 'செறிதொடி' எனவும், பசும்பொன்னால் அல்லது பசிய மணிகளால் ஆன தொடி 'பைந்தொடி' எனவும் சங்க இலக்கியத்தில் கூறப்படுகின்றன. இவை கைவளையாகவும், தோள்வளையாகவும் பயன்படுத்தப்பட்டன. அரசர், வீரர் போன்றோர் அணிந்த தொடி 'வீரவளை' எனவும், பெண்கள் முன்கை வளை 'குறுந்தொடி' எனவும், தோவளை 'தொடி' எனவும் பெயர் பெற்றது. நச்சினார்க்கினியர் பெண்கள் கைவளையைத் 'தொடி' என்ற பெயரிலேயே குறிப்பிடுகின்றார்.

**"ஆய்கோல் அவிர்தொடி விளங்கி வீசி" (மதுரைக்.563)**

என்ற அடிக்கு 'அழகிய திரட்சினையுடைய விளங்குகின்ற தொடி' என்று உரை கூறுகின்றார். மேலும்,

**"ஆய் தொடி மகளிர்" (மதுரைக்.712)**

என்பதற்கு 'நன்கு ஆராய்ந்து செய்யப்பட்ட தொடி' என்று விளக்குகின்றார்.

**"வளமனை பூந்தொடி மகளிர்"** ***(குறிஞ்சிப்.223-224)***

*என்ற அடிக்கு 'பொலிவுபெற்ற தொடி' என்று பொருள் கூறுகின்றார். இவ்வுரையின் வழி பெண்கள் அணியும் முன்கைவளை நச்சினார்க்கினியர் காலத்தில் 'தொடி' என்ற பெயரில் வழங்கப்பட்டிருப்பதனை அறியமுடிகிறது. ஆனால் இக்காலத்தில் இப்பெயர் வழக்கில் இல்லை எனலாம்.*

**கையணிகள்**

**வளையல்**

*வளையல்களை அன்று முதல் இன்று வரை அணிந்து வருகின்றனர்.*

**"வணங்கு இறை பணைதோள் வயக்குறு வந்திகை"** ***(மதுரைக்.414)***

*என்ற அடிக்கு, 'வளைந்த சந்தினையுடைய மூங்கில் போலும் தோளினையும் விளக்க முற்றிய கைவந்தியினையும்' என்று உரை விளக்குகின்றார். கையில் அணியும் அணியைக் கைவந்தி என்று நச்சினார்க்கினியர் காலத்தில் கூறப்பட்டுள்ளமையை அறியமுடிகிறது.*

*உ.வே.சாமிநாதையர் "கைவந்தி கையில் தோளின் கீழ் அணியப்படும் ஆபரணம்; இப்பெயர் வழக்கிலுமுள்ளது"*[39] *என்பர்.*

*கைவந்தி என்பதற்குப் பொ.வே.சோமசுந்தரனார் அவர்கள், "கைவந்தி ஒரு மகளிரணி; ஆடையுமாம் தோள்வந்தி - என இக்காலத்தே (தோவந்தி) மகளிர் மேலாடையை வழங்குதலுமுண்டு"*[40] *என்று குறிப்பிடுகின்றார். தற்பொழுது இராமநாதபுரம் மாவட்ட மக்களிடம் மகளிர் மேலாடையைத் தோமாலை என்று கூறும் வழக்கம் காணப்படுகின்றது.*

**வளையல்**

**"பொலம்பொடி தின்ற மயிர்வார் முன்கை**
**வலம்புரி வளை"** ***(நெடுநல்.141-142)***

*என்ற அடிகளிலுள்ள 'வலம்புரி வளை' என்பதற்கு, 'வலம்புரிச் சங்கை அறுத்துச் செய்யப்பட்ட வளை' என்று உரை விளக்குகின்றார். மேலும்,*

**“வெள்ளி வள்ளி வீங்கு இறை மெத்தென்**

**பணைத் தோள்” (நெடுநல்.36-37)**

என்ற அடிகளுக்கு உரை வரைகின்ற போது, ‘வெளுக்கப்பட்டதாகிய சங்கு வளை இறுகின இறையினையுடைய மெத்தென்ற பணை போலுந் தோளினையும்’ என்று விளக்குகின்றார். மகளிர் சங்கினால் செய்யப்பட்ட வளையல்களை அணிந்திருந்தமை புலப்படுகின்றது. இன்றும் சங்கு வளையல்கள் அணியும் வழக்கம் காணப்படுகின்றது.

**விரலணி**

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்,

**“பொலஞ்செயப் பொலிந்த நலம்பெறு விளக்கம்”**

**(மதுரைக்.719)**

அணிந்திருந்தான். இதற்கு, ‘பொன்னாற் செய்கையினாலே பொலிவு பெற்ற மணிகள் அழுத்தின மோதிரம்’ என்று இவ்வடிக்கு நச்சினார்க்கினியர் விளக்கம் கூறுகின்றார். மேலும் பாண்டிமாதேவியின் மோதிரம்,

**“வாளைப் பகுவாய் கடுப்ப வணக்குறுத்துச்**

**செவ்விரல் கொளீஇய செங்கேழ் விளக்கம்”**

**(நெடுநல்.143-144)**

என்று நெடுநல்வாடையின் அடிகள் சுட்டுகின்றன. இவ்வடிகளுக்கு, ‘வாளையினது பகுத்த வாயை ஒக்க முடக்கத்தை உண்டாக்கிச் சிவந்த விரலிடத்தேயிட்ட சிவந்த நிறத்தையுடைய ‘முடக்கு’ எனும் மோதிரம்’ என்று உரை விளக்கம் தருகின்றார்.

**“வாளைப்பகுவாய் வணக்குறு மோதிரம்” (சிலம்பு.6:95)**

என்ற அடிக்கு, ‘முடக்கு மோதிரம்’ என்று அரும்பதவுரையாசிரியர் உரை வரைந்துள்ளமையும், ‘நெளி’ என்று அடியார்க்கு நல்லார் வரைந்திருத்தலும் சுட்டத்தக்கது. இவற்றின் வழி நச்சினார்க்கினியர் காலத்தில் கூறப்பட்ட முடக்கு எனும் மோதிரம் இன்று ‘நெளி’ எனும் பெயரில்

நெளிமோதிரம் என வழங்கப்பட்டு வருகின்றது. அடியார்க்கு நல்லாரும் ‘நெளி’ என்று கூறியுள்ளார்.

**இடை அணிகள்**

குறும்பொறி, சில்காழ், பருமம், பல்காழ், பைங்காழ் போன்ற இடையணிகள் பற்றிய பதிவுகளை உரையில் கூறியுள்ளார்.

**குறும்பொறி**

முருகப்பெருமான் குறமகளிரொடு குரவைக் கூத்தாடுகையில் அரையில் குறும்பொறி அணிந்திருப்பான் என்று திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகின்றது.

> ***“குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்***
> ***மருங்கு”  (முருகு.213-214)***

இவற்றுள் ‘குறும்பொறி’ என்பதற்கு ‘உதரபந்தம்’ என்று உரை கூறுகின்றார். இவற்றின்வழி குறும்பொறி என்பதற்கு நச்சினார்க்கினியர் காலத்தில் உதரபந்தம் என்று கூறுகின்ற வழக்கம் இருந்ததனை அறியமுடிகிறது.

**சில்காழ், பல்காழ், பருமம்**

திருப்பரங்குன்றத்துச் சோலையில் விளையாடிய சூரர மகளிர் பல மணிகள் கோத்த சில்காழ் எனும் அணியை அணிந்திருந்தனர் என்பதை,

> ***“பல்காசு நிரைத்த சில்காழ்”  (முருகு.16)***

என்ற அடி விளக்குகின்றது. இவற்றிற்குப் பல மணிகள் கோத்த ஏழு வடமாகிய மேகலை எனப் பொருள் கூறுகின்றார். மேலும்,

> ***“எண்கோவை காஞ்சி எழுகோவை மேகலை,***
> ***பண்கொள், சலாபம் பதினாறு - கண்கொள்***
> ***பருமம் பதினெட்டு முப்பத் திரண்டு***
> ***விரிசிகை என்றுணாற் பாற்று”***

என்று தன்னுடைய கூற்றுக்கு மேற்கண்ட வெண்பாவினையும் சான்றாகச் சுட்டிக் காட்டியுள்ளார். பல்காழ் என்பதற்கு மேகலை என்று பொருள் கூறுகின்றார். சான்றாக,

**"வண்டிருப் பன்ன பல்காழ்"** *(பொருநர்.39)*

என்ற அடிக்கு, 'பல வண்டினங்களின் இருப்பை ஒத்த பல மணிகள் கோத்த வடங்களையுடைய மேகலை' என்று விளக்குகின்றார். பருமம் என்பதற்கும் மேகலை என்றே பொருள் கூறுகின்றார்.

**"இன்னகைப் பருமம்"** *(முருகு.145-146)*

என்பதற்குக் 'கண்ணுக்கினிய ஒளியினையுடைய பதினெண் கோவையாகிய மேகலை' என்று பொருள் கூறுகின்றார். இவற்றின் வழி சில்காழ், பல்காழ், பருமம் போன்ற இடையில் அணியக்கூடிய அணிகலன்களுக்குப் பெரும்பாலும் மேகலை என்று கூறுகின்ற முறை இருந்தமைப் புலப்படுகின்றது.

**பைங்காழ்**

செல்வ மகளிர் பைங்காழ் அரையில் அணிந்திருந்ததனைப் பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது.

**"பைங்காழ்"** *(பெரும்பாண்.329)*

இதற்குப் பசிய மணிகள் கோத்த வடங்கள் என்று உரை கூறுகின்றார். இவர் காலத்தில் இடையில் அணியக்கூடிய அணிகலன்களை உதரபந்தம், மேகலை, வடங்கள் போன்ற பெயர்களால் வழங்கப் பட்டிருப்பதனை இவரது உரை வழி அறியமுடிகிறது.

**காலணிகள்**

சூரர மகளிர் கால்களில் கிண்கிணி அணிந்திருந்தனர் என்று திருமுருகாற்றுப்படை கூறுகின்றது.

**“கிண்கிணி” (முருகு.13)**

என்பதற்குச் ‘சிறுசதங்கை’ என்று பொருள் கூறுகின்றார். தொண்டை நாட்டுப் பட்டினத்துச் செல்வ மகளிர் தமனியப் பொற்சிலம்பு அணிந்திருந்தனர் என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது.

**“தமனியம்கால பொற்சிலம்பு” (பெரும்பாண்.332)**

இதற்கு நச்சினார்க்கினியர், ‘பொற்பூண்களையுடைய கால்களிடத்தனவாகிய பொன்னாற் செய்த சிலம்பையும்’ அணிந்திருந்தனர் என்று உரை விளக்குகின்றார். இவற்றின் வழி அக்காலச் செல்வ மகளிர் பொன்னால் செய்யப்பட்ட சிலம்பு, காப்பு, கொலுசு முதலிய காலணிகளையும் அணிந்திருந்தனர் என்பது தெளிவாகிறது.

மதுரை நகரச் செல்வமகளிர் பொன்னால் செய்த சிலம்பினை அணிந்திருந்தனர்.

**“தெள்ளரிப் பொற்சிலம்பு” (மதுரைக்.444)**

என்ற அடிக்கு, ‘தெள்ளிய உள்ளின் மணிகளையுடைய பொற்சிலம்புகள்’ என்று நச்சினார்க்கினியர் உரை கூறுகின்றார். பாண்டிமாதேவியின் முத்துப்பரல்களைக் கொண்ட சிலம்பையும், கண்ணகியின் மாணிக்கப் பரல்களைக் கொண்ட சிலம்பையும் சான்றாகக் கூறலாம்.

சோழநாட்டுக் குறும்பல்லூர்களில் வாழ்ந்த செல்வர் வீட்டுச் சிறுவர்கள், ‘பொற்காழ் புதல்வர்’ என்று அழைக்கப்பட்டனர்.

**“பொற்காற்புதல்வர்” (பட்டினப்.24)**

என்பதற்குப் ‘பூண் அணிந்த தாளினையுடை சிறார்’ என்று பொருள் கூறுகின்றார். மேற்கண்ட உரைகளின் வழி செல்வர் வீட்டு மகளிர், சிறுவர் போன்றவர்கள் கால்களில் பொன்னால் செய்த சிலம்பு, காப்பு முதலியவை அணிந்திருந்தமைப் புலப்படுகிறது. இன்றும் பொற் சிலம்பு, காப்பு முதலிவற்றைச் செல்வ மகளிர், சிறுவர் அணியும் வழக்கம் காணப்படுகின்றது.

**கழுத்தணிகள்**

*கழுத்தில் தொங்கவிடப்பட்டு மார்பை அணி செய்யும் அணிகளைக் 'கழுத்தணிகள்' அல்லது 'மார்பணிகள்' என்கிறோம்.*

**பொன்னரி மாலை**

*கரிகாலன் பொற்கம்பிகள் கொண்டு நுண்மையாகவும் நெருக்கமாகவும் பின்னப்பட்ட பொன்னரி மாலையைப் பாடினிக்குப் பரிசளித்தான் என்று பொருநராற்றுப்படை கூறுகின்றது.*

**"நூலின் வலவா நுணங்கரில் மாலை"** ***(பொருநர்.161)***

*என்ற அடிக்கு, 'நூலாற் கட்டாத நுண்மையையும் பிணக்கத்தையும் உடைய பொன்னரி மாலை' என்று நச்சினார்க்கினியர் உரை விளக்குகின்றார்.*

**நுண்பூண்**

**"நுண்பூண் ஆகம் வடுக்கொள முயங்கி"** ***(மதுரைக்.569)***

*என்ற அடியிலுள்ள 'பூண்' என்பதற்குப் பூண்கள் என்று பொருள் விளக்குகின்றார்.*

**ஒண்பூண்**

*பட்டினப்பாலை கரிகாலன் ஒண்பூண் அணிந்திருப்பவன் என்று குறிப்பிடுகின்றது.*

**"ஒள்பூண்"** ***(பட்டினப்.297)***

*இதற்கு நச்சினார்க்கினியர் 'ஒள்ளிய பேரணிகலன்கள்'என்று உரை கூறுகின்றார்.*

**பெரும்பூண்**

*மலைபடுகடாம் நன்னனைப் பெரும்பூண் நன்னன் என்று கூறுகின்றது.*

**"பெரும்பூண்"** ***(மலைபடு.63)***

*என்பதற்குப் 'பேரணிகலன்கள்' என்று பொருள் தருகின்றார்.*

**பொலம்பூண்**

**"*பொலம்பூண் ஐவர்*" (*மதுரைக்.775*)**

என்ற அடிக்கு, 'பொன்னாற் செய்த பேரணிகலன்களையுடைய ஐம்பெரும் கேளிர்' என்று உரை விளக்குகின்றார்.

**இழை**

**"*இழை புனைநர்*" (*மதுரைக்.512*)**

எனும் தொடருக்கு, 'இழைக்கப்பட்ட நகையாகச் செய்பவர்' என்று பொருள் கூறுகின்றார். பொன்னைக் கம்பிகளாக இழைத்துச் செய்யும் சரடு போன்றவற்றையும், கல்லிழைத்துப் பொன்னில் பதித்துச் செய்யப்படுவனவும் 'இழை' என்று அழைத்திருக்கக்கூடும் எனலாம்.

**"*ஒண் பொன் அவிரிழை தெழிப்ப*" (*மதுரைக்.666*)**

என்ற அடிக்கு, 'ஒள்ளிய பொன்னாற் செய்து விளங்கும் சிலம்பு முதலியன ஒலிப்ப இயங்கினர்' என்று பொருள் கூறியுள்ளார்.

பாண்டிமாதேவி பேரணிகலன்கள் அணிந்திருந்தாள் என்பதை,

**"*தமனியம் வளைஇய தாவில் விளங்கிழை*" (*மதுரைக்.704*)**

என்ற அடியில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வடிக்கு நச்சினார்க்கினியர் 'பொன் நடு அழுத்தின மணிகளைச் சூழ்ந்த பேரணிகலங்கள்' என்று உரை கூறுகின்றார்.

**"*முற்றிழை மகளிர்*" (*பட்டினப்.296*)**

என்பதற்கு, 'மெய்ம்முழுவதும் அணிந்த அணிகலங்கள்' என்று பொருள் கூறுகின்றார்.

**கலம்-கலன்**

சோழன் கரிகாலன் அரண்மனையில் 'கள்' பொலங்கலத்தில் வார்த்துப் பொருநருக்குத் தரப்பட்டது என்று பொருநராற்றுப்படை கூறுகின்றது. இதேபோல் பாண்டியன் நெடுஞ்செழியன் அரண்மனையிலும்

கள் பொலங்கத்திலே கொடுக்கப்பட்டது என்பதை மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது. இவ்விரு இடங்களிலும் 'கலம்' எனும் சொல் 'பாத்திரம்' எனும் பொருளிலேயே ஆளப்பட்டுள்ளது. ஆயினும் இக்கலம் எனும் சொல் நச்சினார்க்கினியர் காலத்தில் நகையைக் குறிக்கவும் ஆளப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. சான்றாக,

**"நன்கலஞ் சீப்ப"  (மதுரைக்.685)**

இவற்றுள், 'நன்கலஞ்' என்பதற்கு, 'நல்ல பூண்கள்' என்று பொருள் விளக்குகின்றார்.

**"முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை**
**நேர்வருங் குரைய கலம்"  (குறிஞ்சிப்.13-14)**

என்ற அடிகளிலுள்ள 'கலம்' என்பதற்குப் 'பூண்' என்று உரை விளக்குகின்றார்.

**"கலம்பெறு கண்ணுளர்"  (மலைபடு.50)**

என்று கூத்தர் குறிக்கப்பட்டுள்ளார். இவ்வடிக்கு நச்சினார்க்கினியர், 'பேரணிகலங்களைப் பெறும் கூத்தர்' என்று பொருள் கூறுகின்றார்.

**"நனந்தலைந் தேஎத்து நன்கலன் உய்ம்மார்"  (மதுரைக்.322)**

இவற்றுள் 'கலன்' என்பதற்குப் 'பேரணிகலங்கள்' என்று உரை விளக்குகின்றார்.

**"கலனசைஇக் கொட்கும் கண்மா றாடவர்" (மதுரைக்.641-642)**

இவ்வடியில் உள்ள 'கலன்' என்பதற்குப் 'பேரணிகலங்கள்' என்று பொருள் கூறுகின்றார். கழுத்தில் அணியக்கூடிய அணிகலன்களை மாலை, பூண், கலன், அல்லது கலம், இழை போன்ற சொற்களால் சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ளன. இதற்கு நச்சினார்க்கினியர் பெரும்பாலும் பேரணிகலங்கள் என்று பொருள் விளக்குகின்றார். இவ்வுரை விளக்கத்தின் வழி நச்சினார்க்கினியர் காலத்தில் கழுத்தில் அணியக்கூடிய அணிகலன்களைப் 'பேரணிகலங்கள்' என்று வழங்கப்பட்டிருக்கக்கூடும் என்பதை அறியமுடிகிறது. இன்று பேரணிகலங்கள் என்று கூறும்முறை காணப்படவில்லை. செயின், ஆரம் போன்ற பெயர்களால் குறிப்பிடுகின்றனர்.

**ஆடைகள்**

'உண்டி முதற்றே உலகம் இயங்கினும்' உண்டியையும் விட உலகில் இன்றியமையாதது ஆடை என்று சான்றோர் குறிப்பிடுவர். இதனை,

**"கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்**
**உண்பதூஉம் இன்றிக் கெடும்" (குறள்.166)**

என்னும் வள்ளுவரின் வாக்குத் தெளிவாக்கும். தெய்வப்புலவர் இக்குறளில் உயிர் கொடுக்கும் உணவினை முதலில் கூறவில்லை. மயிர் நீப்பின் உயிர் வாழாக் கவரிமான் அன்ன மாந்தர்க்குத் தேவையான உடையினைக் குறிப்பிடுகின்றார். 'ஆடையில்லா மனிதன் அரை மனிதன்', 'ஆள்பாதி ஆடைபாதி' என்ற தமிழர் பழமொழிகளும் இதன் காரணமாகத் தோன்றியிருக்கக்கூடும். அறிஞர் பலரும் ஆடையின் மேன்மையினைத் தம் சொற்களால் சிறப்பித்துள்ளனர்.

"Clothes in short, in primitive as in modern time are not the covering of the bady, .............. the vesture of the soul" (Encyclopaedia Britanica, Vol.7, P.677)

"In the life of a man the first and foremost are food and clothings. To man these two are fetters and chains which bind him to the field of re birth." (Costumes Textiles Cosemetics and Coiffure, Dr.Motichandra, P.49)

"தன்னையும், தன்னைச் சுற்றியுள்ள மாந்தரின் சிறப்பியல்புகளையும் உணர்த்தி நிற்பதில் முதன்மை பெறுவனவற்றுள் ஆடையும் ஒன்றென்பார்"[41] கு.பகவதி.

**ஆடை பற்றிய சொற்கள்**

கு.பகவதி, கி.பி.12ம் நூற்றாண்டு வரையிலும் ஆடையைக் குறிக்க பல்வேறு சொற்கள் இருந்தமையைக் குறிப்பிடுகின்றார். சங்க காலத் தமிழர் பயன்படுத்திய சொற்கள், "உடை, தழை, துகில், கலிங்கம், அறுவை, சிதார், ஆடை, உடுக்கை, கச்சு, ஈரணி, தானை, போர்வை, காழகம், கச்சம், கச்சை, வம்பு, மடி, பட்டு, சீரை, படம், படாம், பூங்கரை நீலம், உத்தரீயம், கம்பலம்,

கவசம், தூது, மடிலை, சிதர்வை, சிதவல், வார், மெய்ப்பை, துகின்முடி, மெய்ம்மறை, மெய்யாப்பு, வாலிது, வெளிது, புட்டகம், நூல் படுக்குடுக்கை"[42] போன்றவை என்பர்.

நீதிநூற் காலத்தில் புதியனவாக, "அரத்தம், ஈர்ங்கட்டு, கோடி, கூறை, புடைவை, மாசுணி, பட்டம்"[43] அமைகின்றன.

காப்பியங்களில் சிலப்பதிகாரத்தில் "கஞ்சுகம், மணிமேகலையில் உடுப்பு, சிதர் சிதவற்றுணி, வட்டுடை, சீவகசிந்தாமணியில், கோசிகம், பஞ்சி, கருவி, சாலிகை, பூண், ஆசு, கிழி, வட்டு, தலைக்கீடு, கம்பராமாயணத்தில் கோதை, சீரம், சேலை, நீலி, வற்கலை, புட்டில், கலை"[44] போன்றவையும் குறிப்பிட்டுள்ளதைத் தமது நூலில் கூறியுள்ளார்.

"நாலாயிர திவ்வியப் பிரபந்தம், காம்பு, நேத்திரம் மேலாப்பு ஆகியவற்றையும், பெரியபுராணம், பாவாடை, கீள், கோவணம்"[45] போன்ற பெயர்களையும் சுட்டுகின்றன என்பர்.

இவற்றின் வழி ஆடைக்கு ஒவ்வொரு காலக்கட்டத்தில் பல்வேறு பெயர்களை வழங்கிவந்தமையை அறியமுடிகிறது.

நச்சினார்க்கினியர் காலத்தில் ஆடைகளை வடங்கள், புடவை, அறுவை, சீரை, துகில், சட்டை, உடுக்கை, உடை, கச்சு, மடிப்புடவை போன்ற சொற்களால் வழங்கினமையைத் தனது உரையின் வழிப் பதிவு செய்துள்ளார்.

**வடங்கள்**

நச்சினார்க்கினியர் காலத்தில் புடவையை வடங்கள், சீரை எனவும் ஆடவர் உடையையும் புடவை எனக்கூறும் வழக்கம் இருந்தமையை அவரது உரை வழி வெளிப்படுத்தியுள்ளார்.

**"காழ் திருந்து அல்குல் திளைப்ப உடீஇ"** **(முருகு.204)**

என்ற அடிக்கு, 'வடங்கள் (புடவை) திருத்தும் அல்குலிடத்தே அசையும்படி உடுத்து' என்று பொருள் கூறுகின்றார்.

**சீரை**

"சீரை என்ற சொல் இன்று காணக்கிடைக்காத ஒன்று. எனினும், 'சீலை' சீரையின் மாற்றமே அதாவது மரவுரியை உணர்த்திய சீரை பின்னர் ஆடையைக் குறித்தது. இதன் ஈற்றுயிர் ஏறிய ரகரம் லகரமாகத் திரிந்து மருவலாற் சீலை என்றாயிற்று. ஆரை ஆலை என்றார் போல"[46] என்பர். சேலையினின்றும் சீலை திரிந்திருக்கக் கூடும் என்பதற்குக் கு.பகவதி, "கண் வடிவம் எழுதப்பட்ட ஆடையினைக் கண்டாங்கி என்று அழைத்தாற் போன்று (இன்று மகளிரின் சேலையினைப் பொதுவாகக் கண்டாங்கி என்பர்) சேல் வடிவம் எழுதப்பட்டதன் காரணமாகத் துணி, சேலை என்று வழங்கப்பட்டிருக்கலாம். சேலை - சீலை மாற்றம் இயல்பானது"[47] என்று குறிப்பிடுகின்றார். தற்போது வழக்கத்தில் மக்கள் சேலை, சீலை என்று கூறுகின்ற பழக்கம் காணப்படுகின்றது. ஆதலால் சீலை என்ற பெயர் மருவியே சேலை என்ற பெயர் பெற்றிருக்கக்கூடும். நச்சினார்க்கினியர் புடவையை 'சீரை' என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளார்.

***"நின் அரை பாசி அன்ன***
***சிதர்வை நீக்கி" (பெரும்பாண்.467-468)***

என்ற அடிகளுக்கு, 'நின்னுடைய அரையிற் கிடந்த கொட்டைப்பாசியின் வேரையொத்த சிதரின் சீரையைப் போக்கி' என்று உரை எழுதுகின்றார். இவற்றுள் சீரை என்பது தற்போது வழங்கி வரும் சேலையினைக் குறிக்கின்றது. சீரை என்பதற்கு மரவுரி என்று பொருள் கூறுகின்றனர்.

***"சீரை தைஇய உடுக்கையர்" (முருகு.126)***

என்ற அடிக்கு, 'மரவுரியை உடையாகச் செய்த உடையினையுடையர் இதற்குக் கற்றோய்த்தல் முதலிய செய்த உடுக்கையை என்பாருமுளர்' என்று பொருள் கூறுவர்.

**ஆணின் உடையினையும் புடைவை எனல்**

புடைவை என்பதற்கு, "அடுத்தலால் ஆடை பெயர் பெற்றது போன்று, பக்கத்தில் வைக்கப்படுவதலால் (புடை+வை) புடைவை எனப் பெயர்

பெற்றிருக்கக் கூடும். புடைவை பற்றிய குறிப்புகள் உரையாசிரியர்களின் உரையிலும், சான்றுகள் வழியாகவுந்தான் தெரியவருகின்றதே தவிர இலக்கியத்தில் இடம் பெற்றதாகத் தெரியவில்லை''[48] என்று விளக்கம் அளிக்கின்றார். நச்சினார்க்கினியர் உடை, கலிங்கம் என்ற சொற்களுக்குப் புடைவை என்று உரை விளக்குகின்றார். மேலும், ஆணின் உடையினையும் புடைவை என்ற சொல் குறிப்பிடும் வழக்கம் இருந்தமையும் அறியமுடிகிறது.

**"மறிந்து வீங்கு செறிவு உடை"** ***(முல்லைப்.59)***

என்ற அடிக்கு, 'அச்சம்மட்டி மறையும்படி வடிம்பு தாழ்ந்து பெருக்குஞ் செறிதலையுடைய புடைவையுடையினையும்' என்று உரை விளக்கம் தருகின்றார்.

**"கலிங்கம் பகர்நரும்"** ***(மதுரைக்.513)***

என்ற அடியில் உள்ள கலிங்கம் என்பதற்கு, 'புடைவைகளை விற்பாரும்' என்று பொருள் கூறுகின்றார். இவற்றின் வழி இருபாலரின் உடையினையும் புடைவை எனக் கூறுகின்ற வழக்கம் நச்சினார்க்கினியர் காலத்தில் இருந்தமைப் புலப்படுகின்றது.

**மடிப்புடைவை**

''மடித்து வைக்கப் பெற்றமையின் நெய்த துணியின் பெயர் மடி என்றாயிற்று. இது திராவிடமொழிச் சொல் என்பதைத் தமிழ், கன்னடம், துளு, தெலுங்கு, கோடா போன்ற பல மொழிகளிலும் பயிலப்படும் தன்மை பகரும்''[49] என்பர். நச்சினார்க்கினியர் தூய்மை, சிறப்புக்கருதி ஆடையினை மடிப்புடைவை, தூயமடி என்ற சொற்களால் குறிப்பிட்டுள்ளதை,

**"தெள் திரை அவிர் அறல் கடுப்ப ஒண்பல்**
**குறியவும் நெடியவும் மடி தரூஉ விரித்து"** ***(மது519-520)***

என்ற அடிகளுக்கு உரை வரைகின்ற போது, 'தெளிந்த திரையில் விளங்குகின்ற அறலையொப்ப ஒள்ளிய பலவாகிய சிறியனவும் நெடியனவுமாகிய மடிப்புடைவைகளைக் கொண்டு வந்து விரித்து' என்று பொருள் கூறுகின்றார்.

**“காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத்**

**தோடுஅமை தூமடி விரித்த சேக்கை” (நெடுநல்.134-135)**

என்ற அடிகளுக்கு, ‘கஞ்சியைத் தன்னிடத்தே கொண்ட கழுவுதலுற்ற துகிலின் தூய மடித்து விரித்த செங்கழுநீர் முதலியவற்றின் இதழ்கள் பொருந்தின படுக்கை’ என்று உரை கூறுகின்றார். ஆடையின் தூய்மை, சிறப்புக்கருதி மடிப்புடைவை, தூயமடி என்று கூறியுள்ளார். மேலும் துகிலினுக்குக் கஞ்சி இட்டுள்ளதையும் தனது உரையின் வழிப் பதிவு செய்துள்ளார்.

“தூய்மை, சிறப்புக் கருதி அன்று மடித்து வைத்துப் புதிய ஆடையினைத் தூமடி என்று உரைத்த தன்மை மரபாக வழங்கி வந்துள்ள நிலையில், ‘மடி’ என்ற சொல்லே புத்தாடையையும், தூய்மையையும் குறிக்க வழங்குதல் ஆடையின் சிறப்பினையும், இன்றுவரை பொருள் மாற்றமிலாது வழங்கும் தன்மையையும் தெளிவுபடுத்தும்”[50] என்ற கு.பகவதியின் கருத்தும் வலியுறுத்தும்.

“ஈரப் புடைவையைத் தொடாது, உலர வைத்து, பூசைக்கு உடுத்தும் தன்மையில் அதனை மடிப்புடைவை என்று அந்தணர் குறிப்பிடுவது இன்றும் நாம் காணக்கூடியது. பட்டு, கம்பளி இரண்டும் எப்போதுமே மடி என்ற எண்ணமும் அவர்களிடம் உள்ளது”[51] என்று கூறும் கு.பகவதியின் கருத்தும் இதனை மெய்ப்பிக்கும்.

**சட்டை**

“பண்டைத் தமிழன் வரலாற்றில் சட்டை அணியும் பண்பாடு இடம் பெறவில்லை. பிற நாட்டார் தொடர்பு இப்பழக்கத்தை உருவாக்கியது. சட்டை பற்றிய சொற்கள் சட்டையுடன் தமிழரின் தொடர்பினை விளக்கி நிற்கின்றன”[52] என்பார் கு.பகவதி. இன்று சட்டை என்பது ஆண், பெண் இருவரின் மேலாடையைக் குறிக்கப் பயன்படுத்துகின்றோம். சங்க காலத்தில் சட்டையைக் குறிக்கப் பயன்படுத்திய சொற்களுள் மெய்ப்பையும் ஒன்று. நச்சினார்க்கினியர் மெய்ப்பை என்பதற்குச் சட்டை என்று உரை கூறுகின்றார்.

**"மெய்ப்பை புக்கு வெருவருந் தோற்றத்து" (முல்லைப்.60)**

என்ற அடிக்கு, 'சட்டையிட்ட அச்சம் வரும் தோற்றரவினையும்' என்று பொருள் கூறுகின்றார். மேலும்,

**"துகில் முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்கு நடை**

**பெரு மூதாளர் ஏமம் சூழ" (முல்லை.53-54)**

என்ற அடிகளுக்கு, 'மயிர்க் கட்டுக் கட்டிச் சட்டையிட்டை, அனந்தரினையும் பெரிய ஒழுக்கத்தினையுமுடைய மெய்க்காப்பாளர் காவலாகச் சூழ்ந்து திரிய' என விளக்கம் அளிக்கிறார். இவற்றின்வழி காவல் தொழில் புரிவோர் சட்டையிடுகின்ற முறை இருந்தமைப் புலப்படுகின்றது.

**கச்சு**

சங்க காலத் தமிழ் மகளிர் ஆடைகள், மார்பு ஆடை, கச்சு, வம்பு, வார் என்று அழைக்கப்படுகின்றன. இவற்றுள் அதிகச் செல்வாக்குப் பெறுவது கச்சு ஆகும். துணி, பொன் இரண்டாலும் கச்சுகள் செய்யப்பட்டன. பல வண்ணத் துகில்கள் கொண்டு இவை உருவாக்கப்பட்டுள்ளன. பொன்னால் ஆகியது மிக அருகியே காணப்பட்டது.

"வரிந்து கட்டிய ஆடை, கச்சை என்று அழைக்கப்பட, மார்பிலும் வயிற்றிலும் இறுகக் கட்டப்பட்டதன் காரணமாக கச்சு என வழங்கப் பட்டிருக்கலாம். மலையாள மொழியிலும் இச்சொல் வழக்குண்டு"[53] என்று கு.பகவதி, கச்சு என்பதற்கு விளக்கம் அளிக்கிறார். நச்சினார்க்கினியர் மார்பு ஆடைக்குக் கச்சு என்ற சொல்லிலேயே பொருள் விளக்கம் தருகிறார். அவர் காலத்தில் (மேலாடை) மார்பு ஆடையைக் கச்சு என்று அழைக்கப் பட்டிருக்கலாம் என்பதை அவரது உரை வழி அறியமுடிகிறது.

**வம்பு**

மார்பு ஆடையைக் குறிக்கும் வம்பு என்பதற்கு நச்சினார்க்கினியர் 'கச்சு' என்று விளக்கம் அளிக்கின்றார்.

**“வம்பு நிறை முடிநரும்”     (மதுரைக். 514)**

என்ற அடிக்கு, ‘கச்சுக்களைத் தம் தொழிலின் முற்றுபட முடிவாரும்’ என்று உரை கூறுகின்றார்.

**“வம்பு விசித்து யாத்த**
**முகிழ் முலை”    (நெடுநல். 149-150)**

என்ற அடிகளுக்கு விளக்கம் அளிக்கின்ற போது, ‘கச்சை வலித்துக் கட்டின தாமரை முகை போலும் முலையினையும்’ என்று கூறுவர். மேலும்,

**“நல் பலவம்பு களத்தின் கவின்பெற**
**பொலிந்த குன்று கெழு நாடன்”    (குறிஞ்சிப். 197-199)**

என்ற அடிளுக்கு, ‘நன்றாகிய பலவாகிய கச்சு பரந்த களம்போலே அழகுபெறப் பொலிவு பெற்ற மலை பொருந்தின நாடன்’ என்று உரை கூறுகின்றார். கச்சு என்ற சொல்லிற்கு ‘கச்சு’ என்று உரை எழுதுகின்றார்.

**“இரவு பகல் செய்யும்திண் பிடி ஒள்வாள்**
**விரவு வரி கச்சின் பூண்ட மங்கையர்”    (முல்லைப். 46-47)**

என்ற அடிகளுக்கு, ‘இராப்பொழுதைப் பகற்பொழுதாக்கும் திண்ணிய ஆசினையுடைய ஒள்ளிய வாளை விரவின நிறத்தையுடைய கச்சினாலே பூண்ட மங்கையர்’ என விளக்கம் தருகிறார்.

**“நிறம் கவர்பு புனைந்த நீலக் கச்சினர்”    (மதுரைக். 639)**

என்ற அடிக்கு, ‘பல நிறங்களைத் தன்னிடத்தே கைக்கொண்டு செய்யப்பட்ட நீல நிறத்தையுடைய கச்சினையுடையராய்’ என்றது கட்டின சேலையிடத்தே செருகித் துடையுடனே சேர்த்துக் கிடக்குஞ் சொட்டையின் மேலே கட்டின நீலக்கச்சினரென்றவாறு. அது தெரியாமல் துடையுடனே சேர்ந்து கிடத்தலிற் குறங்கிடைப் பதித்த என்று விளக்கம் அளிக்கின்றார். இவ்வுரைகளின் வழி மகளிரின் மார்பு ஆடையைக் குறிக்க ‘கச்சு’ என்ற சொல் நச்சினார்க்கினியர் காலத்தில் வழங்கப்பட்டுள்ளது. பல வண்ணங்களால் செய்யப்பட்ட கச்சினை மகளிர் அணிந்திருந்தமையும் புலப்படுகின்றது. இன்று மகளிரின் மார்பு ஆடையைக் குறிக்க, இரவிக்கை, பிரா, சட்டை, பாடி போன்ற

பெயர்கள் வழங்கப்படுகின்றன. இன்று கச்சு என்ற சொல் பயன்பாட்டில் இல்லை எனலாம்.

**அறுவை**

“நெய்த துணி அறுக்கப்பட்டமையால் அறுவை”[54] என்பர். “பிற திராவிட மொழிகளிலும் அமைவது இச்சொல். கன்னடம் துணியையும், துளு, தெலுங்கு இரண்டும் பழைய துணியைக் குறிக்கவும் இதனைப் பயன்படுத்துகின்றன”[55] என்று கு.பகவதி கூறுகின்றார். நச்சினார்க்கினியர் மகளிர் உடுத்தும் பாவாடையை அறுவை என்று குறிப்பிடுகின்றார்.

**“முரண் கொள் உருவின் இரண்டு உடன் உடீஇ” (முருகு.230)**

என்ற அடிக்கு, ‘தம்மிற் பகைத்தல் கொண்ட வடிவினையுடைய இரண்டு அறுவையை உள்ளொன்றும் புறம்பொன்றுமாக உடுத்து’ என்று விளக்குகின்றார். இவ்வுரையில் ‘அறுவை’ என்பது மகளிரின் உள்ளாடை, வெளியாடை முதலியவற்றைக் குறிப்பதனை அறியமுடிகின்றது.

**துகில்**

சங்க காலத்தில் ஆடையைக் குறிக்கப் பயன்படுத்திய சொற்களுள் ஒன்று துகில் என்பதாகும். துகில் என்பது ஆடையின் மென்மைத் தன்மையினைச் சுட்டுவதாக அமைகின்றது. துகில் என்பதற்குக் கு.பகவதி, “துகில், துயில் என்றும் துகின் என்றும் ஒரு சில இடங்களில் வழங்கப்படுவதை இலக்கியங்கள் சுட்டுகின்றன. இவற்றுள், துயில் என்பதன் பகுதி, ‘துய்’ என்பது பஞ்சின் மெல்லிய பகுதியைக் கொண்டு உருவாக்கப்பட்டதால், துயில் என்ற பெயர் அமைந்தது என்பது பொருத்தமானதாகும். இதுவே துகில் என்றும், துகின் என்றும் வழங்கப்பட்டது மிகவும் மெல்லியதொரு பகுதியாக இலக்கியங்கள் துகிலினைக் காட்டுவதையும் இதனுடன் இணைந்து நோக்கலாம்”[56] என்று குறிப்பிடுகின்றார். நச்சினார்க்கினியரும் ஆடையின் மென்மைத் தன்மை மற்றும் வெண்மை நிறத்தினைக் கருத்தில் கொண்டு துகில் என்று விளக்குகின்றார்.

**“துணங்கைக் கூத்தாடிய பூதங்கள் துகிலை உடுத்தன போல”**
**(பெரும்பாண்.234-235)**

என்று உரை விளக்குகின்றார். மேலும்,

**“ஆவி அன்ன அவிர் நூல் கலிங்கம்**
**உடன் இரு பெரு ஒக்கலொடு ஒருங்கு உடீஇ”**
**(பெரும்பாண்.469-470)**

என்ற அடிகளுக்குப் ‘பாலாவியையொத்து விளங்குகின்ற நூலாற் செய்த துகில்களைப் படிசேரக்கரிய பெரிய சுற்றத்தாரோடே சேர உடுக்கப் பண்ணி’ என்று விளக்கம் அளிக்கிறார். ஆடையின் மென்மைத் தன்மையினை வைத்துத் துகில் என்று விளக்கம் அளித்துள்ளார். ஆனால் ஆடையைக் குறிக்க இன்று துகில் என்ற சொல் வழக்கில் இடம்பெறவில்லை என்பது நோக்கத்தக்கது.

**பட்டு**

உடைக்குரிய இழைகள் அனைத்திலும் உறுதியும் பளபளப்பும் மிகவுடையது பட்டு. பட்டுச் சேலைகள் அகன்ற கரையுடன் சேலையின் முடிவுப் பகுதி (முந்தானை) சிறுசிறு முடிச்சுகளுடன் அமைந்திருக்கின்றன. பட்டின் மதிப்பு நாளுக்கு நாள் உயர்ந்து வருகின்றது. பெரும்பாலும் பட்டுப் புடவை, மற்றும் பட்டு வேட்டியினைச் சுப நிகழ்ச்சிகளுக்கு ஆண், பெண் இருவரும் அணிந்து கொள்வது வழக்கமாகிக் கொண்டிருக்கின்றனர். பட்டு என்ற சொல்லிற்கு விளக்கம் கூறுகின்ற போது, கு.பகவதி, “பட்டின் பசுமையே பட்டு என்னும் சொல் ஆக்கத்திற்குக் காரணமாகலாம்”[57] என்பர். நச்சினார்க்கினியரின் காலத்தில் பட்டுப் புடவையின் முடிவுப் பகுதியில் (முந்தானை) சிறுசிறு முடிச்சுடன் இருந்தமையைத் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

**“தூய**
**கொட்டைக் கரைய பட்டு உடை நல்கி”** **(பொருநர்.154-155)**

என்ற அடிகளுக்கு, ‘தூயவாகிய திரள முடிந்த முடிகளைக் கரையிலேயுடைய பட்டாகிய உடைகளைத் தந்து’ என்று விளக்கம் அளிக்கின்றார்.

**“பட்டு நீக்கி துகில் உடுத்தும்”   (பட்டினப்.107)**

என்ற அடிக்கு, ‘பட்டுடுத்தவற்றை நீக்கிப் புணர்ச்சிக் காலத்து நொய்யவாகிய வெள்ளியவற்றை யுடுத்தும்’ என்று பொருள் கூறுகின்றார். இவ்வுரைகளின் வழி முந்தானையின் அடிப்பகுதியில் சிறு முடிச்சுக்களுடன் காணப்பட்டுள்ளது என அறியலாம். மேலும் புணர்ச்சிக் காலத்தில் பட்டு உடையினை நீக்கிவிட்டு மென்மைத் தன்மை பொருந்திய ஆடையினை அணிவது மரபு. எல்லாக் காலங்களிலும் பட்டு உடையினை அணியாத நிலையினையும் இதன்மூலம் அறியமுடிகிறது.

**உணவு**

மனித வாழ்விற்கு அடிப்படையானது உணவு. உணவின்றி உயிர் வாழ்வது மிகக் கடினம். தமிழர் உணவைப் பல பெயரிட்டு அழைத்து வந்துள்ளனர்.

**“உணாவே வல்சி யுண்டி யோதன**
**மசனம் பதமே யரையா கார**
**முறையே யூட்ட முணவென லாகும்”[58]**

உணா, வல்சி, உண்டி, ஓதனம், அசனம், பதம், இரை, ஆகாரம், உறை, ஊட்டம் முதலிய பத்தினையும் உணவின் பெயர்களாகப் பிங்கல நிகண்டு குறிப்பிடுகின்றது. இவை தவிர “கொண்டி, புகா, மிசை என்ற பெயர்களாலும் உணவு அழைக்கப்பட்டது”[59] என்பர். நச்சினார்க்கினியர், “கொள்ளப்படுதலின் உணவு ஆயிற்று, கொள்ளையும் என்ப” என்று கூறுவர். தொல்காப்பியர்,

**“தெய்வம் உணாவே மாமரம் புட்பறை”   (தொல்.அகத்.20)**

என உணவு என்பதற்கு, ‘உணா’ என்ற சொல் கூறப்பட்டுள்ளது.

**உணவு என்ற சொல்**

“சொல்லமைப்பின்படி நோக்கினால் உண் - உணா - உணவு என உண் என்பதே அடிச் சொல்லாக அமைகிறது”[60] என்பார்.

தொ.பரமசிவன் " 'உள்' என்ற வேர்ச் சொல்லிலிருந்தே 'உண்' 'ஊண்' 'உணவு' ஆகிய சொற்கள் பிறந்தன"[61] என்று கூறுவார்.

"உயிர் வாழ்வதற்குத் தேவையான ஆற்றலைத் தரும் பொருளை உணவென்று கூறுவார். துறவிகள் சிலர் நீரை மட்டுமே உணவாகக் கொண்டு வாழ்ந்தனர் என்றும், நாம் கேள்வியுற்றிருக்கிறோம். காற்றையும், நீரையும் மட்டுமே உணவாகக் கருதி உண்டு வாழ்தல் என்பது எல்லோருக்கும் முடிகின்ற காரியம் அன்று. உணவின் வகைகளாக அவற்றை எடுத்துக் கொள்ளலாமே தவிர அவற்றை உணவு என்று முடிவு கட்டிவிடக் கூடாது. எனவே, வாய் வழியாக உட்கொள்ளப்பட்டு, உயிர் வாழ்வதற்கும், உடல் நலத்திற்கும் தீங்கு விளைவிக்காத இன்றியமையாத பொருளாக அமைவதை உணவென்று தெரியலாம்"[62] என்று செ.தேவராசு பழந்தமிழ் இலக்கியத்தில் தமிழர் உணவுப் பொருள்கள் எனும் தம் ஆய்வேட்டில் குறிப்பிட்டுள்ளதாக நமச்சிவாயம் தமது நூலில் கூறியுள்ளார்.

உணவு உடலுக்கு வலிமையைக் கொடுப்பது, வளர்ச்சியை அளிப்பது, உடல் உறுப்புகள் சிதைவு அழிவுறாமல் பாதுகாப்பது, உடலாகிய பொறியை இயக்க ஆற்றலைக் கொடுப்பது. நோயைத் தீர்க்க மருந்தாகப் பயன்படுவது எனக் கூறுகின்றனர்.

**உணவின் இன்றியமையாமை**

மனிதனின் அன்றாடத் தேவைகளில் ஒன்றாகவும் உயிர் வாழ்வதற்கு இன்றியமையாததாகவும் விளங்குவது உணவு. மனிதர்கள் உயிர் வாழ்வதற்கு வேண்டிய அத்துணை உணவுப் பொருட்களும் இயற்கை தருகின்ற நன்கொடையாகும். 'ஆடையில்லாத மனிதன் அரை மனிதன்' என்பதைப் போல், 'உணவில்லாத மனிதன் உயிரற்ற மனிதன்' எனலாம். சமுதாயத்தின் லட்சியம், ஆசை, கனவு எல்லாம் உணவைச் சுற்றித்தான் அமைகின்றன. உணவிற்காக எதை வேண்டுமானாலும் கொடுத்துவிடுவார்கள். எனவே உணவிற்காக ஏற்படும் பசியைப் பிணியாக (நோயாக) தமிழர்கள்

உருவகித்தனர். புறநானூறு, பண்ணன் என்ற வள்ளலை இக்காரணம் பற்றியே,

**“பசிப்பிணி மருத்துவன் இல்லம்”** ***(புறம்.173:11)***

என்று புகழ்கின்றது. மக்களுக்குத் தேவையான அடிப்படைப் பொருள்களான உணவு, உடை, உறையுள் என்பனவற்றில் உடையும், உறையுளும் இன்றிக் கூட மக்கள் உயிர் வாழ்ந்திருக்கின்றனர். ஆனால் உணவின்றி வாழ்ந்தவர் இல்லை. ஆதிமனிதனுடைய முதற் தொழிலே உணவைத் தேடுவதாக அமைந்தது. காய் கனிகளையும், இறைச்சியையும் பசி தீர்க்க உணவாகப் பயன்படுத்திக் கொண்ட மனிதன் நாகரிகம் வளர வளர பல்வேறு உணவாகப் பகுத்து உண்ணக் கற்றுக் கொண்டான். உடம்பினை உணவின் பிண்டம் என்பர். உணவின் பிண்டமாகிய உடம்பு உயிரைச் சுமந்து கொண்டிருக்க வேண்டுமானால் அதற்கு உணவு கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதை,

**“உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத் தோரே**
**உண்டி முதற்றே உணவின் பிண்டம்”** ***(புறம்.18:19-20)***

என்ற புறநானூற்று அடிகள் சுட்டுகின்றன. இதனையே மணிமேகலையும்,

**“மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்**
**உண்டி கொடுத்தோ ருயிர் கொடுத்தோரே”** ***(மணி.11:95-96)***

என்று உரைக்கின்றது. மனிதன் தோன்றிய காலத்திலிருந்து அவனோடு இணைந்து தோன்றி, தானின்றி அவனில்லை என்ற அளவுக்கு இன்றியமையாத பொருளாக உணவு விளங்குகிறது. நச்சினார்க்கினியர் தம்காலத்தில் செய்யப்பட்ட, பண்ணியாரம், புளியங்கறி, உப்புக்கண்டம், கும்மாயம், கரும்புக்கட்டி, பருப்புச்சோறு, பாற்சோறு, அப்பம், கொழுவல்சி, அக்காரச்சோறு, பிண்டி போன்ற உணவுமுறைகளைச் சுட்டியுள்ளார். மற்றும் பொரித்தல், வக்குதல்(மயிர்போக வாட்டுதல்) சுடுதல், சோறாக்கும் முறை முதலான சமைக்கின்ற முறைகளையும் தனது உரையில் பதிவு செய்துள்ளார்.

**பண்ணியாரம்**

அரிசிமாவில் இனிப்புச் சுவையான பொருட்களைச் சேர்த்து ஆக்கப்படும் ஒரு வகைச் சிற்றுண்டி பண்ணியாரம் ஆகும். இனிப்புச் சுவையுடன் வெவ்வேறு வடிவினையுடையதாக இருந்தமையை,

**"சுவைய வேறு பல் உருவின்**
**விரகு தந்து இரீஇ"** ***(பொருநர்.107-108)***

என்ற அடிகளுக்கு, 'இனிமையையுடையவாய் வெவ்வேறாகிய பலவடிவினை யுடைய பண்ணியாரங் கொண்டு வந்து அவற்றைத் தின்னும்படி எங்களை யிருத்தி, உபாயங்களாற் பண்ணுதலின் விரகென்றார்' என்று உரை விளக்கம் தருகின்றார். இன்று பண்ணியாரம் பணியாரம்என்ற பெயரில் அழைக்கப்படுகின்றது. இதனைக் 'குழிப்பணியாரம்' 'முக்குழி' என்ற பெயர்களால் குறிப்பிடுகின்றனர்.

**கும்மாயம்**

உ.வே.சாமிநாதையர் "கும்மாயம் என்பது புழுங்கி பச்சைப் பயற்றோடு சருக்கரை முதலிய கூட்டி ஆக்கப்படுவதொரு சிற்றுண்டி: இஃது விஷ்ணுவாலயங்களில் இக்காலத்தும் வழங்கி வருகின்றது"[64] என்று கூறுவர்.

"தற்போது வழக்கில் இது கும்மியாணம் என்று அழைக்கப்படுகின்றது. குழையச் சமைத்த பருப்பினைக் கொண்டு இதனை ஆக்குவர்"[63] என்பார் சே.நமச்சிவாயம்.

**"பயற்றுத் தன்மை கெடாது கும்மாயம் இயற்றி"**
***(மணி.27:185-186)***

என்று மணிமேகலை கும்மாயத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றது.

**"புகர் இணர் வேங்கை வீ கண்டன்ன**
**அவரை வால் புழுக்கு அட்டி"** ***(பெரும்பாண்.194-195)***

என்ற அடிகளுக்கு, 'நிறத்தையுடைய, கொத்தினையுடைய வேங்கைப் பூவைக் கண்டாலொத்த, அவரை விதையினது நன்றாகிய பருப்பை மிகவிட்டு

வேங்கைப்பூ வரிகளையுடைய விதைக்கு உவமை, புழுக்க வெந்தது, கும்மாயமுமாம்: பருப்புச்சோறும் என்ப' என்று பொருள் கூறுகின்றார். இவ்வுரையின் வழி அவரை விதையினை நன்கு வேகவைத்துக் கும்மாயம் செய்ததனைக் குறிப்பிடுகின்றார். கும்மாயத்தை நச்சினார்க்கினியர் காலத்தில் பருப்புச்சோறு என்றும் கூறியுள்ளனர்.

**அப்பம்**

> ***"கார் அகல் கூவியர் பாகொடு பிடித்த இழை***
> ***சூழ் வட்டம் பால் கலந்தவை போல்"   (பெரும்பாண்.377-378)***

என்ற அடிகளுக்கு, 'கரிதாகிய சட்டியிலே அப்ப வாணிகர் பாகுடனே வேண்டுவனக் கூட்டிச் சேர்க்கப்பட்ட நூல்போலச் சூழ்ந்து கிடக்கின்ற அப்பம் சட்டியிலே கிடந்த அப்பம் பின்பு பாலிலே கிடந்தவை போல என்க' என்று விளக்கம் கூறுகின்றார். "அப்பம் இப்பொழுது இடியாப்பமென்று வழங்கும் ஒருவகைச் சிற்றுண்டி"[65] என்பார் சே.நமச்சிவாயம். மேலும்,

> ***"தீ சேறு கூவியர் தூங்குவனர் உறங்க"   (மதுரைக்.627)***

என்ற அடிக்கு, 'இனிய பாகோடு சேர்த்துக் கரைத்த மாவினையுமுடைய அப்ப வாணிகரும் அவறோடேயிருந்து தூங்குவனராயுறங்க' என்று பொருள் விளக்குகின்றார். இவற்றின் வழி, அப்பத்தைப் பாகுடன் நெல்லின் மாவினைக் கரைத்து வட்டமாகச் செய்து அதனைப் பாலிலே இட்டு உண்டுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது. நச்சினார்க்கினியர் 'மோதகம்' என்பதற்கும் 'அப்பம்' என்று பொருள் கூறுகின்றார். நச்சினார்க்கினியர் காலத்தில் மோதகத்தை 'அப்பம்' என்று குறிப்பிடும் வழக்கம் உள்ளது போலும். ஆனால் இன்று 'மோதகம்' என்பது வேறு அப்பம் என்பது வேறாகக் கூறப்படுகின்றது.

> ***"காவொடு அயிர் பிடித்த வகையமை***
> ***உருப்பு உற்ற மோதகம்"   (மதுரைக்.625-626)***

என்ற அடிகளுக்கு விளக்கம் கூறுகையில், 'பருப்பும் தேங்காயும் உள்ளீடு (உள்ளே இடப்பெற்ற பொருள்கள்)களோடே கண்ட சருக்கரைக் கூட்டிப்

பிடித்த வகுப்பமைந்த வெம்மை பொருந்தின அப்பங்களையும்' என்று விளக்குகின்றார். மோதகம், அப்பம் இரண்டும் சிற்றுண்டி வகையைச் சார்ந்தவை. ஆனால் அப்பம் பாகுடன் நெல் மாவு சேர்த்துச் செய்து அதனைப் பாலில் இட்டு உண்பர். மோதகம் அரிசி மாவினுள், தேங்காய், பருப்பு, சர்க்கரை முதலியவற்றை உள்ளே வைத்துச் செய்யப்படும் உணவு. இவருடைய உரை விளக்கம் இரண்டிற்குமுள்ள வேறுபாட்டை உணர்த்துகின்றது. பிள்ளையார் சதுர்த்தியன்று பிள்ளையாருக்கு மோதகம் செய்து வைத்து வணங்கும் வழக்கம் இன்றளவும் காணப்படுவதை அறியலாம்.

**கருப்புக்கட்டி (வெல்லக்கட்டி)**

இனிமை கொடுக்கின்ற சுவை நீர்களில் கரும்பின் சாறும் ஒன்று. கரும்பின் சாற்றினைப் பக்குவப்படுத்திக் காய்ச்சிய நிலை வெல்லக்கட்டி (சர்க்கரை) எனப்படும். இவ்வெல்லக்கட்டியைப் புளிக்குழம்பிற்கு இட்டுச் சமைத்துள்ளனர் என்பதை,

**"தீ புளி" (மதுரைக்.318)**

என்ற அடியில், 'கருப்புக்கட்டி (கரும்பின் வெல்லக்கட்டி) கூட்டிப் பொரித்த புளி' என்ற அடியின் உரை விளக்கத்தின்வழி அறியமுடிகிறது.

**"கரும்பின் தீ சாறு விரும்பினிர் மிசைமின்"**

**(பெரும்பாண்.262)**

என்ற அடிக்கு, 'கரும்பின் இனிய சாற்றை முற்படக் குடித்துப் பின்னர் அக்கரும்பின் கட்டியைத் தின்பீராக' என்று பொருள் கூறுகின்றார். கரும்பின் சாறு குடிக்கப்பட்டதனை உரை வழி விளக்குகின்றார். இன்று வெய்யில் காலங்களில் கரும்பின் சாற்றினைக் குடிக்கும் பழக்கம் காணப்படுகின்றது. "வெப்பக் காலங்களில் தாக சாந்தியைத் தரும் நீராகவும் இன்று கரும்பின் பயன்படுகின்றது"[66] என்று கு.நமசிவாயம் குறிப்பிடுகின்றார். கரும்புச்சாறு அதிக இரும்புச்சத்து நிறைந்ததாகவும் காணப்படுகின்றது.

**பாற்சோறு**

சோற்றுடன் பாலைக்கலந்து ஆக்கப்படுவது பாற்சோறு எனப்படும். பார்ப்பினி விருந்தினருக்குப் பாற்சோறு, பருப்புச்சோறு முதலியனவற்றை உணவாக அளித்துள்ளதை நச்சினார்க்கினியர் தனது உரையின் வழி கூறுகின்றார். அந்தணர்கள் இல்லத்தில் பெரும்பாலும் பால், பருப்பு இவற்றினைக் கொண்டு சமைத்ததனையும் அறியமுடிகிறது.

**“வளை கை மகடூஉ வயின் அறிந்து அட்ட”** ***(பெரும்பாண்.304)***

‘வளையளையுடையவாகிய கையையுடைய பார்ப்பினி பதமறிந்து அட்டனவற்றை, என்றது பாற்சோறு, பருப்புச்சோறு முதலியனவற்றை’ என்று உரை கூறுகின்றார். மேலும்,

**“கொண்டல் வளர்ப்பக் கொடி விடுபு கவினி மெல்**
**பிணி அவிழ்ந்த குறு நெறி அடகும்”** ***(மதுரைக்.530-531)***

**“பல் வயின் நுகர இன்சோறு பிறவும் தருநர்”** ***(மதுரைக்.535)***

என்ற அடிகளுக்கு உரை விளக்கம் கூறுகின்றபோது, ‘மழை பருவத்தே பெய்து வளர்க்கையினாலே கொடிகள் விட்டு அழகு பெற்று மெல்லிய சுருள் விரிந்து சிறிய இலைகளையுடைய இலைக்கறிகளையும் (கீரை) பலவிடங்களிலும் அநுபவிக்க இனிய பாற்சோறு பால் முதலியவற்றையுங் கொண்டு வந்து இடுவாரிடத்து எழுந்த ஓசையும் என்றது சோறிடுஞ் சாலைகள்’ என்று குறிப்பிடுவர். நச்சினார்க்கினியர் காலத்தில் வழிப்போக்கர்களுக்கு உணவு இடும் வகையில் சோறிடும் உணவுச் சாலைகள் அமைந்திருந்ததனைத் தனது உரையின் வழிப் பதிவு செய்துள்ளார். ஆனால் தற்போது வணிக நோக்கில் பணத்திற்காகச் சோறிடும் சாலைகள் (Hotel) காணப்படுகின்றன.

**தினைப் பிண்டி**

“மனிதனுக்கு இன்றியமையாத உணவாகப் பயன்படக்கூடிய பொருட்களை முதற்கூலம் என்று கூறுவர். முதற்கூலம் எட்டு வகைப்படும். அவை, நெல், புல், வரகு, தினை, சாமை, இறுங்கு, துவரை, இராகி என்பன”[67]

என்பர். "முதற்கூல வகைகள் எட்டனுள் தினையும் ஒன்று. கருந்தினை, சிறுதினை, செந்தினை என்பன தினைகளின் வகைகளாகும். ஏனல் என்ற தொடரும் சிறுதினையைக் குறிக்கும். இதனை 'ஏனலஞ் சிறுதினை' என்ற தொடர் விளக்கும். இக்காலத் தமிழர் சிறுதினையை 'அறுபன் தினை' என்றும், பெருந்தினையை 'முறியன் தினை' எனவும் வழங்குகின்றனர்"[68] எனக் குறிப்பிடுவர். நச்சினார்க்கினியர் நுவணை என்பதற்குத் தினை, பிண்டி என்று விளக்கம் அளிக்கின்றார்.

**"உண்ணுநர் தடுத்த இடி நுண் நுவணை"** ***(மலைபடு.445)***

என்ற அடிக்கு, 'தன்னை நுகர்வாரை வேறொன்றையும் நுகராமல் தடுத்து இடித்தலால் நுண்ணிதாகிய தினைப் பிண்டியோடு சேப்பின் நுவணையோடே அமலையை இழுது உள்ளீடாக அல்கலும் பெறுகுவீராக' என்று பொருள் கூறுகின்றார். இடித்த தினைமாவினோடு நெய்யினை இட்டு உண்டுள்ளதை இவ்வுரையின் வழி அறியமுடிகிறது.

**நெல் சோறு**

இன்றைய தமிழர்கள் மிகுதியாகப் பயன்படுத்துவது நெல்லேயாகும். இது தமிழர்களுக்குரிய உணவு வகைகளில் தலைச் சிறந்ததாகும். இது ஒற்றை விதையிலைத் தாவரத்தைச் சார்ந்தது. இள நெல், ஐவன நெல் (மலை நெல்), சாலி நெல், சுவல் விளை நெல், வத்தம் (கருடச்சம்பா), வெண்ணெல், செந்நெல் ஆகியனவை பழந்தமிழர்கள் பயன்படுத்திய நெல்லின் வகைகள் ஆகும். தற்போது, அய்யாரிருபது, ஏசியம் பத்து, சேசியல், டீலக்ஸ், கல்சர் பொன்னி, கர்நாடகப் பொன்னி, சீரகச் சம்பா, திருச்சி-1 இதுபோன்ற பலவகை நெற்களைப் பயன்படுத்துகின்றனர். நச்சினார்க்கினியர் இராசன்னம் என்னும் பெயர் பெற்ற நெல்லைத் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

***"பறவை பெயர் படு வத்தம்"*** ***(பெரும்பாண்.305)***

என்ற அடிக்கு, 'பறவையினது பெயரைப் பெறு நெல்லு என்றது இராசன்ன மென்னும் பெயர் பெறுகின்ற நெல்லென்றவாறு ஆகுதி பண்ணுதற்கு இந்நெல்லுஞ் சோறே சிறந்ததென்று இதனைக் கூறினார். இனி மின்மினி

நெல்லென்பாருமுளர். இப்பெயர் வழக்கின்மையும் ஆகுதிக்குச் சிறவாமையும் உணர்க' என்று விளக்கம் அளிக்கின்றார். நச்சினார்க்கினியர் காலத்திற்கு முன்பு இராசன்னம் என்னும் நெல் மின்மினி என்று வழங்கப்பெற்றுள்ளது. அவர் காலத்தில் வழக்கில் இல்லாமல் அழிந்துவிட்டதை இதன்வழி அறியமுடிகிறது. இதுபோல் இன்று பல நெல் வகைகள் வழக்கில் இல்லாமல் அழிந்து வருகின்றன.

**புளிக்கறி**

புளிப்புச் சுவையைச் சேர்த்துக் கறியாக வைப்பது புளிக்கறியாகும். இதற்குப் பெரும்பாலும் மோர் பயன்படுத்தப்படும்.

***"பரல் வறைக் கருனை காடியின் மிதப்ப***
***வயின்ற காலை" (பொருநர்.115-116)***

என்ற அடிகளுக்கு விளக்கம் கூறுகையில், 'பரல் பொரித்து அதனோடே கூட்டிய பொரிக்கறிகளையும் கழுத்திடத்தே வந்து நிரம்பும்படி விழுங்கின காலத்தே இனி, காடியைப் புளியங்களியாக்கிப் புளியங்களியோடே நிரம்ப விழுங்கின காலையென்று உரைப்பர்' என்று பொருள் கூறுகின்றார். காய்கறிகளைப் பொரித்து உண்டுள்ளனர். மேலும் அவர் காலத்தில் காடி என்பதற்குப் 'புளியங்கறி' என்று கூறும்முறை இருந்தமையும் இதன்வழிப் புலப்படுகின்றது. மேலும் நச்சினார்க்கினியர், காடி என்பதற்கு, புளியங்காய், நெல்லிக்காய் ஊறவைக்கும் பாத்திரமாகவும் குறிப்பிடுகின்றார்.

***"கயிறு பிணித்துக் காடி வைத்த***
***கலன் உடை மூக்கின்" (பெரும்பாண்.56-57)***

'புளியங்காய் நெல்லிக்காய் முதலியன ஊறவிட்டு வைத்ததனைக் காடியென்றார். இனிக்காடியை நெய்யென்பாருமுளர்; இனிப் பாரிற் கழுத்தான விடத்தே வைத்த மிடாவென்றுமாம். மேலும், மாங்காயின் சிறிய பிஞ்சினைக் (கருவினை) கொண்டு ஊறுகாய் போடப்பட்டதனை,

***"நெடுமரம் கொக்கின் பைந்துணர் நறுவடி***
***விதிர்த்த தகை மாண்காடியின்" (பெரும்பாண்.308-310)***

என்பதற்கு, 'நெடிய மரமாகிய மாவினது பசிய கொத்திடத்து நறிய வடுவினைப் பலவாகப் போகட்ட அழகு மாட்சிமைபட்ட ஊறுகறியோடே' என்று பொருள் கூறுகின்றார். இவ்வுரையின் வழி அவர் காலத்தில் 'காடி' என்பதற்கு, ஊறுகாயினையும், ஊறுகாய் ஊறவைக்கும் பாத்திரத்தினையும், நெய்யினையும், மிடாவினையும் குறிக்கப் பயன்படுத்தியுள்ளார் என்பதை அறிய முடிகிறது. இன்று ஊறுகாய் ஊறவைக்கும் பாத்திரத்தின் பெயர் சாடி என்ற பெயரால் வழங்குகின்றனர். 'காடி' என்பதே பின்னர் 'சாடி' என மருவி வந்திருக்கலாம்.

**கொழுவல்சி**

தாவரங்களின் உணவு அல்லாத பிற உணவுகள் தாவரமில் உணவாகும். இதனைப் புலால் உணவு என்றும் கூறலாம். பழந்தமிழ் மக்கள் ஆட்டின் இறைச்சி, பசுவின் இறைச்சி, பன்றி இறைச்சி, மான் இறைச்சி, முளவுமா இறைச்சி, யானை இறைச்சி போன்ற விளங்குகளின் இறைச்சிகளைத் உணவாகப் பயன்டுத்தியுள்ளனர். நன்கு வளர்ச்சியடைந்த இறைச்சியுடன் அரிசியைச் சேர்த்து ஆக்கிய உணவினைக் குறிப்பிட்டுள்ளார்.

**"கொழு ஊன் குறைக் கொழு வல்சி" *(மதுரைக்.141)***

என்ற அடிகளுக்கு, 'கொழுத்த இறைச்சியையுடைய கொழுத்திருக்கின்ற சோற்றினையும், ஊனைக்கூட இட்டு ஆக்குதலிற் கொழுவல்சி என்றார். கொழுவல்சி கொழுவினாலாகிய வல்சியென்றும்' எனப் பொருள் கூறுகின்றார். ஊனை இட்டு ஆக்கும் உணவினைக் கொழுவல்சி என்று குறிப்பிடுகின்றார். இன்று இதனை 'பிரியாணி' என்று குறிப்பிடுகின்றனர்.

**உப்புக்கண்டம், கருவாடு**

அந்தணராகிய நச்சினார்க்கினியர் எளிய மக்கள் உண்ணும் புலால் உணவையும் அறிந்திருக்கிறார்.

***"கவை தாள் அலவன் கலவையொடு பெறுகுவீர்" (சிறுபாண்.195)***

என்ற அடிக்கு, 'கவைத்த காலினையுடைய ஞெண்டும் பீர்க்கங்காயும் கலந்த கலப்பு' என்று உரை கூறுகின்றார். நண்டுடன் பீர்க்கங்காய் சேர்த்துச் சமைக்கும்

முறையினை இதன்வழி அறியமுடிகிறது. நண்டுடன் இன்று, கீரைத் தண்டினையும் சேர்த்துச் சமைக்கும் வழக்கம் நாட்டுப்புறங்களில் காணப்படுகின்றது.

**"வாடு ஊன்"** ***(பெரும்பாண்.100)***

என்பதற்கு, 'உப்புக்கண்டம்' என்றும்,

**"வல் கை திமிலர் கொழுமீன்**
**குறைஇய துடிகண் துணியல்"** ***(மதுரைக்.319-320)***

என்ற அடிகளுக்கு, 'வலிய கையினையுடைய திமிலர் கொவி மீன்களை யறுத்த துடியின் கண் போலுருண்ட துணிகள் என்றது கருவாடுகளை' என்றும் பொருள் கூறுகின்றார்.

**கள் உணவு**

ஊனோடு விருப்பமாக உட்கொண்ட மற்றொரு பொருள் 'கள்' ஆகும். இக்கள்ளினைத் "தேறல், நறவு, தோப்பி, அரியல், வேரி, கந்தாரம், மட்டு, பிழி என வேறு பெயராலும் வழங்குவர். அவை ஒருபொருட்பன்மொழி போலத் தோன்றினும், அவை தம்முள் சிறுசிறு வேறுபாடு உண்டு"[69] என்பர்.

**"இல்லடு கள்ளின் தோப்பி பருகி"** ***(பெரும்பாண்.142)***

என்பதற்கு, 'தமது இல்லங்களில் சமைத்த கள்ளில் இனிதாகிய நெல்லாற் செய்த கள்ளையுண்டு' என்று பொருள் கூறுகின்றார். வீட்டில் கள் சமைத்ததனையும் அவற்றுள் நெல்லினால் சமைத்த கள் மிகவும் இனிமையுடையதாக இருக்கும் என்பதனையும் இவரது உரை வழி அறியமுடிகிறது.

**"நறவு மகிழ்ந்து"** ***(மலைபடு.172)***

என்ற அடிக்கு, 'நெல்லால் சமைத்த கள்' என்றும்,

**"மட்டு நீக்கி மது மகிழ்ந்தும்"** ***(பட்டினப்.108)***

என்பதற்கு, 'கள்ளுண்டலைக் கைவிட்டு காமபானத்தை உண்டு' என்றும் விளக்கம் அளிக்கிறார். கள்ளினைவிடக் காமபானம் உயர்ந்திருந்தமை இதன்வழிப் புலப்படுகின்றது.

**விருந்தோம்பல்**

*தமிழர் போற்றிய பண்புகளில் தலையாய பண்பு விருந்தோம்பல். விருந்து என்றால் புதிது, புதியவர் என்று பொருள். "விருந்தேதானும் புதுவது புனைந்த யாப்பின் மேற்றே"[70] என்பர் தொல்காப்பியர். இன்று உற்றார், உறவினர், நண்பர்களையும் விருந்து என்கிறோம். ஆயின் பண்டைக் காலத்தில் முன்பின் அறியாதவர்களாய் வீடுதேடி வருவோரே விருந்தினர் எனப் பெற்றனர். அக்கால மக்கள் அவர்களை உளமகிழ்ச்சியோடு வரவேற்று விருந்து அளித்தனர்.*

*வீட்டிற்கு வந்த விருந்தினருக்கு உணவளித்துச் சிறப்புச் செய்யும் பண்பில் தமிழர்கள் சிறந்து விளங்கியதை,*

***"விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா***
***மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று"    (குறள்.82)***

*கிடைப்பதற்கரிய உணவாயினும் விருந்தினரைப் புறக்கணித்து உண்ணாத மாண்பினைக் கூறியுள்ளார். தங்களது வீட்டிற்கு வந்த விருந்தினரை அண்ணன், அம்மான் போன்ற உறவுமுறைகள் சொல்லி உபசரித்ததனைத் தமது உரையில் குறிப்பிட்டுள்ளார்.*

***"மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவீர்"    (மலைபடு.185)***

*என்ற அடிக்கு, 'தத்தம் பிள்ளைகளைக் கொண்டு முறை சொல்லித் தடுக்கையினாலே மனைகடோறும் பெறுகுவீர். அண்ணன், அம்மான் என்றாற் போல்வன முறை' என்று பொருள் கூறுகின்றார். இவற்றுள் 'அம்மான்' என்ற உறவுமுறை பெயருக்குத் தொ.பரமசிவன் "அண்ணன் மனைவி அண்ணியானது போல மாமன் மனைவி மாமி ஆயிருக்க வேண்டும். அம்மையுடன் பிறந்தவனைக் (தாய்மாமன்) குறிக்கும் சொல்லாக 'அம்மான்' வழங்குகிறது. இச்சொல் இன்றும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களிடம் வழங்கி வருகிறது"[71] என்று விளக்கம் அளிக்கின்றார். அம்மான் என்ற சொல் வழக்குப் பெரும்பான்மை நாட்டுக்கோட்டைச் செட்டியார்களிடமும் சிறுபான்மை பிற இனத்தாரிடமும் காணப்படுகின்றது.*

**இருப்பிடம்**

மனிதனின் இன்றியமையாத தேவைகளில் ஒன்று உறைவிடம். விலங்குகளிடமிருந்து தன்னைக் காத்துக்கொள்ள மலைக் குகைகளிலும், மரப்பொந்துகளிலும், பிளவுகளிலும் தங்கினான். நாளடைவில் விலங்கின் தோல், புல், மரம், கல் முதலியவற்றைப் பயன்படுத்தித் தனது இருப்பிடத்தை அமைத்துக் கொண்டான். இன்று வீட்டினைச் சிமெண்ட், செங்கல், மண், சல்லி போன்ற பொருள்கள் சேர்த்துக் கட்டியுள்ளனர். அக்காலத்திலும் இம்முறை காணப்பட்டுள்ளது. பெரும்பழங்காலத்தில் புல், கோரை, மரம் போன்றவற்றால் குடில்கள் (குடிசைகள்) அமைத்து அவற்றில் வசித்துள்ளனர். இக்குடிசைகளின் அமைப்பினை நச்சினார்க்கினியர் தனது உரையின் வழி விளக்குகின்றார்.

**சமையல் கட்டு (கொட்டில்)**

(எளிய) சாதாரண மக்களின் சமையல்கட்டு (கொட்டில்) அமைப்பினை நச்சினார்க்கினியர் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

**"குறு சாடு உருளையொடு கலப்பை சார்த்தி**
**நெடு சுவர் பறைந்த புகை சூழ் கொட்டில்"**
***(பெரும்பாண்.188-189)***

என்ற அடிகளுக்கு உரை கூறுகையில் 'குறிய சகடத்திலுருளைகளோடே கலப்பையையும் சார்த்தி வைக்கையினாலே நெடிய சுவரிடத்தில் தேய்ந்த புகை சூழ்ந்த கொட்டிலினையுமுடைய நெடுகக்கட்டி ஒரு பக்கத்தில் அடுப்பெரித்து ஒரு பக்கத்திலே கலப்பையையுஞ் சார்த்தி எருதுகளுங்கட்டி நிற்றலிற் கொட்டில் என்றார்' என்று குறிப்பிடுகின்றார். கொட்டில் என்பது இன்று வழக்கில் 'கோசாலை' என்று நாட்டுப்புறங்களில் அழைக்கப்படுகின்றது. இக்கோசாலையில் மாட்டினைக் கட்டவும் சோறாக்கவும் பயன்படுத்து கின்றனர். நகர்ப்புறங்களைப் போல கிராமப்புறங்களில் சிறுபான்மையாகச் சமையல்கட்டுத் தனியாகக் கட்டியுள்ளனர்.

**வீட்டின் அமைப்பு**

*இக்காலத்தில் வீட்டினைப் பல அறைகளாகப் பிரித்துக் கட்டுவதைப் போன்று, நச்சினார்க்கினியர் காலத்திலும் வீடுகள், மண்டபம், கூடம், தாய்க்கட்டு, அடுக்களை எனப் பல அறைகளைக் கொண்டதாகக் கட்டியுள்ளனர் என்பதைத் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார்.*

**"வகைபெற எழுந்த வானம் மூழ்கி சில் காற்று**
**இசைக்கும் பல்புழை நல் இல்" *(மதுரைக்.357-358)***

*என்ற அடிகளுக்கு, 'கூறுபாடாகிய பெயர்களைத் தாம் பெறும்படி யுயர்ந்து தேவருலகிலே சென்று தென்றல் காற்று ஒலிக்கும். பல சாளரங்களையுடைய நன்றாகிய அகங்களையும், மண்டபம், கூடம், தாய்க்கட்டு, அடுக்களை யென்றாற் போலும் பெயர்களைப் பெறுதலின் வகைபெற வெழுந்ததென்றார்' என்று பொருள் கூறுகின்றார். இவ்வுரையின் வழி வீட்டின் நடு அறை, வீட்டின் கூடம், சாமியறை, சமையல் அறை முதலிய அறைகளுடன் வீடுகள் கட்டப்பட்டிருந்ததனை அறியமுடிகிறது. மேலும்,*

**"திருமணி விளக்கம் காட்டித் தின் ஞாண்**
**எழினி வாங்கிய இரு அறை பள்ளியுள்" *(முல்லைப்.63-64)***

*என்ற அடிகளுக்கு உரை விளக்கம் கூறுகின்ற போது, 'அழகினையுடைய மாணிக்கமாகிய விளக்கை எரியவைத்துத் திண்ணிய கயிற்றிற்றிரைய வளைத்து புறவறைக் குள்ளறையிற் படுக்கைக் கண்ணே சென்று' என்று பொருள் கூறுகின்றார். ஓர் அறையின் அறைக்குள் படுக்கையறை இருந்தமை இதன்வழிப் புலப்படுகின்றது. இன்றும், வீட்டில் நடு அறை, முகப்பு, சமையல் அறை, சாமியறை, குளியலறை, படுக்கையறை, மற்றும் அறைக்குள் அறை அமைக்கும் வழக்கம் காணப்படுகின்றது.*

**தொழுவம்**

*ஆடு, மாடுகள் கட்டப்படுகின்ற இடத்திற்குத் 'தொழுவம்' என்று பெயர். இதனை 'மாட்டுக்கொட்டில்' அல்லது மாட்டுக் கோசாலை என்றும் வழங்குவர். வயல் வெளியில் மற்றும் ஊரின் பொது இடங்களில் தொழுவம்*

அமைப்பர். இத்தொழுவத்திற்கு முள் அல்லது பனை மட்டையால் வேலி அமைத்திருப்பர். ‘விடர் தேர் தொடரி’ அதாவது ஒருவகை முள் மரம் சூழ்ந்த தொழுக்கள் என்று குறிப்பிடுகின்றார்.

**“முள் உடுத்து எழு காடு ஓங்கிய**
**தொழு உடை வரைப்பின்”   (பெரும்பாண்.184-185)**

**தொழில்கள்**

ஒரு நாட்டின் வெவ்வேறு நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்களின் உணவு, உடை, தொழில், பழக்க வழக்கங்கள் ஆகியவை சூழ்நிலையால் வேறுபட்டவை. அதுபோன்று பண்டைத் தமிழர் செய்த தொழில்கள் அவர்கள் வாழ்ந்த நிலவியல் மற்றும் சமுதாய நிலைக்கு ஏற்றவாறு அமைந்திருந்தன. தொடக்கத்தில் மக்களின் தொழில்கள் பெரும்பாலும் உணவுத் தேடுதலை ஒட்டி அமைந்திருந்தன.

**தொழில் விளக்கம்**

“உழைப்பு என்பது பெயர்ச் சொல்லாக ஒரு செயல் அல்லது தொழிலைக் குறிக்கும். உழைத்தல் என்பது வினைச் சொல்லாகத் தொழில் செய்தலைக் குறிக்கும். உழைப்பவர் இனம் என்பது பொதுவாகத் தொழிலாளர்களைக் குறிக்கும்”[72] என்று தொழில் என்பதற்குச் சசிவல்லி வரையறை கூறுகின்றார்.

பொருளியல் அறிஞராகிய மார்சல் உழைப்பிற்குப் பின்வரும் இலக்கணம் கூறுகின்றார். “உழைப்பு என்பது மூளையையோ உடலையோ முழுவதுமாகவோ, பகுதியாகவோ வருத்தி ஏதோ ஒன்றைப் படைப்பதற்காகச் செய்கின்ற செயலைக் குறிக்கும். ஆனால் அந்தச் செயலிலிருந்து கிடைக்கும் மகிழ்ச்சியை உழைப்பு உள்ளடக்காது. இலக்கணத்தின்படி உழைப்பு எல்லா வகையான தொழில் திறமைகளையும் உள்ளடக்கும். கல்வி அறிவில்லாத தொழிலாளர்களின் உற்பத்தி முயற்சிகளும், கைத்தொழில், கலைஞர்கள், கல்வியாளர்கள், ஆசிரியர்கள், வழக்கறிஞர்கள், நீதிபதிகள், எழுத்தாளர்கள், வேளாண்மைத் தொழிலாளர்கள், வணிகர்கள், நுண்கலைஞர்கள், இலக்கிய

அறிஞர்கள், மருத்துவர்கள், அறிவியல் வல்லுநர்கள், நிருவாகிகள் ஆகியோரின் பணி முயற்சிகளும் மார்சலின் உழைப்பு இலக்கணத்தினுள் அடங்குகின்றன"[73] என்று சசிவல்லி தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். இவ்வறிஞர்களின் கருத்துகளின்வழித் தொழில் என்பது மனிதன் தனது அடிப்படைத் தேவைக்காக மட்டுமல்லாது இதரத் தேவைக்காகவும் செய்யக்கூடிய அனைத்துச் செயல்பாடுகளையும் (பணிகள்) உள்ளடக்கியது எனலாம்.

இவ்வாறாக உழைப்பு என்பதனுள் அடங்கும் தொழில் திறமைகள் அனைத்தையும் தற்காலத் தொழில் வல்லுநர்கள் பல்வேறு விதமாக வகைப்படுத்திக் கூறுகின்றனர். "பண்டைத் தமிழர் செய்த தொழில்களை அவர்கள் வாழ்ந்த சமுதாயநிலைக்கு ஏற்றவாறு பின்வருமாறு வகைப்படுத்திக் கூறலாம்"[74] என்பர்.










இவ்வாறு சசிவல்லி தொழில்களை வகைப்படுத்திக் கூறுகின்றார். நச்சினார்க்கினியர் தம் காலத் தொழில் முறைகளை நன்கு அறிந்து அதனைத் தனது உரையின் வழி வெளிப்படுத்துகின்றார். தச்சு, உழவு, நெசவு, சாயம் போடுதல், அணிகலன் செய்தல், உலோகம், தோல் தயாரிக்கும் தொழில்

போன்ற எளிய மக்களின் தொழில்களையும் அந்தணரின் வேதம் கற்பிக்கும் தொழில் முறையையும் குறிப்பிட்டுள்ளார்.

**பயிர்த் தொழில்**

மனித வாழ்விற்கு அடிப்படையானது உணவு. ஒவ்வொருவரது பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் அவரவரது கருமமே கட்டளைக்கல்லாய் அமையும். ஒருவர் சிறந்த பண்பினைப்பெற அடிப்படையாய் இருக்க வேண்டியது வறுமையின்மை. உணவு இன்றேல் பண்பாடும் இல்லை. பழம் பெருமையும் இல்லை. ஆதலின் உணவுப் பொருளின் இன்றியமையாமையை உணர்ந்து அவற்றைப் பெருக்கினர். உழவுத் தொழில் தலைமைத் தொழிலாக, உயிர்த் தொழிலாக, உன்னதத் தொழிலாகவும் போற்றப்பட்டது.

பண்டைத் தமிழர் இயற்கையோடு ஒன்றி வாழ்ந்த வாழ்வியலைச் சித்திரிக்கும் இலக்கியங்கள் பயிர்த் தொழில் பற்றிய குறிப்புகளையும் தருகின்றன. பயிர்த் தொழில் பன்னெடுங்காலமாகத் தமிழரது தொழிலாக அமைந்தது. எனினும் இதற்கான முதற் சான்றினைத்தருவது தொல்காப்பியமாகும். அக்காலத்தில் 'உழவர்கள் வேளாண் மாந்தர்' எனப்பட்டனர். அவர்களது அடிப்படைத் தொழில் பயிரை நன்குப் பாதுகாத்து, நல்ல விளைச்சலைப் பெருக்குவதாகும். அவர்களது முழுக் கவனமும் பயிர்த் தொழில் செய்வதிலேயே இருந்திருக்கின்றது. இக்கருத்தினைத் தொல்காப்பியம்,

**"வேளாண் மாந்தர்க் குழுதூண் அல்லது**
**இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி"**

**(தொல்.பொருள்.மரபு.81)**

எனக் குறிப்பிடுகின்றது. இலக்கண நூலார் வேளாண் என்னும் சொல்லுக்குப் பொருள் கூறுகையில், "வேளாண் என்னுஞ் சொல்லை வேள் + ஆள் எனப் பிரிப்பர். வேள் என்னும் வேர்ச் சொல்லுக்கு மண் என்று ஒரு பொருள் உண்டு. வேளாண் மண்ணை ஆளுதல் என்ற பொருளைத் தரும். மண்ணைப் பண்படுத்தி ஆள்பவன் வேளாண் எனப்பட்டான்"[75] என்று குறிப்பிடுவதாக சசிவல்லி தமது நூலில் குறிப்பிடுவர்.

மறைமலை அடிகள் வேளாண்மை என்னும் சொல்லுக்கு, ''ஈகைக்குப் பெயரான வேளாண்மை என்னும் சொல், அவ்வீகைக்குக் கருவியான பயிர்த் தொழிலுக்குப் பெயராயிற்று. பின்னர் அவ்விரண்டு தொழில்களையும் ஆள்பவரான வேளாளர்க்குப் பெயராயிற்று''[76] என்று விளக்கம் அளிக்கின்றார்.

''வேளாண்மை என்பதை ஒரு கலை என்றும், ஓர் அறிவியல் என்றும் கூறலாம். வேளாண்மை என்பது பொருளாதார வளர்ச்சிக்காகப் பயிர்களையும், கால்நடைகளையும் கொண்டு செய்யப்படும் தொழிலாகும். இவ்வேளாண்மைத் தொழிலில் பயிர் உற்பத்தி, கால்நடைப் பராமரிப்பு, தோட்டக்கலை, பால்பண்ணை, காடு வளர்ப்பு, மீன் வளம் மற்றும் வேளாண் பொறியியல் போன்ற பிரிவுகள் அடங்கும்''[77] என்பர்.

சசிவல்லி ''அறிவியல் நோக்கில் வேளாண்மை என்ற சொல்லுக்குப் பொருள் காண்கையில், அச்சொல் பயிர் செய்தல், கால்நடைகள் வளர்த்தல், மரம் வளர்த்தல், மனித சமுதாயத்திற்குப் பயன்படும் ஒவ்வொரு பயிரையும், மற்றும் உயிர்களையும் வளர்த்தல், கோழிப்பண்ணை, பால்பண்ணை எனப் பொருள் என்று அறிவியல் பெருஞ் சொல்லகராதி விளக்குகின்றது''[78] எனக் கூறுவர்.

நச்சினார்க்கினியர் வேளாளரை, ''மேனிலை வேளாளர், கீழ்நிலை வேளாளர் என்று இருவகை வேளாளரைக்''[79] கூறுகின்றார்.

**உழவியல் முறைகள்**

**உழவுத் தொழிலின் மேன்மை**

உழவுத் தொழிலை மேற்கொள்வார் உழவர் எனப்பட்டனர். உழத்தல் என்பது இடைவிடாது முயலும் மெய்ம்முயற்சியைக் குறிக்கும் சொல்லாகும். ''இடைவிடாது உழைக்கும் மெய்ம்முயற்சி பயிர்த் தொழிலுக்கு வேண்டப்படுதலின் இத்தொழிலை உழவு என்ற சொல்லால் பண்டையோர் வழங்கினர் போலும்''[80] என்பர். நச்சினார்க்கினியர் உழவுத் தொழிலின்

மேன்மையையும், உழவரின் சிறப்பையும் எடுத்தியம்பி, உழவு செய்யும் முறைகளான, உழுதல், நீர்ப்பாய்ச்சுதல், நாற்றுநடுதல், களை பறித்தல், அறுவடை போன்ற முறைகளையும், உழவுக்குப் பயன்படுத்தப்பட்ட கருவிகளையும் தனது உரையின் வழிப் பதிவு செய்துள்ளார்.

**உழவுத் தொழிலின் மேன்மை**

உழவுத் தொழிலின் மேன்மை உணர்ந்த புலவர், மன்னரின் வெற்றி உழவரின் கலப்பையையே நம்பியிருந்தது என்பதனை,

***"பொரும்படை தரூஉம் கொற்றமும் உழுபடை***
***ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே"[81] (புறம்.35:25-26)***

என்று வெள்ளைக்குடி நாகனார் புகழ்வார். உழவரின் உன்னதத்தை வள்ளுவர்

***"சுழன்றும்ஏர்ப் பின்ன துலகம் அதனால்***
***உழந்தும் உழவே தலை"[82] (குறள்.1031)***

***"பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்***
***அலகுடை நீழ லவர்"[83] (குறள்.1034)***

***"உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்***
***விட்டேமென் பார்க்கும் நிலை"[84] (குறள்.1036)***

என்ற குறட்பாக்களின் வழி குறிப்பிடுகின்றார். நச்சினார்க்கினியர்

***"கூறும் (மதுரைக்.119)***
***இருவகையான் (மதுரைக்.111)***
***வியல் மேவல் விழு செல்வத்து (மதுரைக்.120)***
***இசை சான்ற (மதுரைக்.121)***
***குடி கெழீஇய நாளிலவரொடு (மதுரைக்.123)"***

என்ற அடிகளுக்கு உரை கூறுகின்ற போது, 'உலகத்துத் தொழில்களில் மேலாகச் சொல்லும் உழவு வாணிகம் என்கின்ற இரண்டு கூற்றாலே அகலம் பொருந்துதலையுடைய சீரிய செல்வத்தாலே புகழ்நிறைந்த குடிமக்கள் பொருந்தின நான்கு நிலத்து வாழ்வாருடனே' என்று விளக்கம் அளிக்கிறார். இவ்வுரையின் வழி உலகத்துத் தொழில்களில் மேன்மையான

தொழில்கள் உழவு, வாணிகம் என்று நச்சினார்க்கினியர் குறிப்பிட்டுள்ளதை அறியமுடிகிறது.

**உழுதல்**

உழுதல் என்பது நிலத்தைப் பயன்படுத்துதல் அல்லது செம்மைப் படுத்துதலாகும். பயிர்த் தொழிலுக்குப் பருவம் பார்த்துப் பயிர் செய்தல் இன்றியமையாதது. 'பருவத்தே பயிர் செய்' என்ற பழமொழியும் பண்டையோர் இதனால் வழங்கினர் போலும், வயல்களில் நெல் விதைப்பதற்கு முன்னும் அல்லது நாற்று நடுவதற்கு முன்னும் நிலத்தைப் பலமுறை உழுவர். நச்சினார்க்கினியர் உழுகின்ற முறையினை,

**"குடிநிறை வல்சிச் செஞ்சால் உழவர்**
**நடை நவில் பெரு பகடு புதவில் பூட்டி**
**பிடிவாயன்ன மடிவாய் நாஞ்சில்**
**உடும்பு முகம் முழுகொழு மூழ்க ஊன்றி"**

***(பெரும்பாண்.197-200)***

'அக்குடியிருப்பு நிறைந்த உணவினையுடைய செவ்விய சாலாகவுழுகின்ற உழவுத் தொழிலையுடையோர், ஒருசால், இருசால் என்றல் உழவுத் தொழிற்கு மரபு. உழவுத் தொழிலே பயின்ற பெரிய எருதுகளை வாயிலிலே நுகத்தைப் பூட்டிக் கொண்டு சென்று, பிடியினது வாயையொத்த வளைந்த வாயையுடைய கலப்பையினுடைய உடும்பினது முகத்தையொத்த பெருங்கொழு மறைய அமுக்கி' என்று உரை விளக்குகின்றார். இவ்வுரையின் வழி உழவர்கள் ஒருசால், இருசால் என்று உழுகின்ற மரபுகளையும், உழுகின்ற போது அகலவுழுகாமல் ஆழ உழ வேண்டும் என்கின்ற முறையினையும் அறியமுடிகிறது.

**நீர்ப்பாய்ச்சுதல்**

வயல்களுக்கு நீரினைக் குளங்களில் இருந்து நேரடியாகப் பாய்ச்சுவர். நீர் பற்றாக்குறை ஏற்படும்போது மட்டுமே நீரினை இறைத்துப் பாய்ச்சுவர். அவ்வாறு நீர் இறைக்கும் முறையினை,

**"வயல் அகைய நிறைக்கும் கயன் நீர் (மதுரைக்.92)**
**தெவ்வும் நிரை தொழுவர் (மதுரைக்.89)**
**பாடு சிலம்பும் இசை (மதுரைக்.90)"**

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. 'வயல் தழைக்கும்படி நீரை நிறைத்தற்குக் காரணமான குளங்களில் நீரை இடவான் முகந்துகொள்ளும் நிரையாக நின்று தொழில் செய்வாரிடத்தே ஒலிக்கும் ஓசை' என்று பொருள் கூறுகின்றார். குளங்களில் உள்ள நீரை இடவான் என்னும் இறைக்கூடையால் வரிசையாக நின்று இறைப்பர். அவ்வாறு இறைக்கும் போது களைப்புத் தெரியாமல் இருத்தல் பொருட்டு பாடிக்கொண்டு இறைத்ததனையும் இவ்வுரையின் வழி அறியமுடிகிறது. இன்றும் நீர் இறைக்கும் தொழில் செய்பவர்கள் களைப்புத் தெரியாமல் இருப்பதற்காகப் பாடிக்கொண்டு இறைக்கின்ற முறையினைக் காணமுடிகிறது. இதேபோல் நாற்று நடுகின்ற பெண்களும் பாட்டுப் பாடிக் கொண்டு நடுகின்றனர்.

**அறுவடை**

அறுவடைக்குத் தயாரான நெல் நிலையினையும், அறுக்கப்பட்ட பின் அதனைச் சுத்தம் செய்யும் முறையினையும், சுத்தம் செய்த நெல்லைப் பக்குவப்படுத்திய முறையினையும் குறிப்பிட்டுள்ளார்.

**"கூனி குயத்தின் வாய் நெல் அரிந்து" (பொருநர்.242)**

என்ற அடிக்கு, 'வளைந்து நின்று அரிவாளின் வாயாலே நெல்லையறித்து, நெல்லு மிகக் காய்த்துத் தரையிலே விழுதலின், வளைந்து நிற்க வேண்டும் என்றார்' என்று உரை கூறுகின்றார். நன்கு காய்த்து முற்றிய நெல் வளைந்து நிற்க வேண்டும் என்பதனை இதன்வழி அறியமுடிகிறது.

**"சிலம்பு வால் நூல் வலந்த மருங்கின் குழுமு**
**நிலைப் போரின் முழு முதல் தொலைச்சிப்**
**பகடு ஊர்பு இழிந்த பின்றை**
**துகள் தப வையும் துரும்பும் நீக்கிப் பைதுஅறக்**
**குடகாற்று எறிந்த குப்பை**
**வடபால் செம்பொன் மலையின் சிறப்பத் தோன்றும்"**
**(பெரும்பாண்.236-242)**

என்ற அடிகளுக்கு உரை கூறுகின்ற போது, ‘சிலந்தியினது வெள்ளிய நூல் சூழ்ந்த பக்கத்தினையுடைய பலவாகத் திரண்ட தன்மையினையுடைய போர்களினுடைய பெரிய அடியை வாங்கி விரித்து, ஏர்கள் கடாவிட்டு போன பின்பு, குற்றமறும்படி வைக்கோலையும் கூளத்தையும் அதனிடத்து நின்று நீக்கி ஈரம் உலராநிற்க, மேற்காற்றால் கையாலே தூவித்தூற்றின பொலி, வடதிசைக்கண் உளதாகிய மேருவாகிய மலைபோல மிகும்படித் தோன்றும்’ என்று விளக்குகின்றார். அறுவடை செய்து அடித்த நெல்லின் தாள்களை மாடுகளைவிட்டுப் புனையவிட்ட பின்பு, வைக்கோலையும், கூளத்தையும் நீக்கி நெல்லினை உலர வைப்பர். உலர்ந்தபின் கையினாலேயே அதனைத் தூற்றிக் குவித்து வைத்துள்ள முறையினை இவ்வுரையின் வழி அறியமுடிகிறது. இவ்வாறு அறுவடை செய்த நெல்லினைத் தூய்மைப்படுத்தும் முறை இன்றும் காணப்படுகின்றது.

**“நிள் ஏணி எய்தா நெடு மார்பின்**
**முகடு துமித்து அடுக்கிய பழ பல் உணவின்**
**குமரி மூத்த கூடு ஓங்கு நல் இல்”** ***(பெரும்பண்.245-247)***

என்ற அடிகளுக்கு நச்சினார்க்கினியர், ‘நீண்ட ஏணிக்கு எட்டாத நெடிய வடிவினையும், தலையைத் திறந்து உள்ளே சொரியப்பட்ட பழையவாகிய பல நெல்லினையுமுடைய, பல்லுணவென்றார். செந்நெல் முதலிய சாதிப்பன்மை கருதி அழியாத் தன்மையவாய் முதிர்ந்த கூடுகள் வளர்ந்த நல்ல இல்லினையும், அல்குலினையும், மார்பினையும் உணவினையும் உடைய கூடு’ என்று உரை விளக்குகின்றார். நெல்லினைப் பக்குவப்படுத்த பயன்பட்ட புழங்கு பொருள் நீண்ட நெடிய வடிவுடன், அதன் மேல் பகுதி நெல்லைத் திறந்து கொட்டுவதற்கு ஏதுவாகவும் அமைந்திருக்கின்றன என்பதையும் இந்நெற் கூடின் அமைப்பு பெண்ணின் உருவம் போன்று அமைந்திருந்தன என்பதையும் இவ்வுரையின் வழிப் புலப்படுகிறது. ‘குதிர்’ என்றும் கூடு என்றும் வழங்கப்படுகிறது.

**நெல்லின் வகைகள்**

சங்க இலக்கியங்களில், ஐவன நெல், தோரை நெல், மூங்கில் நெல், தோப்பி நெல், சாலி நெல், முடந்தை நெல், வெண்ணெல், செந்நெல் போன்ற நெல் வகைகள் காணப்படுகின்றன. நச்சினார்க்கினியர் தோரை நெல் என்பதற்கு, மூங்கில் நெல் என்றும், சாலி நெல் என்பதற்குச் செந்நெல் என்றும் உரை கூறுகின்றார்.

***"சிறை கொள் வேலி ஆயிரம்***
***சாலி நெல்லின் விளையுட்டாக"*** ***(பொருநர்.246-247)***

என்பதற்கு, 'வரம்பு கட்டின வேலி நிலம் ஆயிரக் கலமாகிய செந்நெல்லின் விளையுட்டாக' என்று பொருள் கூறுகின்றார். செந்நெல் நன்கு விளையக்கூடிய தன்மை பெற்றுள்ளதை இதன் வழி அறியமுடிகிறது.

***"பூ மலி புறவில் புயல் புனிறு போகிய***
***அம் பொதி தோரை அவல் பதம் கொண்டன"***
***(மலைபடு.120-121)***

என்ற அடிகளுக்கு நச்சினார்க்கினியர் உரை கூறுகின்ற போது, 'பூ மிக்க காட்டிடத்தே மழையால் ஈண்றணிமை தீர்ந்து முற்றிய அழகிய குலையினையுடைய மூங்கில் நெல் அவலிடிக்குஞ் செவ்வியைக் கொண்டன; என்று குறிப்பிடுகின்றார். நெல்லின் வகைகளில் ஒன்றான தோரை நெல் என்பதற்கு இவர் காலத்தில் மூங்கில் நெல் என்று வழங்கி வந்திருந்தமைப் பற்றியும் மூங்கில் நெல்லில் அவல் செய்தமைப் பற்றியும் இவ்வுரையின் வழி பெறப்படுகின்றது. அவல் அனைத்து நெல்லினாலும் இன்று செய்யப்படுகின்றது.

**பயிர் வகை**

வழுதுணங்காய் (கத்தரிக்காய்), சுரைக்காய், புன்னங்காய், முந்திரிகைப் பழம் முதலிய பயிர் செய்யப்பட்டதனைக் குறிப்பிட்டுள்ளார்.

***"கொடு கால் புன்னை கோடு துமித்து இயற்றிய***
***பைங்காய் தூங்கும் பாய் மணல் பந்தர்"***
***(பெரும்பாண்.266-267)***

என்ற அடிகளுக்கு, ‘வளைந்த காலையுடைய புன்னைகளினது கொம்புகளை வெட்டியிட்ட பசியகாய்கள் நாலும் பரந்த மணலையுடைய பந்தரிலே, பைங்காய், சுரைக்காய் முதலியன; புன்னங்காயுமாம்’ என்று உரை விளக்குகின்றார். புன்னை மரங்களின் வளைந்த காலை வெட்டி அவற்றால் பந்தல் அமைத்துச் சுரைக்காய், புன்னங்காய் முதலியவற்றைப் பயிர் செய்திருந்ததனை இதன்வழி அறியமுடிகிறது. இன்றும் சுரைக்காய், புடலங்காய், பாகற்காய், பீர்க்கங்காய் முதலிய காய்கறிகளைப் பந்தல் அமைத்துப் பயிர் செய்து வருகின்றனர்.

**“பல் வேறு உருவிற் காயும்”** ***(மதுரைக்.529)***

என்பதற்கு, ‘பலவாய் வேறுபட்ட பழனும் வடிவினையுடைய பாகற்காய், வாழைக்காய், வழுதுணங்காய் முதலிய காய்களையும், வாழைப்பழம், முந்திரிகைப்பழம் முதலிய பழங்களையும்’ என்று பொருள் கூறுகின்றார். இவர் காலத்தில் கத்தரிக்காய் வழுதுணங்காய் எனவும், திராட்சைப் பழம் முந்தரிக்கைப்பழம் எனவும் அழைக்கப்பட்டதனை இவரது உரை வழித் தெறிவிக்கின்றார். மேலும் இப்பயிர் வகைகள் தமிழகத்தில் அதிகம் பயிர் செய்யப்பட்டிருக்கின்றன என்பதும் புலனாகிறது.

**பயிர்க் காத்தல்**

பயிர்களை விலங்கு, பறவை போன்றவற்றிடம் இருந்து பாதுகாத்த நிலையினைத் தனது உரையின் வழி வெளிப்படுத்துகின்றார்.

**“தழலும் தட்டையும் குளிரும் பிறவும்**
**கிளி கடி மரபின ஊழ் ஊழ் வாங்கி”** ***(குறிஞ்சிப்.43-44)***

என்ற அடிகளுக்கு நச்சினார்க்கினியர் உரை கூறுகின்ற போது, ‘தழலும், தழலாவது கையாற் சுற்றினகாலத்துத் தன்னிடத்துப் பிறக்கும் ஓசையாற் கிளி முதலியவற்றை ஓட்டுங்கருவி; கவணென்பாருமுளர். தட்டையும், தட்டையாவது மூங்கிலைக் கண்ணுக்குக்கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதோர் கருவி, குளிரும் குளிராவது

இவைபோல்வதோர் கிளிகடி கருவி ஏனையவும் பிறவென்றது கவண் முதலியவற்றைத் தழலும், தட்டையும், குளிரும் பிறவுமாகிய கிளியோட்டும் முறைமையினையுடையவற்றை முறையே கையிலே வாங்கி ஒட்டி' என்று குறிப்பிடுகின்றார். தழல், தட்டை, முதலிய கருவிகளை எந்த நிலைகளில் இயக்கினால் பறவைகளை விரட்டமுடியும் என்பதை இவ்வுரையின் வழி வெளிப்படுத்துகின்றார். இன்று கவண் என்ற கருவி புழக்கத்தில் இருந்து வருகின்றது. மேலும், சுதர்சன் தட்டை எனும் கருவி பிற்காலத்தில் வளர்ச்சியுற்றுத் தண்ணுமைக்குத் துணையாக இசைக்கக்கூடிய கருவியாக மாறியிருந்ததனை,

> **"தட்டை தண்ணுமை பின்னர் இயவர்**
> **தீம்குழல் ஆம்பலின் இனிய இமிழும்"** ***(ஐங்குறு.215:3-4)***

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் வழி விளக்குகின்றார். குளிர் என்பதற்கு, உ.வே.சாமிநாதையர் "மூங்கிலை வீணைபோற் கட்டித் தெறிக்குங் கருவி என்பர்"[85] என்று குறிப்பிட்டிருப்பது பிற்காலத்தில் வீணைக்கு முன்னோடியாகக் குளிர் எனும் கருவி அமைந்திருந்தது என்பது பெறப்படுகின்றது.

**நெசவுத்தொழில்**

மனிதனுக்கு உணவினை அடுத்து இன்றியமையாததாக வேண்டப் படுவது ஆடையாகும். விலங்குகளைப் போலன்றி உடலை மறைத்தற்குரிய உடையினை அணிந்து மானத்துடன் வாழும் முறை மக்கள் வாழ்க்கையின் சிறப்பியல்பாகும். நாகரிகம் வளராத மிகப்பழங்காலத்தில் மனிதர்கள் தழை, இலை, மரப்பட்டை, மான் தோல், புலித்தோலினை உடுத்தி வாழ்ந்தனர். பின்னர் தன்னுடைய நுண்ணறிவினால் பருத்தியின் பஞ்சினை நூலாக நூற்று, ஆடையாக நெய்து அணியத் தொடங்கினான். மனித வரலாற்றில் இது ஓர் புதிய திருப்பமாகும். இப்புதிய முயற்சியின் விளைவினால் தொடங்கிய தொழில் நெசவுத் தொழிலாகும்.

நெசவுத் தொழிலினைப் பற்றிக் கலைக்களஞ்சியம், "இது வீட்டுத் தொழில்களில் முக்கியமானது. பண்டைத் தொழில்களுள் ஒன்று.

விவசாயத்துக்கு அடுத்தது. மக்கள் நாகரிகம் அடையத் தொடங்கியதும் கையாண்ட முதல் கைத்தொழில்"[86] என்று குறிப்பிடுகின்றது. "தமிழகத்திற் பழங்காலத்திலேயே நெசவு தோன்றிவிட்டதென ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். வயவர் யோவான் மார்சல் (Sir John Marshall) தம் மொகொஞ்சோ தாரோவும் சிந்து நாகரிகமும் (Mohenjo-Dara-and the Indus Civilization) என்னும் நூலில் கி.மு.3000 ஆண்டுகட்குமுன் மேனாடுகட்கு இந்தியாவினின்றே துணி ஏற்றுமதியானதென்று கூறியிருக்கின்றனர். அக்காலத்திந்தியா தமிழகமே"[87] என்று குறிப்பிடுவர்.

ஆடையைப் பற்றிய குறிப்புகள் தொல்காப்பியத்தில் காணப்படுவதால் இந்நெசவுத் தொழிலின் தொன்மையை நன்கு அறியமுடிகிறது.

**"கூழை விரித்தல் காதொன்று களைதல்**
**ஊழணி தைவரல் உடைபெயர்த் துடுத்தலோ**
**டூழி நான்கே இரண்டென மொழிப" (தொல்.பொருள்.249)**

என்ற நூற்பா இதற்குச் சான்றாகும்.

சங்க இலக்கியங்கள் நெசவுத் தொழிலின் வளர்ந்த நிலையைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. நெசவுத் தொழிலுக்குப் பருத்தி மிகவும் இன்றியமையாத மூலப்பொருளாக விளங்கியது. தமிழகத்தில் பருத்தி விளைச்சல் மிகுதியாக இருந்ததனை,

**"பருத்தி வேலிச் சீறூர்" (புறம்.299:1)**

**"பன்னல் வேலியிப் பணை நல்லூர்" (புறம்.345:20)**

என்ற புறநானூற்று அடிகள் வழி அறியமுடிகின்றது. "பருத்தி அன்றி இலவமரம், கோங்குமரம் முதலிய மரங்களிலிருந்து வேண்டிய பஞ்சு சேகரித்து நெசவுத் தொழிலுக்குப் பயன்படுத்தினர்"[88] என்பர். இதன்வழிப் பருத்தி, இலவமரம், கோங்குமரம் முதலியவற்றிலிருந்து பஞ்சு தயாரித்து நூல் நூற்றுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

“ஹெரடோடஸ் என்னும் யவன ஆசிரியர் நம் நாட்டுப் பஞ்சைப் பற்றிப் பேசும் போது, ‘மரங்களில் வளரும் பஞ்சு’ என்றும், அஃது ஆட்டு ரோமங்களால் உண்டாக்கும் கம்பளிகளிலும் மேலானது”[89] என்றும் கூறுகின்றார்.

**பட்டுடை**

பட்டுப்புழுக் கூட்டிலிருந்து எடுக்கப்பட்ட பட்டுநூல் பட்டாடை செய்யப் பயன்படுத்தப்பட்டது. இக்காலக் காஞ்சிபுரப் பட்டுச்சேலை மற்றும் சாதாரண பட்டுப் புடவைகளின் முந்தானை ஓரத்தில் அழகிய மணி போன்ற நூன் முடிச்சுகள் இருப்பது போன்று அவர் காலத்தில் பட்டாடையின் முந்தானையில் முடுச்சுக்கள் காணப்படுகின்றன.

**“தூய கொட்டைக் கரைய பட்டுடை நல்கி” (பொருநர்.155)**

என்பதற்கு, ‘தூயவாகிய திரள முடிந்த முடிகளைக் கரையிலேயுடைய பட்டாகிய உடைகளைத் தந்து’ என்று எழுதிய உரையால் பட்டாடைக்கு முந்தானையில் முடிச்சுக்கள் இடும் தொழில் செய்வார் இருந்தமையை அறியமுடிகிறது.

**தச்சுத் தொழில்**

தச்சர்கள் மக்களுக்கு வேண்டிய மரச்சாமான்களையும், வண்டிகளையும், தேர்களையும், குழந்தைகள் விளையாடக்கூடிய பொம்மைகள், வண்டிகள் போன்றவற்றையும் செய்து கொடுத்தனர். இத்தச்சுத் தொழிலினைப் பற்றி, “தகுதியுள்ள மரங்களை அறுத்து வீடமைத்தற்கும், வண்டி, தேர் முதலிய செய்தற்கும் வழி கண்ட பெருமை தச்சர் என்னும் தொழிலாளர்க்கே உரியதாகும். மக்கள் சுமந்து செல்லுதற்குரிய சுமையை எளிதிலே எடுத்துச் செல்வதற்கு ஏற்ற வண்டிகளையும், மக்கள் விரைந்து செல்லக்கூடிய தேர் முதலிய ஊர்திகளை உண்டாக்கியதும் தச்சுத் தொழிலின் நுண்ணுணர்வே யாகும்”[90] என்று குறிப்பிடுவார் சசிவல்லி.

“தச்சு என்பது ஒன்றையும் மற்றொன்றையும் பொருத்தி இணைப்பதாகும். இத்தச்சுத் தொழிலைச் செய்வோர் தச்சர் எனப்பட்டனர்.

கல்தச்சுத்தொழில் செய்வோர் கல்தச்சர் எனவும், மரத்தச்சுத் தொழில் செய்வோர் மரத்தச்சர் எனவும் வழங்கப்பட்டனர். இவ்விருவகைத் தச்சர்கட்கும் கம்மாளர் என்ற பெயரும் உண்டு”[91] என்பர் வி.சசிவல்லி.

**வண்டியின் அமைப்பு (அ) தோற்றம்**

முற்காலத்தில் தமிழ்நாடெங்கும் பொருள்களை ஏற்றிச் செல்லத்தக்க திண்ணிய கால்களையுடைய வண்டிகள் செய்யப்பட்டுள்ளன. அவ்வண்டியின் தோற்றமும் அதன் பல்வேறு உறுப்புகளும், தெளிவாகப் பெரும்பாணாற்றுப் படையில் விளக்கப்பட்டுள்ளன.

**“சென்மோ விரவல சிறக்க நின் னுள்ளங்**
**கொழுஞ்சூட் டருந்திய திருந்துநிலை யாரத்து**
**முழவின் அன்ன முழுமர வுருளி**
**யெழூஉப்புணர்ந் தன்ன பரூஉக்கை நோன்பார்**
**மாரிக் குன்ற மழைசுமந் தன்ன**
**வாரை வேந்த வறைவாய்ச் சகடம்”   (பெரும்பாண்.45-50)**

என்ற அடிகளுக்கு உரை கூறுகின்ற போது, “மத்தளத்தையொத்த குறட்டிடத்தே தைத்த சிக்கென்ற தன்மையையுடைய ஆரிடத்தே நன்றாகிய வளைந்த மரம் சூழ்ந்து கிடக்கப்பட்ட உருளையையும் அச்சுக்கோக்கின்ற இடமுமாம். அக்குறட்டிலே தைத்துக் கிடக்கின்றது. ஆர் சூட்டு விளிம்பில் வைத்த வளைந்த மரம். கணையமரம் இரண்டு சேர்ந்தாலொத்த பருத்த கைகளையுடைய வலிய பாரையுமுடைய, அச்சுமரத்தின் மேலே நெடியவாய் இரண்டு பக்கத்தும் நெடுகக் கிடக்கின்ற பருமரங்களைப் பரூஉக்கையென்றார். அம்மரங்களிரண்டினையும் நெருங்கத் துளைத்துக் குறுக்காக ஏணிபோலக் கோத்ததனைப் பாரென்றார். மலை மாரிக் காலத்து மேகத்தைச் சுமந்து நின்றாற் போன்ற தொத்துளிப் பாயாலே வேய்ந்த ஒலிக்கின்ற வாயையுடைய சகடம்” என்று பொருள் கூறுகின்றார். இவ்வுரையின் வழி குறடு (இன்று குடம் என்று கூறுவர்) அச்சு, பார் (நுகத்தடி) போன்ற வண்டியின் ஒவ்வொரு உறுப்பையும் நன்கு அறிந்து அவற்றின் பெயர்களைப் பொருள் அறிந்து தெளிவாக விளக்கியுள்ளதை அறியமுடிகிறது.

**தேரின் அமைப்பு**

தமிழ்நாட்டுத் தச்சர்கள் மக்கள் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களையும், வசதிக்குத் தேவையான வண்டிகளையும் தேர்களையும் செய்து கொடுத்தனர். பழங்காலத்தில் நால்வகைப் படைகளில் தேர்ப்படையும் ஒன்றாக இருந்ததால் தேர் செய்வது அன்றைய தச்சர்களின் தலையாயக் கடமையாக இருந்திருக்கின்றது. இவ்வாறு செய்யப்பட்ட தேர்களின் அமைப்பினையும் அவற்றின் உறுப்பினையும் பொருள் அறிந்து கூறுகின்றார்.

**"கூர் உளி பொருத வடு ஆழ் நோன் குறடு**
**ஆரம் சூழ்ந்த அயில்வாய் நேமியொடு**
**முருக்கின் சேண் ஓங்கு நெடு சினைததர்**
**நனை சிதர் பிணி அவிழ்ந்த தோற்றம் போல**
**உருக்குறு அரக்கு உள் எறிந்த போர்வை**
**கரு தொழில் வினைஞர் கைவினை முற்றி**
**ஊர்ந்து பெயர் பெற்ற எழில் நடை பாகர்" (சிறுபாண்.252-258)**

என்ற அடிகளுக்கு, 'கூரிய சிற்றுளிகள் சென்று செத்தின உருக்களழுந்தின வலியினையுடைய குறட்டிடத்திற்றைத்த ஆர்களைச் சூழ்ந்த சூட்டினையுடைய உருளையோடே முருக்கினுடைய விசும்பிலே செல்ல வளர்ந்த நெடிய கொம்பிற் செறிந்த அரும்புகள் வண்டிற்குப் பிணியவிழ்ந்த தோற்றரவு போல, வலிய தொழிலைச் செய்யுந் தச்சருடைய கையாற் செய்யும் உருக்களெல்லாம் முற்றுப்பெற்று உருக்கப்படுஞ் சாதிலிங்கம் உள்ளே நிரம்ப வழித்த பலகையையுடைய பாகர், தேர்த்தட்டு வெளிமறையப் பாவின பலகையைப் போர்வையென்றார். அதன்மேலே சுற்றிச் சுவராகப் பலகையாற் செய்த சுவரைப் பாகர் என்றார். பாகரையுடைய தேரைப் பாகரென்றார். ஏறிப்பார்த்து உண்மையாக ஒட்டமுண்டென்று பெயர்பெற்ற அழகினையுடைத்தாகிய நடையினையுடை தேர்' என்று உரை விளக்குகின்றார்.

நச்சினார்க்கினியர் தேர் செய்யும் தச்சர்களை நேரில் சந்தித்து அதன் உறுப்புகள் மற்றும் செய்யும் முறையினையும் அறிந்து உரை வரைந்திருக்கின்றார் என்பது இதன்வழிப் புலனாகிறது. 'குறடு' என்பதற்கு பொ.வே.சோமசுந்தரனார்,

“ஆறங்களைத் தைத்தற்குரியதாய் உருளையின் நடுவிடத்துள்ளதோர் உறுப்பு: இதனை இக்காலத்தார் ‘குடம்’ என்று வழங்குப” என்று குறிப்பிடுவர். இன்றும் இவ்வுருளையைக் ‘குடம்’ என்ற பெயரால் வழங்கி வருகின்றனர்.

**வாயிற்கதவின் அமைப்பு**

தச்சர்கள் அழகிய தூண்களையும் வேலைபாடுமிக்க நிலைகளையும் திண்ணிய கதவுகளையும் செய்துள்ளனர்.

**“பரு இரும்பு பிணித்து செவ்வரக்கு உரீஇ**
**துணைமாண் கதவம் பொருத்தி யிணைமாண்டு**
**நாளொடு பெயரிய கோளமை விழுமரத்துப்**
**போதவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்துத்**
**தாழொடு குயின்ற போரமை புணர்ப்பிற்**
**கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதீர்ந்**
**தையவி யப்பிய நெய்யணி நெடுநிலை” (நெடுநல்.80-86)**

என்ற அடிகளுக்கு, ‘ஆணிகளும் பட்டங்களுமாகிய பரிய இரும்பாலே கட்டி, சாதிலிங்கம் வழித்து, தாழோடே சேரப் பண்ணின இரண்டாய் மாட்சிமைப்பட்ட கதவைச் சேர்த்தி, இணைதல் மாட்சிமைப்பட்டு புதிய போதாய் அவிழ்ந்த குவளைப் பூவோடே பிடிகளையும் தன்னிடத்தே பண்ணி, என்றது நடுவே திருவும் இரண்டும் புறத்தும் இரண்டு செங்கழு நீர்ப்பூவும் இரண்டு பிடியுமாக வகுத்த உத்தரக் கற்கவி, உத்தரமென்னும் நாளின் பெயர் பெற்ற உத்தரக் கற்கவியிலே செருகுதல் பொருந்தின நெடுநிலை கைத்தொழில் வல்ல தச்சன் கடாவுகையினாலே வெளியற்றுப் பலமரங்களும் தம்மிற் கிட்டுதலமைந்த கூட்டத்தினையுடைய நெடுநிலை வெண்சிறு கடுகு அப்பிவைத்த நெய்யணிந்த நெடிய நிலையினையுடைய, அதிற்தெய்வத்திற்கு வெண்சிறு கடுகும் நெய்யு மணிந்து’ என்று பொருள் விளக்குகின்றார். வாயிற் கதவு செய்யும் தச்சன் கதவினைச் செய்யும் முறை, அவற்றில் செதுக்கப்பட்ட உருவங்கள், கதவினை உத்திரம் என்னும் நாளில் பொருத்தியது, பல மரங்களால் கதவினைச் செய்தல், கதவிற்கு நெய், வெண்சிறுகடுகு

முதலியவை அணிதல் போன்ற முறைகளைத் தனது உரையின்வழி வெளிப்படுத்தியுள்ளார்.

**மட்கலத் தொழில்**

பண்டைய நாளில் மனிதன் பெரும்பாலும் மண்பாண்டங்களைப் பயன்படுத்தியுள்ளான். சமைத்தல், தானியங்கள் சேமித்து வைத்தல், உணவு உண்ணுதல் போன்றவற்றிற்கு மண்ணால் ஆன பொருள்களைப் பயன்டுத்தினான். இவற்றிற்கு மட்டும் அன்றி இறந்தவர்களின் உடலைப் புதைத்தற்கும் மண்ணால் ஆன தாழிகள் பயன்டுத்தப்பட்டன. சக்கரத்தைக் கொண்டு மட்கலங்கள் செய்ததனைத் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

**“வனை கலம் திகிரியின் குமிழி சுழலும்**
**துனை செலல் தலைவாய் ஓவு இறந்து வரிக்கும்”**
**(மலைபடு.474-475)**

என்ற அடிகளுக்கு, ‘குயவன் வனைகின்ற மட்கலத்திற் சக்கரம்போலக் குமிழி சுழன்று தோன்றும் விரைந்த செலவினையுடையவாய்த் தலையில் ஒழிவின்றி ஓடும் ஆறு’ என்று உரை கூறுகின்றார். மேலும்,

**“தொல்லை முரவு வாய் குழிசி**
**முரி அடுப்பு ஏற்றி” (பெரும்பாண்.98-99)**

என்பதற்கு, ‘பழைய ஒறுவாய் (பி.ம்.வெறுவாய்) போன பானையிலே வார்த்தலையுடைய முரிந்த அடுப்பிலே வைத்து’ என்று பொருள் விளக்கம் அளிக்கின்றார். இவ்வுரையின் வழி மண்ணால் செய்யப்பட்ட பொருள்களைப் பயன்படுத்தினர் என்பதும், சக்கரத்தினால் மண்பாண்டங்கள் நச்சினார்க்கினியர் காலத்தில் செய்யப்பட்டிருக்கின்றன என்பதையும் அறியமுடிகிறது. இன்றும் சக்கரத்தைக் கொண்டு மண்பாண்டங்கள் செய்து வருகின்றனர்.

**கொல்லுத் தொழில்**

கொல்லர்கள் இரும்பைப் பயன்படுத்தி உலைக்களத்தில் கருவிகள் செய்து பொருள் ஈட்டி வாழ்க்கை நடத்தினர். கொல்லர் என்பதற்குச் செந்தமிழ் அகராதி “கொற்றொழில் புரிவோர், அரண்மை வாயிற் காப்போர்”[92] என்று

பொருள் கூறுகின்றது. நர்மதா தமிழ் அகராதி, “இரும்பினைப் பளுக்கக் காய்ச்சி அடித்து வண்டிச்சக்கரப்பட்டை, அச்சுப் போன்ற பொருட்களைச் செய்யும் கருமான்”[93] என்று விளக்கம் கூறுகின்றது. இவற்றின்வழி கொல்லர் என்பதற்கு இரும்பைக் காய்ச்சி அடித்து அரிவாள், சக்கரப்பட்டை, மண்வெட்டி, களைக்கொட்டு போன்ற பொருள்கள் செய்வாரைக் குறிக்கும். நச்சினார்க்கினியர் இரும்பினால் செய்த விளக்கு, தோட்டி (அங்குசம்) முதலியவற்றைக் குறிப்பிட்டுள்ளார்.

**“வைந்நுதி பொருத வடு ஆழ் வரி நுதல்”** ***(முருகு.78)***

என்பதற்கு, ‘கூர்மையுடத்தாகிய தோட்டி, (அங்குசம்) வெட்டின வடுவழுந்தின புகரையுடைய மத்தகத்தே’ என்று பொருள் கூறுவர். இதன்வழி இரும்பினால் தோட்டி (அங்குசம்) யானையை அடக்கும் கருவி செய்யப்பட்டமை புலனாகிறது.

**உலோகத் தொழில்**

பண்டைத் தமிழர் பல்வகை உலோகங்களைப் பயன்டுத்தித் தங்களுக்குத் தேவையான பொருட்களைச் செய்வதில் சிறப்புற்றிருந்தனர். இரும்பு, பொன் ஆகிய உலோகங்களைக் கொண்டு செய்யும் கொல்லர்கள் இருந்தது போலவே வெண்கலம், செம்பு முதலிய உலோகங்களை உருக்கும் திறம் பெற்று அவற்றால் மக்கள் பயன்படுத்துவதற்குரிய பலவகையான பொருட்களையும் செய்ய வல்லவர்கள் தொழிலாளர்களே ஆவர்.

“வெண்கலத்தை உருக்கி கலங்கள் முதலியன செய்பவர் கஞ்சகாரர் என்றும், செம்பினால் கலம் செய்வார் செம்பு கொட்டிகள் என்றும் அழைக்கப்பட்டனர்”[94] என்கிறார் வி.சி.சசிவல்லி. பொன்வட்டில், வெள்ளிக்கலம் போன்ற உலோகத்தால் ஆன பொருளைக் குறிப்பிடுகின்றார்.

**“போக்கு இல் பொலங்கலம் நிறைய தர தர”** ***(பொருநர்.86-87)***

என்பதற்கு, ‘ஓட்டமற்ற (குற்றமில்லாத) பொன்னாற் செய்த வட்டில் நிறையத் தரத்தர’ என்று பொருள் கூறுவர். மேலும்,

***"மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி***
***மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்***
***தானா விருப்பிற் றானின் றூட்டி***
***மங்குல் வானத்துத் திங்க ளேய்க்கும்"  (பெரும்பாண்.477-480)***

என்ற அடிகளுக்கு, 'திசைகளையுடைய ஆகாயத்திடத்தே உடுக்கள் தோன்றினாற் போன்ற சிறிய வெள்ளிக் கலங்களையும், திங்களை யொக்கும் பெரிய வெள்ளிக் கலங்களையும் நும்முடைய பிள்ளைகளுக்கு இடையே பரப்பி தான் முகம் பொருந்தி அமையாத ஆசையுடன் நும்முடைய பிள்ளைகளைப் பார்த்து நின்று உண்ணப்பண்ணுவித்து' என்று உரை கூறுகின்றார். உயர்நிலை மக்கள் பொன், வெள்ளி போன்றவற்றால் செய்த பொருள்களைப் புழங்கு பொருட்களாகப் பயன்படுத்தியுள்ளனர். இது இவர்களின் செல்வச் செழிப்பை வெளிப்படுத்துகின்றது. இன்றும் செல்வந்தர்கள் சிலர் தங்கள் குழந்தைகளுக்கு வெள்ளி, தங்கம் ஆகியவற்றால் செய்த தட்டில் (வட்டில்) உணவு கொடுத்து வருகின்றனர்.

**தோல் தயாரிக்கும் தொழில்**

இயற்கையோடு இயைந்து வாழ்ந்த பண்டைத் தமிழர் தோலின் பயனை அறிந்து அவற்றைப் பதப்படுத்தி வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களைத் தயாரித்துள்ளனர். ஆட்டுத் தோலினால் செய்த படுக்கையை நச்சினார்க்கினியர் தனது உரையின் வழிப் பதிவு செய்துள்ளார்.

**தோற்படுக்கை**

***"துய்மயிர் அடக்கிய சேக்கை யன்ன***
***மெய் உரித்து இயற்றிய மிதி அதள் பள்ளி"  (மலைபடு.418-419)***

என்ற அடிகளுக்கு, 'மெல்லிய தலைமயிரினையுடைய சேணமிட்ட படுக்கையையொத்த ஆடுகளின் மெய்யையுரித்து ஒன்றாகத் தைத்த வார்மிதித்த தோற்படுக்கை' என்று பொரு விளக்கம் தருகிறார். ஆட்டுத் தோலினைப் பதப்படுத்தி அதனை ஒன்றாகத் தைத்துத் தோற்படுக்கை தயாரித்துள்ளனர் என்பதை இவ்வுரையின் வழி அறியமுடிகிறது.

**தோல்பை**

**"பசு ஊன் பெய்த சுவல் பிணி பைந்தோல்" (பெரும்பாண்.283)**

என்ற அடிக்கு, 'செவ்வியான இறைச்சியை இட்டு வைத்த தோளிடத்தே கோத்து நாற்றின பசிய தோலினையுடைய' என்று உரை விளக்குகின்றார். மீன்களைத் தோலினால் செய்த பையில் இட்டு தோளின் மேல் கோத்துக் கொண்டு மீன் பிடித்ததனை இவ்வுரையின் வழி வெளிப்படுத்தியுள்ளார்.

**அணிகலன் தொழில்**

அணிகலன்களை ஆண் பெண் பேதமின்றி அணிந்தனர். உலோகம், செம்பு, பொன், வெள்ளி முதலியவற்றால் அணிகலன்கள் செய்துள்ளனர். வாழ்வின் தரத்திற்கு ஏற்றாற்போல அணிகலன்களை வாங்கி அணிந்து கொண்டனர். தலையணி, காதணி, கையணிகள் போன்றவற்றை நச்சினார்க்கினியர் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

**தலைக்கோலம்**

சீதேவி என்னும் தலைக்கோலம் சுறாவினது வாயாகப் பண்ணின தலைக்கோலம் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

**"தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின் வைத்து**
**திலகம் தைஇய தேம் கமழ் திருநுதல்**
**மகரப்பகுவாய் தாழ மண்ணுறுத்து" (முருகு.23-25)**

என்ற அடிகளுக்கு, 'சீதேவி யென்னும் தலைக்கோலத்துடன் வலம்புரி வடிவாகச் செய்த தலைக்கோலத்தையும் வைத்தற்குரிய இடத்தே வைத்துத் திலகமிட்ட மணம்நாறுகின்ற அழகினையுடைய நெற்றியின் கண்ணே சுறாவினது அங்காந்த வாயாகப் பண்ணின தலைக்கோலம் தங்கப்பண்ணி' என்று பொருள் கூறுகின்றார். மேலும்,

**"சுறவு வாய் அமைந்த சுரும்பு சூழ் சுடர் நுதல்"**
**(பெரும்பாண்.385)**

என்ற அடிக்கு, 'மகரவாயாகிய தலைக்கோலத்தைச் சேர்த்தின சுரும்புகள் சூழும் ஒளியையுடைய நுதலினையும் என்று விளக்குகின்றார். இவர் காலத்தில்

சுறாவினது வாயாகச் செய்த தலைக்கோலம் செய்யப்பட்டுள்ளது. இதனைச் சீதேவி' என்ற பெயரால் நச்சினார்க்கினியர் குறிப்பிட்டுள்ளார்.

**காதணிகள்**

பொன், கல்லினால் செய்யப்பட்ட அணிகலன்களைக் குறிப்பிட்டுள்ளார்.

***"புனல் ஆடு மகளிர் இட்ட பொலங்குழை" (பெரும்பாண்.312)***

என்ற அடிக்கு, 'நீராடுகின்ற மகளிர் போகட்டுப்போன பொன்னாற் செய்த மகரக்குழையினை' என்று கூறுவர்.

***"ஒள் குழை புணரிய வாள் தாழ் காதின்" (மதுரைக்.709)***

என்ற அடிக்கு 'ஒள்ளிய மகரக்குழை பொருந்திய வளவிய தாழ்ந்த காதினையும்' என்று உரை கூறுகின்றார். காதில் அணியக்கூடிய அணிகலன்களைப் பொன், கல் போன்றவற்றால் செய்திருந்தமையை இவரது உரை வழி அறியமுடிகிறது.

**கையணிகள்**

***"வெள்ளி வள்ளி வீங்கு இறை மெத்தென்***
***பணைத் தோள்" (நெடுநல்.36-37)***

என்ற அடிகளுக்கு, 'உரை வரைகின்ற போது, வெளுக்கப்பட்டதாகிய சங்கு வலை இறுகின இறையினையுடைய மெத்தென்ற பணை போலுந் தோளினையும்' என்று பொருள் கூறுகின்றார். சுட்டு வெளுக்கப்பட்ட சங்கினால் வளையல் செய்ததனைக் குறிப்பிடுகின்றார்.

**சுண்ணம் தயாரித்தல்**

***"பலர் தொகுபு இடித்த தாதுஉகு சுண்ணத்தார்" (மதுரைக்.399)***

என்ற அடிக்கு, 'இடிக்க வல்லார் பலரும் திரண்டு இடித்த பூந்தாதுக்களைப் போலப் பரக்குஞ் சுண்ணத்தையுடையாரும் என்பது பொருள். இவற்றுள் தாது என்பதற்கு, நீறுமாம் என்று பொருள் கூறுவர். நவமணிகளும், பொன்னும், சந்தனமும், கருப்பூரம் முதலியனவும் புனுகிலும் பனிநீரிலும் நனைய

வைத்திடித்தலின் இடிக்கவல்லார் பலரும் வேண்டிற்று' என்று பொருள் கூறுகின்றார். இவ்வுரையின் வழி நச்சினார்க்கினியர் நவமணி, பொன், சந்தனம், கருப்பூரம் முதலியவற்றைப் புழுகிலும் பனிநீரிலும் நனைய வைத்து இடித்துச் சுண்ணம் தயாரித்துள்ளனர் என்பதையும், சுண்ணத்தைப் பலரும் சேர்ந்து இடித்துள்ளனர் என்பதையும் அறியமுடிகிறது.

**சாயப்பாக்கு தயாரித்தல்**

உடலுக்கு அழகைக் கொடுக்கும் கருங்காலியைச் சீவிக்காய்ச்சி அதனைப் பசிய பாக்குடனே கலந்து சாயப்பாக்குத் தயாரிக்கும் தொழில் நடைபெற்றதனை,

> **"தகை செய் தீ சேறு இன் நீர் பசு காய்**
> **நீடு கொடி இலையினர்"** ***(மதுரைக்.400-401)***

என்ற அடிகளுக்கு உரை கூறுகின்றபோது, 'உடம்பிற்கு அழகைக் கொடுக்கும் இனிய கருங்காலி சீவிக் காய்ச்சின களிக்கலந்த இனிய நீரையுடைய பசிய பாக்குடனே வளர்ந்த கொடியீன்ற வெற்றிலையுடையாரும்' என்று பொருள் கூறுவர். பாக்கு வேகவைத்துப் பக்குவப்படுத்தும் தொழில் இருந்தமையை இவ்வுரையின்வழி வெளிப்படுத்துகின்றார்.

**நூல் தொழில்**

பண்டைக் காலத்தில் நூலால் பல பொருட்கள் செய்யப்பட்டன. அக்காலத்தில் மன்னர்கள் பகைவரைப் பொறுதற்பொருட்டுத் தம் அரண்மனை முற்றத்தில் கொடியுயர்த்தி அதன் அருகே பந்தையும் பாவையும் தொங்கவிட்டிருப்பர். இவ்வாறு கட்டிவைப்பதன் பொருள் பகைவரை யாம் பெண்டிர் போலக் கருதுகின்றோம். ஆண்மையாளர் இருந்தால் இவற்றை அறுமின் என்பதே ஆகும். இவ்வாறு தொங்கவிடப்படும் பந்தும் பாவையும் நூலால் செய்யப்பட்டவையாகும். இதனை நச்சினார்க்கினியர் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

**"வரி புனை பந்தொடு பாவை தூங்க"  (முருகு.68)**

என்ற அடிக்கு, 'நூலால் வரிந்து புனையப்பட்ட பந்தும் பாவையும் அறுப்பாரின்மையின் தூங்கியேவிடும்படி, என்றது; பகைவரை மகளிராக்கி அவர் கொண்டு விளையாடுதற்குத் தூக்கின' என்று உரை கூறுகின்றார். நூலால் பந்தும் பாவையும் செய்யப்பட்டமையை அறியமுடிகிறது.

**நூலேணி**

நள்ளிரவில் களவு செய்தற்கு இடம் பார்த்துத் திரிகின்ற கள்வர் பற்றிக் குறிப்பிடுகையில் அவர்கள் நூலிலேணியை இடையில் சுற்றியிருப்பர் என்ற குறிப்புக் காணப்படுகின்றது.

**"மென்னூல் ஏணிப் பன்மாண் சுற்றினர்"  (மதுரைக்.640)**

என்ற அடிக்கு விளக்கம் கூறுகையில் 'மெல்லிய நூலாற் செய்த ஏணியை அரையிலே பலவாய் மாட்சிமைப்படச் சுற்றிய சுற்றினையுடையராய் மதிற்றலையிலே உள்ளேவிழ வெறித்தாற் கைபோல மதிலைப் பிடித்துக் கொள்ளும்படி இரும்பால் சமைத்ததனைத் தலையிலேயுடைய நூற்கயிற்றை உள்ளே விழவெறிந்து அதனைப் புறம்பே நின்று பிடித்துக் கொண்டு அம்மதிலை ஏறுவாராகலின் ஏணி என்றார்' என்று குறிப்பிடுகின்றார். இவ்வுரையின்வழி நூலால் மிகவும் திண்ணிய, உறுதியான, நீளமான ஏணி அமைக்க அறிந்திருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

**அட்டிற்றொழில்**

இவ்வுலகில் மக்களுக்கு நிலைபெறுதற்குரியது புகழ், நிலைபெறுதற்குரிய புகழையும், அறத்திற்கு மாறுபடாத செயல்களைச் செய்து பெறுதல் வேண்டும். அவ்வாறு செய்தால் மறுமைக்கும் புண்ணியம் உண்டாகும். ஆகவே அவ்விரண்டினையும் ஒருங்கே பெறுவதற்கு ஒரே எளிய இனிய பயன்பட்ட நல்வழி விருந்தோம்பலாகும். சாதாரண மக்கள் முதல் செல்வந்தர்கள் வரைத் தங்கள் தகுதிக்கேற்றவாறு விருந்தோம்பல் பண்பில் சிறந்து விளங்கினர். அட்டிற்சாலையின் அமைப்பிற்கு இரண்டு காரணங்கள்

கூறப்படுகின்றன. இம்மைக்குப் புகழ் நிலைபெற்ற சொற்கள் வளர வேண்டும் மறுமைக்குப் புண்ணியம் உண்டாவதற்கு ஏற்ற நிலையிலே தான் அட்டில் சாலைகள் நடத்தப் பெற்றிருக்கின்றன.

**“புகழ் நிலைஇய மொழி வளர**
**அறம் நிலைஇய அகல் அட்டில்” (பட்டினப்.42-43)**

என்ற அடிகளுக்கு, நச்சினார்க்கினியர், ‘இன்மைக்குப் புகழ் நிலைபெற்ற சொல் எங்கும் பரவாநிற்க மறுமைக்கு அறம் நிலை பெற்ற அகன்ற அட்டில், இருமையாலும் பெறும் பயனுண்டாகச் சோறிடும் சாலை’ என்று உரை கூறுகின்றார்.

**“பண்ணி அட்டியும் பசுபதம் கொடுத்தும்**
**புண்ணியம்” (பட்டினப்.203-204)**

‘பெரியதாகிய புண்ணியங்களைத் தாங்கள் பண்ணி அவற்றைச் செய்யமாட்டாதார்க்குத் தானம் பண்ணியும் பண்ணிய மட்டியுமென்றதற்குச் சோற்றை ஆக்கிட்டு யென்பாருமுளர். விளைந்த நெல்லையும் பறிக்கும் கமுகையும் உணவாக இதற்கு அரிசியும் கறியுங் கொடுத்தும் என்பாருமுளர்’ என்று உரை விளக்கம் தருகிறார். இம்மையிலும் மறுமையிலும் பயன் உண்டாவதற்குச் சோறிடும் சாலைகள் அமைக்கப்பட்டன என்றும் புண்ணியங்களைப் பெறுவதற்குத் தானம் செய்யப்பட்டது என்றும் கூறியுள்ளார். நெல், கமுகு, அரிசி, கறி முதலியவற்றைத் தானமாகக் கொடுத்துள்ளதனையும் இவரது உரை வழி அறியமுடிகிறது.

**அந்தணர்**

அந்தணர் என்பதற்கு, ‘கல்வியிலும், அறிவிலும், அறத்திலும் நாட்டம் காட்டியவர்களிடம் செம்மையைக் கண்டனர். அவர்களை அந்தணர் என்றனர். அறிவர்களையும் அறவோரையும் குறிக்கும் பொதுப் பெயரே அந்தணர் என்ற சொல்லாகும். எனவே செந்தண்மையுடைய அறவோரே அந்தணர், நீலம்படு உமணன் அந்தணன் மாண்டான் என்பது உறையூர் பாலை எழுத்து ஆதாரம்’ என்று விளக்கம் அளிக்கின்றார்.

**"அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்**
**செந்தண்மை பூண்டொழு கலான்"[95] (குறள்.30)**

என்பர் வள்ளுவர். நச்சினார்க்கினியர் "அந்தணர் என்போர் அந்தத்தை (வேதாந்தத்தை) அணவுவவர்"[96] என்று அந்தணர் என்பதற்குப் பொருள் கூறுகின்றார்.

"அந்தணர் என்பார் மன அமைதி பெற்றவர்களாகவும், தந்நலம் துறந்தவர்களாகவும், பிறர் நலத்துக்கென்றே தாம் வாழ்பவர்களாகவும், மன்னன் முதல் மக்கள் வரையுள்ள எல்லோராலும் போற்றி மதிக்கப்படுபவர்களாகவும் உள்ளவர். அவர்களை அறவோர், அருளாளர், ஆன்றோர், சான்றோர், மறையோர் என்றும் பலபடப் பகன்றுள்ளனர்"[97] என்று வி.சி.சசிவல்லி குறிப்பிடுவர்.

அகவொழுக்கத்தில் தலைவன் கூற்றுக்களைக் கூறும் தொல்காப்பியர், "அந்தணர் திறத்தும்"[98] கூற்று நிகழும் எனக் குறிப்பிடுவர். இதனை இளம்பூரணர், "பார்ப்பார் கண்ணும்"[99] என்றும், நச்சினார்க்கினியர், "வேட்பித்த ஆசிரியனுங் கற்பித்த ஆசிரியனுமாகிய பார்ப்பார் கண்ணும்"[100] என்றும் விளக்குவர். இவ்விரு உரையாசிரியர்களும் பார்ப்பார் என்று பொருள் கொண்டுள்ளனர்.

அந்தணர் என்போர் வேதம் பயின்று, வேதம் கற்பித்தல் மற்றும் ஓதுதல் முதலான செயல்களைச் செய்யக்கூடியவர்கள். இவர்கள் வேள்வி செய்வதை முதன்மையான தொழிலாகக் கருதக்கூடியவர்கள் என்பது தெளிவாகும்.

### அந்தணர் தொழில்கள்

நச்சினார்க்கினியர், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறு தொழில்களும் அந்தணர்க்குரியவை என்று கூறுகின்றார்.

**"இரு மூன்று எய்திய இயல்பினின் வழாஅது"  *(முருகு.177)***

என்பதற்கு நச்சினார்க்கினியர், 'ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல் ஏற்றலென்னும் ஆறாகிய தன்மை பொருந்திய இலக்கணத்தில் வழுவாமல்' என்று பொருள் குறிப்பிடுவர். இந்த ஆறு தொழில்களும் அந்தணர்க்குரியவை என்பதை,

**"ஓதல் வேட்டல் அவைபிறர்ச் செய்தல்**
**ஈதல் ஏற்றல் என்று ஆறுபுரிந் தொழுகும்**
**அறம்புரி அந்தணர் வழிமொழிந்து ஒழுக"  *(பதிற்றுப்.24:6-8)***

என்ற பதிற்றுப்பத்து அடிகள் மெய்ப்பிக்கும். வேதம் ஓதுதல் அந்தணரின் முதன்மைத் தொழில். இத்தொழிலில் அதர்வனவேதம் ஒழிந்த; இருக்கு, யசூர், சாமம் மூன்றினையும் பொருள் தெரியும்படி ஓதுவர்.

**"சிறந்த வேதம் விளங்கப் பாடி"  *(மதுரைக்.468)***

நச்சினார்க்கினியர், 'அதர்வனவேதம் ஒழிந்த முதன்மைப்பட்ட வேதங்களைத் தமக்குப் பொருள் தெரியும்படியோதி' என்று உரை கூறுகின்றார். மேலும், அதர்வனவேதம் தலையாய வேதம் இல்லை என்பதற்குரிய காரணத்தையும் தொல்காப்பியப் பொருளதிகார நூற்பா உரையில் குறிப்பிட்டுள்ளார்.

"இருக்கும், யசுரும், சாமமும் இவை தலையாய ஒத்து. இவை வேள்வி முதலியவற்றை விதித்தலின் இலக்கணமுமாய், வியாகரணத்தாற் காரியப்படுதலின் இலக்கியமுமாயின. அதர்வம் ஆறங்கமும் தருமநூலும் இடையாய ஒத்து அதர்வம் ஒழுக்கங்கூறாது பெரும்பான்மையும் உயிர்கட்கு ஆக்கமேயன்றி கேடுசூழும் மந்திரங்களும் பயிற்றலின் அவற்றோடு கூறப்படாதாயிற்று"[101] என்பர். இதன்வழி வேதம் ஓதுதலில் அந்தணர் இருக்கு, யசூர், சாமம் என்ற மூன்று வேதங்களை மட்டும் ஓதுவர் என்பது தெளிவாகிறது.

**"வேதம் ஓதல் அந்தணர் பாட"  *(மதுரைக்.656)***

என்ற அடிக்கு, 'வேதத்தை முற்ற ஓதுதலையடைய அந்தணர் வேதத்தின் தெய்வங்களைத் துதித்தவற்றைச் சொல்ல' என்று விளக்கம் தருகிறார். அந்தணர் தெய்வங்களைத் துதித்துப் போற்றுகின்ற போது வேதங்களை அரகுறையாகப்

படித்துப் போற்றாமல் முழுமையாக முற்ற கற்ற பின்னர் ஓதுதலைச் செய்வர் என்பது இவ்வுரையின் வழிப் பெறப்படுகின்றது.

**"கேள்வி அந்தணர் அருகடன் இறுத்த**
**வேள்வி தூணத்து அசைஇ"     (பெரும்பாண்.315-316)**

நச்சினார்க்கினியர், 'நூற்கேள்விகளையுடைய அந்தணர் செய்தற்குரிய கடனாகச் செய்து முடித்த யாகசாலையிடத்து நட்ட யூபத்தின் மேலிருந்து' என்று பொருள் கூறுவர். அந்தணர் வேள்வித் தொழில் செய்தமை இதன்வழி அறியமுடிகிறது. அந்தணர்கள் உயிர்களுக்கு ஆக்கம் தரக்கூடிய வேதத்தை, முழுமையாகக் கற்று ஓதியுள்ளனர். வேள்வித் தொழிலும் மேற்கொண்டிருந்தனர் என்பதும் புலனாகிறது.

**பழக்கம்**

பழக்கம் என்ற சொல் 'பழகுதல்' அல்லது பயிற்சியாதல் என்ற பொருளில் தமிழ் இலக்கியங்களில் பழங்காலம் தொட்டு ஆட்சிபெற்று வருகிறது. பழக்கம் என்பது ஒருவர் பழகிய முறைபற்றி வருவது. "இது தனிமனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைக் குறிப்பதாகும். பழக்கம் வளர்ச்சிக்கு இன்றியமையாத கூறாகக் கருதப்படுகிறது. நனவுடன் தொடங்கிய செயல் நாளடைவில் நனவின்றியே நிகழக்கூடியதாக ஆகிவிடும் செயலையே பழக்கம்"[102] என்கிறது கலைக்களஞ்சியம். ஆதிநாராயணன் பழக்கம் என்பதற்கு, "பழக்கம் செயல்களை எளியமுறையில் பிழையின்றி நடைபெறச் செய்வதுடன் முயற்சி, காலம் ஆகியவற்றை மிச்சப்படுத்தித் தருகின்றது. நல்ல பழக்கங்களை இளமையில் குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுக்க வேண்டுமென்ற நோக்கிலே பெற்றோர், ஆசிரியரின் கடமை கல்வி ஆராய்ச்சியாளர்களால் வலியுறுத்தப்படுகின்றது. மேலும் நல்ல பழக்கங்களை அமைத்துக் கொள்ளக் குழந்தைப் பருவமே ஏற்றது"[103] என்று விளக்குகின்றார்.

"பழக்கம் என்பது பயிற்சியின் முதிர்ச்சி எனப் பொருள்படும். பழக்கம் உயர்ந்ததாக இருப்பின் அது தரும் பயன் சிறந்ததாகும். இளமை முதல்

நல்ல ஒழுக்க நெறிகளில் பயிலுகின்ற ஒருவன் காலப்போக்கில் சமுதாயத்தில் நன்மகனாகக் கருதப்படுவான். இளமை முதல் தீய நெறிகளில் பழகும் ஒருவன் பொதுமக்களால் வெறுக்கப்படுவதோடு தானும் கெட்டு அழிவான். எனவே சான்றோர் வகுத்த நல்ல நெறிகளில் பழகுவதே வரவேற்கத்தக்கது''[104] என்பர் பி.சேதுராமன்.

**வழக்கம்**

பழக்கத்தின் முதிர்ச்சி நிலையே வழக்கமாகும். ''பழக்கத்தின் தொடர்ந்த நிலையே வழக்கமாகும். வழக்கம் சமூகம் சார்ந்த ஒன்றாகும். வழக்கம் ஒழுக்கத்தாலும் செயல்களாலும் உருவாவது. இயற்கையும் செயற்கையும் இணையும் கூட்டுறவால் நிலைபெறுவது. ஓர் இனக்குழுவில் உள்ள பலருடைய மனவெழுச்சி, உணர்ச்சி, விருப்பு, வெறுப்பு ஆகியவற்றுடன் இணைந்து நிற்பது வழக்கம் எனக் கருதப்படுகிறது. ஒரு வழக்கம் செல்லக் கூடியதாக இருக்க வேண்டுமாயின் அது பண்டைக்காலம் முதல் இடையீடின்றித் தொடர்ந்து வழக்கில் வந்ததாக இருப்பதுடன் அறிவுக்கு ஒத்ததாயும் தென்பட வேண்டும்''[105] என்று கா.காந்தி வழக்கம் என்பதற்கு விளக்கம் கூறுவர். பாஸ்கல் கில்பர்ட் என்பார், ''சமூகத்தில் அதிகமாகப் பின்பற்றப்படும் பழக்கமான நடவடிக்கையே வழக்கமாகும். வழக்கத்தின் முக்கியப் பண்புகளாக ஒரு நிலையான நடவடிக்கை, வழிமுறை, சமூகப் பண்பு, சரி தவறு என்ற மதிப்புத் தீர்ப்பு ஆகிய மூன்று காரணிகளையும் சுட்டுவர்.''[106]

**பழக்க வழக்கம்**

பழக்க வழக்கங்களைத் தனிமனிதனும் சமுதாயம் என்ற அமைப்பும் இணைந்து உருவாக்குகின்றன. மக்களின் தேவைகளின் அடிப்படையில் பழக்கங்கள் தோன்றுகின்றன. அவை சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்படுகின்ற நிலையில் வழக்கங்களாக உருப்பெறுகின்றன. ''தனிமனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைப் பழக்கம் எனவும் இனக்குழுவிலுள்ள பலருடைய

மனவெழுச்சி உணர்ச்சி ஆகியவற்றுடன் இயைந்து நிற்பது வழக்கம்''[107] எனக் கூறும் பாஸ்கல் கில்பர்ட் அவர்களின் கருத்து ஏற்புடையதாகத் தோன்றுகின்றது. மேலும் இக்கருத்திற்கு வலிமையூட்டும் வகையில், ''தனிமனிதன் ஒருவன் பழகிப்போன முறையில் திரும்பத் திரும்பச் செய்துவரும் ஒரு குறிப்பிட்ட செயலைப் பல மனிதர்கள் ஒன்றாகச் சேர்ந்து செய்கின்ற பொழுது அது வழக்கம் எனப் போற்றப்படுகிறது''[108] என்ற கூற்று அமையக் காண்கின்றோம். மேற்கண்ட கருத்துக்களின் வழி பழக்கம் என்பது தனிமனிதனால் தொடங்கப்பெற்ற செயல் என்றும் வழக்கம் என்பது அச்செயல் தொடர்ந்து சமுதாயத்தால் பின்பற்றப்பட்டு வருவது எனவும் கொள்ளலாம்.

**மரபு**

மரபு என்பது எழுதப்படாத சட்டம். இதனைச் சமூகம், உள ஒருமைப்பாட்டால் உருவாக்குகின்றது. இம்மரபுகள் சமுதாய நலன் கருதி ஏற்பட்டவை. ''மரபு என்பது வழக்கமாகத் தலைமுறையாகப் பின்பற்றப்படுவது எனப் பொருள்படும்''[109] என்பர்.

''பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்ததென்றும் வழக்கம் சமுதாயத்தைச் சார்ந்ததென்றும் மரபு சமுதாயம் விதிக்கும் கட்டுப்பாடு எனவும் கூறலாம். மேலும், 'பழக்கம் என்பது தொடக்க நிலையாகவும் வழக்கம் தொடர் நிலையாகவும் மரபு பண்பாட்டின் முதிர்நிலை எனவும் வகைப்படுத்தலாம். தனிமனிதப் பழக்கங்களே காலப்போக்கில் சமுதாய வழக்கங்களாக உருப்பெற்றுத் தலைமுறை தலைமுறையாக இடையறாது நிலைத்து வாழ்வு பெறும் நிலையில் மரபுகளாக வாழ்வு பெறுகின்றன''[110] என்று விளக்கம் அளிக்கின்றார். மரபு என்பது முன்னோர் சொன்ன வழியில் நின்று நெறி தவறாமல் நடப்பதாகக் கொள்ளலாம்.

**பெரியோரை மதித்தல்**

***''முதுவோர்க்கு ஆனாது***
***முகிழ்த்த கையினை எனவும்''*** ***(சிறுபாண்.230-231)***

என்ற அடிகளுக்கு, ‘அரசன், உபாத்தியாயன், தாய், தந்தை தம்முன் முதலியோர்க்குப் பலகாலும் குவிந்த கையினையுடைய’ என்று பொருள் விளக்குகின்றார். அரசன், உபாத்தியாயன் (ஆசிரியன்), தாய், தந்தை முதலியோர்க்கு எப்பொழுதும் குவிந்த கையுடன் மதிப்புக் கொடுத்து வருகின்ற பழக்கம் நச்சினார்க்கினியர் காலத்தில் இருந்தமை தெளிவாகிறது. இன்றும் வயதில் சிறியவர்கள் சிலர் மூத்தோருக்குக் குவிந்த கையுடன் வணக்கம் சொல்லுகின்ற பழக்கமும் காணப்படுகின்றது.

**கற்பொறி இடுதல்**

தினைப்புனத்தைத் தின்ன வரும் விலங்குகளை விரட்டுதற்குத் தீயினைக் கொளுத்தி வைப்பர். இம்முறையினை நச்சினார்க்கினியர் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

**“ஆறே கேழல் விளை புனம் நிழத்தலின் அஞ்சி**
**புழை தோறும் மாட்டிய இருகல்**
**அரு பொறி உடைய”** ***(மலைபடு.193-195)***

என்ற அடிகளுக்கு நச்சினார்க்கினியர், ‘வழிகள், பன்றி முற்றின தினைப்புனத்தை நொக்குகளையினாலே இதற்கு அஞ்சிச் சில் வழிகடோறும் கொளுத்தி வைத்த பெரிய கற்பொறிகளையுடைய’ என்று விளக்கம் கூறுகின்றார். விலங்குகள் பயிர்களைத் தின்னாமல் இருப்பதற்குத் ‘தீ’ பொருத்தி வைக்கும் பழக்கம் இருந்ததனை இவ்வுரையின் வழி அறியமுடிகிறது. விலங்குகள் உண்டு குறையும் தன்மையினைக் குறிக்க நொக்குகை என்று அவர்கால சொல் வழக்கினையும் குறிப்பிட்டுள்ளார். மேலும், உ.வே.சாமிநாதையர், “நொக்குகை என்பதற்கு உண்டு குறையச் செய்தல் என்றும் கொளுத்தி என்பதற்குப் பொருத்தி என்றும் பொருள் குறிப்பிட்டுள்ளார்.”[111] இன்று நொக்குகை என்ற சொல் வழக்கு இல்லை. கொளுத்தி, பொருத்தி என்ற இரண்டு சொற்களும் வழக்கத்தில் உள்ளன. கற்பொறிகளை இயற்றி விலங்குகளைப் பிடித்தல் பண்டைய நாளில் உண்டென்பதனை,

**"சிறு பொறி மாட்டிய பெருங்கல் அடார்" (நற்.119:3)**

**"பொறியறிந்து மாட்டிய பெருங்கல் அடாரும்" (புறம்.19:56)**

*என்ற சங்க இலக்கியப் பாடல்களின்வழி அறியமுடிகிறது. சங்க இலக்கியத்தில் 'அடார்' என்று கூறப்பட்டுள்ளது. இன்றும் விலங்குகளை விரட்டத் தீயினைக் கொளுத்தி வைக்கும் வழக்கம் ஊரக மக்களிடம் காணப்படுகின்றது.*

**கல்வி**

**"கற்றோர்க்கு தாம் வரம்பு ஆகிய**
**தலைமையர்" (முருகு.133-134)**

*நச்சினார்க்கினியர், 'பலவற்றையும் கற்றோர்க்குத் தாம் எல்லையாகிய தலைமையையுடையர், என்றது கல்வியைக் கரை கண்டார்' என்று உரை விளக்குகின்றார். இவ்வுரையின் வழி கல்வியில் வல்ல சான்றோரைக் குறித்து, 'இவர் கல்வியில் கரை கண்டார்' என்று கூறும் வழக்கு நச்சினார்க்கினியர் காலத்திலும் இருந்திருக்கின்றமையை அறியமுடிகிறது.*

**இஞ்சியைப் பாவை எனல்**

*இஞ்சியைப் 'பாவை' என்று கூறும் வழக்கம் நச்சினார்க்கினியர் காலத்தில் இருந்துள்ளது.*

**"இஞ்சி செய்யா பாவை வளர்ந்து கவின் முற்றி**
**காயம் கொண்டன" (மலைபடு.125-126)**

*இஞ்சி முதல் ஒருவராற் பண்ணப்படாத பாவைகள் வளரப்பட்டு அழகு முதிர்ந்து காழ்ப்பைக் கொண்டன; இஞ்சிக் கிழங்கைப் பாவையென்று கூறும் மரபினை உரையின் வழி குறிப்பிடுகின்றார்.*

**அடி வருடுதல்**

*தூங்குவதற்குக் காலை வருடுகின்ற மரபு நச்சினார்க்கினியர் காலத்தில் காணப்படுகின்றது.*

**"மெல் இயல் மகளிர் நல் அடி வருட" (நெடுநல்.151)**

என்ற அடிக்கு, 'மெத்தென்ற தன்மையினையுடைய சேடியர் துயிலுண்டகுமோ வென்று அடியைத் தடவ' என விளக்கம் தருகின்றார்.

**ஆநிரை**

**"ஏறுஉடை இனம் நிரை வேறு புலம் பரப்பி" (நெடுநல்.4)**

என்ற அடிக்கு நச்சினார்க்கினியர், 'ஏற்றையும் இனங்களையும் பசுக்களையும் மேட்டு நிலமாகிய முல்லை நிலத்தே மேயவிட்டு, எருமையையும் ஆட்டையும் இனமென்றார்' என்று பொருள் கூறுகின்றார். ஆடு, மாடு, எருமை போன்றவற்றை இனம் என்று கூறும் வழக்கம் இருந்தமையை இதன்வழி அறியமுடிகிறது.

**ஆடைக்குக் கஞ்சி இடுதல்**

நூல் புடவை, பருத்தியாடை போன்றவற்றிற்குக் கஞ்சி இடும் வழக்கம் காணப்படுகின்றது.

**"சோறு அமைவு உற்ற நீர் உடை கலிங்கம்" (மதுரைக்.721)**

என்பதற்கு நச்சினார்க்கினியர், 'சோறு தன்னிடத்தே பொருந்துதலுற்ற நீரையுடைய துகில் என்றது கஞ்சியிட்ட துகிலை' என்று உரை விளக்குகின்றார். ஆடைக்குக் கஞ்சியிடுகின்ற வழக்கம் அவர் காலத்தில் இருந்தமைத் தெளிவாகின்றது.

**யாகத்திற்குச் சந்தனம் பூசுதல்**

**"நறு சாந்து நீவிய கேழ் கிளர்அகலத்து பெரியோர்" (மதுரைக்.493)**

இவ்வடிக்கு நச்சினார்க்கினியர், 'நறிய சந்தனத்தைப் பூசிய நிறம் விளங்கும் மார்பினையுடைய பெரியோர். யாகத்திற்குச் சந்தனம் பூசுதல் மரபு' என்று பொருள் கூறுகின்றார். யாகம் செய்கின்றவரின் மார்பில் சந்தனம் பூசுதலும், யாகத்திற்குச் சந்தனம் பூசுதலும் மரபாகக் காணப்படுகின்றது. இன்றும் இம்மரபு வழக்கிலுள்ளது.

### பாக்கு வேகவைத்தல்

பாக்கு வேகவைத்துப் பக்குவப்படுத்தும் முறையினைக் கூறுகின்றார்.

***"தகை செய் தீ சேறு இன்நீர்***
***பசுகாய் நீடு கொடி இலையினர்" (மதுரைக். 400-401)***

என்ற அடிகளுக்கு உரை எழுதுகின்ற போது, 'உடம்பிற்கு அழகைக் கொடுக்கும் இனிய கருங்காலி சீவிக் காய்ச்சின களி கலந்த இனிய நீரினையுடைய பசிப்பாக்கு' என்று கூறுகின்றார். பாக்கு வேகவைத்துப் பக்குவப்படுத்தும் பழக்கம் இருந்தமையை இவ்வுரையின் வழி வெளிப்படுத்துகின்றார்.

***"அங்கருங்காலி சீவி யூறவைத் தமைக்கப்பட்ட***
***செங்களி விராய காயும்" (சீவக. 2473)***

என்ற சீவகசிந்தாமணி அடிகள் பாக்கு ஊறவைத்து வேகவைத்த முறையினைக் குறிப்பிடுகின்றது.

### சுண்ணம் இடித்தல்

சுண்ணம் என்பது நவமணிகளும், பொன்னும், சந்தனமும், கருப்பூரமும், புழுகிலும், பனிநீரிலும் நனைய வைத்து இடிக்கப்படுவதாகும். சுண்ணத்தைப் பலர் சேர்ந்து இடிப்பர்.

***"பலர் தொகுபு இடித்த தாதுஉகு சுண்ணத்தார்"***
***(மதுரைக். 399)***

என்ற அடிக்கு, 'இடிக்க வல்லார் பலரும் திரண்டு இடித்த பூந்தாதுகளைப் போல பரக்குஞ் சுண்ணத்தையுடையாரும். இவற்றுள் தாது என்பதற்கு, நீறுமாம் என்று பொருள் கூறுவர். நவமணிகளும், பொன்னும், சந்தனமும், கருப்பூரம் முதலியனவும் புழுகிலும் பனிநீரிலும் நனைய வைத்திடித்தலின் இடிக்கவல்லார் பலரும் வேண்டிற்று' என்று பொருள் கூறுகின்றார். இவ்வுரையின் வழி நச்சினார்க்கினியர் நவமணி, பொன், சந்தனம், கருப்பூரம் முதலியவற்றைப் புழுகிலும் பனிநீரிலும் நனையவைத்து இடிக்கும் பழக்கம் அவர் காலத்திலும் இருந்தமையைக் குறிப்பிடுகின்றார்.

**கொடி நடுதல்**

கள் விற்கும் இடத்தில் கொடி நடுகின்ற வழக்கம் இருந்தமையைத் தனது உரையின் வழிப் பதிவு செய்துள்ளார்.

> **"கள்ளின் களி நவில் கொடியோடு நல் பல**
> **பல்வேறு குழூஉ கொடி"** ***(மதுரைக்.372-373)***

என்ற அடிகளுக்கு, 'கள்ளினது களிப்பு மிகுதியைச் சாற்றுகின்ற கொடியும் பலவற்றினாலே பலவாய் வேறுபட்ட திரட்சியையுடைய கொடிகளும், நன்பலவென்றார், கல்வி, கொடை, தவம் முதலியவற்றை' என்று பொருள் கூறுகின்றார். கல்வி, கொடை, தவம், கள் விற்குமிடம் முதலிய இடங்களில் கொடி நடுகின்ற வழக்கம் இருந்தமையை இவ்வுரையின் வழி அறியமுடிகிறது. சங்க இலக்கியப் பாடல்கள் கள்விற்கும் இடத்தில் கொடி நடுதலும் உண்டு என்பதை,

> **"கட்கொடி நுடங்கும் ஆவணம்"** ***(பதிற்றுப்.98:10)***
>
> **"நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி மறுகில்"** ***(அகம்.126:10)***
>
> **"நெடுங்கொடி நுடங்கும் நியமமூதூர்**
> **நறவுகொடை நல்லில்"** ***(அகம்.83:8)***

என்ற அடிகள் விளக்குகின்றன. மேலும் கொடைக்குக் கொடி நடுதலை, உ.வே.சாமிநாதையர் குறிப்பிட்டுள்ளார். இக்கொடி தியாகக்கொடி எனப்படும்.

> **"தியாகக் கொடியோடு மேற்பவர் வருகென்று நிற்ப"**
> ***(வீரராஜேந்திர தேவர் மெய்க்கீர்த்தி)***
>
> **"தியாகக் கொடியே தனிவளரச் செய்து"** ***(திருவாரூலா.421)***

இப்பாடல்களின் வழி கொடைக்குக் கொடி நடுகின்ற வழக்கம் இருந்தமைப் புலப்படுகின்றது.

**சொல் வழக்கு**

> **"தொல்லை முரவு வாய்க் குழிசி**
> **முரி அடுப்பு ஏற்றி"** ***(பெரும்பாண்.98-99)***

என்ற அடிகளுக்கு, 'பழைய ஒறுவாய்ப்போன பானையிலே வார்த்த வுலையை முரிந்த அடுப்பிலே வைத்து' என்று உரை கூறுகின்றார். வாய் உடைந்த

மண் பானையை ஒறுவாய்ப் போன பானை என்று கூறுகின்ற வழக்கம் நச்சினார்க்கினியர் காலத்தில் இருந்தமையைக் குறிப்பிடுகின்றார்.

**தந்தையின் உரிமை**

தந்தையின் உரிமையை மகன் தன் தாய் வயிற்றில் இருக்கும் போதே பெற்றுவிடுகின்றான்.

**"தாயத்தின் அடைய ஈயச் செல்லா" (தொல்.பொருள்.25)**

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர், 'தந்தையையுடைய பொருள்களாய் மக்கள் எய்துதற்குரிய பொருள்கள்' என்று உரை கூறுகின்றார்.

**"தாய் வயிற்று இருந்து தாயம் எய்தி பிறந்து" (பொருநர்.132)**

என்ற பொருநராற்றுப்படை அடிக்கு, 'தாயுடைய வயிற்றிலேயிருந்து அரசவுரிமையைப் பெற்றுப் பிறந்து, தான் பிறக்கின்ற காலத்துப் பிறவாதே நல்ல முகூர்த்தம் வருமளவும் தாயுடைய வயிற்றிலேயிருந்து பிறக்கையினாலே அரசவுரிமையைப் பெற்றுப் பிறந்தென்றார்' என்று பொருள் கூறுகின்றார். தாயம் என்பதற்குத் தந்தையின் பொருளை மகன் தன் தாயின் வயிற்றில் இருக்கும்போதே பெற்றுவிடுகின்றான் என்பதை இவரது உரை வழி அறியமுடிகிறது. இன்று தந்தையின் பொருள் மகன், மகள் இருவருக்கும் கொடுக்கும் உரிமை இருக்கின்றது. இது தமிழர் பழக்க வழக்கமாகக் காணப்படுகின்றது. தந்தையின் பொருளை மக்களுக்குக் கொடுக்கும் வழக்கம் இவர் காலத்தில் இருந்தமைப் புலப்படுகின்றது.

**உறவுமுறைப் பெயர்**

தாய், தந்தையரைப் போன்றே மகன், மகள், தமையன், தங்கை முதலிய முறைப் பெயர்களும் வழக்கத்திலிருந்துள்ளன. தோழிமார் தங்களுக்குள் அன்னை என்னும் முறைப்பெயர்களால் அழைத்துக் கொள்ளுதல் உண்டு என்பதை,

**"அன்னை, என்னை என்றலும் உளவே**
**தொல் நெறிமுறைமை சொல்லினும் எழுத்தினும்**
**கொண்டு மரபின என்மனார் புலவர்"[112]**

என்ற அடிகளால் அறியமுடிகிறது. மகளிர் தம் இல்லத்திற்கு வரும் விருந்தினரைத் தத்தம் பிள்ளைகளுக்கு அண்ணன், அம்மான் போன்ற உறவுமுறைகள் சொல்லி உபசரித்ததனைத் தமது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

**"மகமுறை தடுப்ப மனை தொறும் பெறுகுவீர்"**

**(மலைபடு.185)**

என்ற அடிக்கு, 'தத்தம் பிள்ளைகளைக் கொண்டு முறை சொல்லித் தடுக்கையினாலே மனைகடோறும் பெறுகுவீர். அண்ணன், அம்மான் என்றாற் போல்வன முறை' என்று பொருள் கூறுகின்றார். இவற்றுள் 'அம்மான்' என்ற உறவுமுறைப் பெயருக்குத் தொ.பரமசிவன் அவர்கள், "அண்ணன் மனைவி அண்ணியானது போல மாமன் மனைவி மாமி ஆயிருக்க வேண்டும். அம்மையுடன் பிறந்தவனைக் (தாய்மாமன்) குறிக்கும் சொல்லாக 'அம்மான்' வழங்குகிறது. இச்சொல் இன்றும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களிடம் வழங்கி வருகிறது"[113] என்று விளக்கம் அளிக்கிறார். இன்று அம்மான் என்ற சொல் வழக்கு பெரும்பான்மை நாட்டுக்கோட்டைச் செட்டியார்களிடமும் சிறுபான்மை பிற இனத்தாரிடமும் காணப்படுகின்றது.

விருந்தினரை வழியனுப்பும் போது, விருந்தினரின் பின்னே காலின் ஏழடி வந்து வழியனுப்பும் பழக்கம் இருந்தமையைத் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

**"காலின் ஏழடி பின் சென்று" (பொருநர்.166)**

என்ற அடிக்கு, 'தான் காலாலே ஏழடி பின்னே வந்து, ஏழடி வருதல் மரபு; ஏழிசைக்கும் வழிபாடு செய்தானாகக் கருதுதலின்' என்று உரை விளக்கம் தருகின்றார். இதன்வழி விருந்தினரின் பின் ஏழடி செல்லுகின்ற மரபு இவர் காலத்திலும் இருந்தமைப் புலனாகின்றது.

**வளையல் அணியாமை**

பிள்ளைகளைப் பெற்றால் வளையல் அணியும் பழக்கம் இல்லாத நிலையினை நச்சினார்க்கினியர் தமது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

**"புள்கை போகிய புன்றலை மகாரோடு"** ***(மலைபடு.253)***

என்ற அடிக்கு உரை எழுதுகின்ற போது, 'வளைகையினின்றும் போதற்குக் காரணமான சிவந்த தலையினையுடைய பிள்ளைகளோடே, பிள்ளையைப் பெற்றால் வளையிடாராகலின் வளை போதற்குப் பிள்ளைகள் காரணமாயின' என்று விளக்கம் அளிக்கின்றார். இதன்வழி நச்சினார்க்கினியர் காலத்தில் பிள்ளையைப் பெற்றெடுக்கும் போதும் பெற்ற பின்னரும் பெண்கள் வளையல் அணியாத பழக்கத்தினை அறிமுடிகின்றது.

ஒரு பெண் தாய்மை அடைந்த ஏழாவது அல்லது ஒன்பதாவது மாதத்தில் வளைகாப்பு (சீமந்தம்) என்ற சடங்கினை நடத்துவர். பெண்ணுக்குக் கைகளில் வளையல் அணிவதனால் அவளின் மனநிலை மகிழ்ச்சியாக இருக்கும். குழந்தைக்கும் இவ்வளையல் ஓசையினால் கேட்கும் திறன் அதிகரிக்கும். வளையல் கையினின்றும் போதற்குரிய அறிவியல் காரணம், பிள்ளைப்பேற்றின் போது தாயிக்கு அவ்வளையல் கைகளில் குத்தி இரத்தக் காயம் ஏற்பட்டுவிடும் என்பதற்காக வளையல்களைக் கலட்டியிருக்கக்கூடும். குழந்தை பிறந்தபின் குழந்தையின் மீது குத்தாமல் இருக்க வேண்டும் என்பதற்காக வளையல் போடாத நிலை ஏற்பட்டிருக்கக்கூடும்.

**பிறந்த நாள் விழா**

பண்டைத் தமிழகத்தில் மன்னர்களே தமது பிறந்தநாளைக் கொண்டாடியதாக இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. இதனைத் தொல்காப்பியம் சுட்டியுள்ளது. தொல்காப்பியர் பாடாண்திணைத் துறைகளுள் ஒன்றாக,

**"சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப்**
**பிறந்த நாள்வயின் பெருமங் கலமும்"** **(தொல்.பொருள்.*88:7-8*)**

எனப் பிறந்தநாளைப் பெருமங்கலம் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார். மன்னர்கள் அக்காலத்தில் தம் பிறந்தநாளைச் சிறப்பாகக் கொண்டாடினர் என்பதை,

**"பேரிசை நன்னன் பெறும் பெயர் நன்னாள்"** ***(மதுரைக்.618)***

என்ற அடிக்கு நச்சினார்க்கினியர், 'பெரிய புகழையுடைய நன்னன் கொண்டாடுகின்ற பிறந்த நாளிடத்து, அவன் பெயரை அந்நாள் பெறுதலின், பெயரைப் பெற்ற நன்னாள் என்றார்' என உரை விளக்கம் தருகின்றார். இவற்றிலிருந்து பிறந்த நாளை மன்னன் கொண்டாடுகின்ற வழக்கம் புலனாகின்றது.

பிறந்தநாளை வெள்ளணி நாளெனக் குறிக்கும் வழக்குச் சிலப்பதிகாரத்தில் பயின்று வருகின்றது. பிறந்தநாளை வெள்ளணி நாளெனக் குறிப்பதற்குரிய காரணத்தை நச்சினார்க்கினியர், "மங்கல வண்ணமாகிய வெள்ளணியும் அணிந்து எவ்வுயிர்க்கும் அருளே நிகழ்தலின் அதனை வெள்ளணி என்க"[114] என்று குறித்துள்ளார். பிறந்தநாள் அன்று வெண்ணிற ஆடையை உடுத்தி எல்லாவுயிர்க்கும் நன்மை செய்வதனால் அந்நாள் வெள்ளணி நாள் என்று அழைத்திருக்கக்கூடும். மணிமேகலையில் சாத்தனார் மன்னனின் பிறந்தநாளை

**"புவிகா வலன்றன் புண்ணிய நன்னாட்" (மணிமே.28:9)**

புண்ணிய நன்னாள் என்று குறிப்பிடுகின்றார்.

**திருமணம்**

இருமணம் இணையும் மணவினையைத் திருமணம் என்கிறோம். திருமணம் என்பதற்குக் க.காந்தி "திருமணம் என்பது ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் இணைந்து வாழ்வதற்காகச் சமுதாயத்தால் ஏற்படுத்தப்பட்ட வினை முறையாகும்"[115] என்பர்.

தமிழர் சமுதாயத்தில் பெரும்பகுதியினர் திருமணத்தைக் கலியாணம் என்ற சொல்லாலேயே குறிப்பிடுகின்றனர் இது வடமொழியின் தாக்கமாகும். நச்சினார்க்கினியரும் கலியாணம் என்ற சொல்லாலே குறிப்பிட்டுள்ளார்.

**"நுமர் நேர் இறை முன்கை பற்றி தர**
**நாடு அறி நல் மணம் அயர்கம்" (குறிஞ்சிப்.231-232)**

என்ற அடிகளுக்கு, 'நம்முடைய சுற்றத்தார் நமது நேரிய இறையினையுடைய முன்கையைப் பிடித்து எமக்குத்தர நாட்டிலுள்ளாரெல்லா மறியும் நன்றாகிய

கலியாணத்தினைப் பின்பு நிகழ்த்துவோம்' என்று உரை கூறுகின்றார். நச்சினார்க்கினியர் காலத்திலும் திருமணம் என்பது கலியாணம் என்ற சொல்லால் வழங்கியிருக்கக்கூடும் என்பதை இவ்வுரையின் வழி அறியமுடிகிறது.

**நம்பிக்கைகள்: சொல்லும் பொருளும்**

நம்பிக்கையினைச் சுட்டும் ஆங்கிலச் சொல் Belief. இடைக்காலத்தில் பயிற்சி பெற்றதனை ஆங்கில அகராதிகள் (Dictionaries) தெரிவிக்கின்றன. தமிழில் இச்சொல் நம்பிக்கையினைக் குறிக்கின்றது. தொல்காப்பியத்தில்,

***"நம்பு மேவு நகையா கும்மே"     (தொல்.சொல்.329)***

என்றுள்ளது. இவற்றுள் 'நம்பு' என்ற சொல் 'விருப்பம்' என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது. நற்றிணையில்,

***"சேரியம் பெண்டிர் சிறுசொல் நம்பிச்***
***சுடுவான் போல நோக்கும்"     (நற்.175:7-8)***

நம்பு என்ற சொல் நம்பிக்கை என்ற பொருளில் கூறப்பட்டுள்ளது. மேலும்,

***"நாடல் சான்றோர் நம்புதல் பழியெனிற்***
***பாடில கலழுங் கண்ணொடு சாஅய்ச்***
***சாதலு மினிதே காதலந் தோழி"     (நற்.327:1-3)***

இவற்றுள் 'நம்புதல் என்ற சொல் நம்பிக்கை என்ற பொருளிலே ஆளப்பட்டுள்ளது. தொடக்கத்தில் நம்பு என்ற சொல் விருப்பம் என்ற பொருளிலும் பின்னர் நம்பிக்கை என்ற பொருளிலும் ஆளப்பட்டுள்ளது. காலப்போக்கில் நம்பிக்கையை மட்டும் குறிப்பதற்குப் பயன்பட்டுள்ளது.

**நம்பிக்கை**

பழைமையான எல்லா இனங்களிடத்தும் பல நம்பிக்கைகள் நிலவி வருகின்றன. அவற்றில் பலவும் இன்று வரையில் ஆற்றலோடு வாழ்ந்து வருவது வியப்புக்குரியதாகும். நன்மையின்பால் உள்ள ஆர்வமும் தீமையின்பால் உள்ள அச்சமும் பெரும்பான்மையான நம்பிக்கைக்கு அடிப்படை எனலாம்.

"நம்பிக்கை என்பது ஓர் உணர்ச்சி ஆகும். இது எண்ணத்தின் இயக்கத்தோடு கலந்து வரப்பெற்று நிலைத்த போது அது ஒரு மனநிலை என்று சொல்லப்படுகிறது. அந்த மனத்தில் தொடர்ந்து நீடித்து உரமடைந்த போது அது உள்மனதில் (Sub-Conciousmind) உதவியைப் பெறுகிறது. இந்த நிலையில் அதற்கு மகத்தான சக்தி உண்டாகிறது"[116] என்று நம்பிக்கை என்பதற்குத் தண்டபாணி அவர்கள் விளக்கம் அளிக்கின்றார்.

"காரணம் சுட்டப்படத்தக்கனவற்றை நம்பிக்கைகள் என்றும், காரணம் கற்பிக்க முடியாதவற்றை மூடநம்பிக்கைகள் என்றும் வழங்குகின்றனர். இவற்றுள்ளும் சிலர் சிலவற்றைப் பொருளுடையதாகக் கூறினும், பிறர் ஏற்றுக் கொள்வது இல்லை. எனவே காரணம் சுட்டப்பட்டனவும் மூடநம்பிக்கையாக வழங்கப்படல் உண்டு. இந்நிலையில் நம்பிக்கை என்பது இன்னதென்று வரையறைப்படுத்தவோ, எடுத்தியம்புவதோ இயலாத ஒன்றாகிறது. எனவே மாந்தர் மனத்தின் ஒருவித உணர்வே நம்பிக்கை எனலாம்"[117] என்பார் கு.பகவதி.

இரா.சாரங்கபாணி "நம்பிக்கை என்பது தெளிந்த எண்ணத்தின் திடமான உறுதிப்பாடு"[118] என்பார்.

க.காந்தி "மனிதனின் நல உணர்வும் சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன. நம்பிக்கைகள் பெரும்பாலும் மனிதனின் அச்ச உணர்வின் அடிப்படையாகக் கொண்டு தோன்றியதாகவே காட்சி தருகின்றன. நம்பிக்கைகள் உள்ளத்தின் உருவாக்கமாகவே அமைகின்றன"[119] என்று நம்பிக்கை என்பதற்கு விளக்கம் கூறுகின்றார். இவற்றின்வழி நம்பிக்கை என்பது மனித மனத்தின் ஒருவித உணர்வின் வெளிப்பாடாகக் கருதமுடிகிறது.

**பிறப்பு**

அந்தணர்கள் இரண்டு பிறவிகள் மீது நம்பிக்கை கொண்டுள்ளதனைத் தனது உரையில் குறிப்பிடுகின்றார்.

***"இருபிறப்பாளர்" (முருகு.182)***

என்ற அடிக்கு, ‘உபநயனத்துக்கு முன்பு ஒரு பிறப்பும் பின்பு ஒரு பிறப்புமாகிய இருபிறப்பினையுடைய அந்தணர்’ என்று நச்சினார்க்கினியர் பொருள் கூறுகின்றார். இவற்றின் வழி அந்தணர்களுக்கு இரண்டு பிறவிகள் உண்டு என்பதையும் இரண்டு பிறவிகள் மீது நம்பிக்கைக் கொண்டுள்ளதையும் அறியமுடிகிறது.

பார்ப்பார், இருபிறப்பாளர் என்பதற்கு, “பார்ப்பார் இருபிறப்பாளர்; பூணுல் அணியும் உபநயன காலத்தில் பரத்தைப் பற்றிய அறிவு அவருக்கு உறுத்தப்பெற்ற பிறகு அவர்கள் இரண்டாம் பிறவி பெறுவதாகக் கருத்து”[120] என்று ந.சுப்பிரமணியன் கூறும் கருத்தும் இதனை மெய்ப்பிக்கும்.

**புதல்வரை இடுக்கணின்றிப் பெற தெய்வத்தை வணங்குதல்**

முதற்சூல் கொண்ட கற்பிணிப் பெண்கள் குழந்தையை நல்லமுறையில் பெற்றெடுக்க வேண்டும் என்று நாள்தோறும் தெய்வத்தினை வணங்குவர்,

***“கடு சூல் மகளிர் பேணி” (மதுரைக்.609)***

என்ற அடிக்கு நச்சினார்க்கினியர், ‘முதற்சூல் கொண்ட மகளிர் இவ்வாறே இடுக்கணின்றிப் புதல்வரைப் பயத்தல் வேண்டும் என்று தெய்வத்தைப் பரவிக் குறைதீர்த்தபின்’ என்று உரை விளக்கம் தருகின்றார். இவற்றின்வழி தெய்வத்தை வணங்கினால் குழந்தையைத் துன்பமின்றிப் பெற்றெடுக்க முடியும் என்று நம்புகின்றனர்.

**சூளுரை**

‘இன்னது செய்யேனாயின் இன்னது உறுவேனாக’ எனக் கூறுவது வஞ்சினம். இது பொய்யாத உறுதிமொழி என்று கூறுவது சூளுரை. வஞ்சினம் மற்றும் சூளுரை பொய்த்தால் தெய்வம் ஒறுக்கும் (தண்டிக்கும்) என்பது மக்களின் நம்பிக்கை.

***“அறம்புனை யாகத் தேற்றி பிறங்குமலை***
***மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது***
***ஏமுறு வஞ்சினம் வாய்மையின் தேற்றி***
***ஆந்தீந் தெண்ணீர்க் குடித்தலின்” (குறிஞ்சிப்.208-211)***

என்ற அடிகளுக்கு, ‘இல்லறம் தங்களைக் கறையேற்றுவதாகத் தெளிவித்து, பெரிய மலையில் மிக உயர்ந்த இடத்தேயுறைகின்ற முருகனையும் வாழ்த்தி வணங்கி அவன் முன்னே இவள் மயக்கமுறுதற்குக் காரணமான வஞ்சினத்தை உண்மையால் தெளிவித்து, வஞ்சினம் பிரியின் அறனல்லது செய்தவனாவே னென்னும் மொழி முன்தேற்றுதலின், ஏமுறு வஞ்சினம் என்றார். அம்மலையில் அழகிய தெள்ளிய அருவிநீரை அவன் குடிக்கையினாலே இவன் நெஞ்சு சூளுற வென்று’ என்று தலைவன் வஞ்சினத்தைச் சூளுரையுடன் சேர்த்தே கூறியதாக நச்சினார்க்கினயர் உரை விளக்கம் தருகிறார்.

**நீராடுதல்**

நீராடலைத் தீர்த்தமாடுதல் எனவும் குறிப்பர். தீமை செய்தோர் தங்களது பாவச் செயலுக்குக் கழுவாயாகக் கடலிலோ அல்லது ஆற்றுநீரிலோ குளித்துத் தம் பாவங்களைப் போக்கிக் கொண்டனர். தைந்நீராடலின் பயனைக் கலித்தொகை மற்றும் பரிபாடலும்; மார்கழி நீராடலின் பயனைத் திருப்பாவை மற்றும் திருவெம்பாவையும் எடுத்துரைக்கின்றன. நீராடினால் தீவினை போகும் என்ற பழந்தமிழரின் நம்பிக்கையை நச்சினார்க்கினியர் தனது உரையில் பதிவு செய்துள்ளார்.

**“தீது நீங்கக் கடலாடியும்”** **(பட்டினப்.99)**

‘தீவினை போகக் கடலாடியும்’ எனும் உரையின்வழி விளக்குகின்றார்.

**“கழுநீர் கொண்ட அந்தி**
**யாடு துவன்று விழவின் எழுநாள் அந்தி”** **(மதுரைக்.427-428)**

என்ற அடிகளுக்கு நச்சினார்க்கினியர், ‘தீவினையைக் கழுவுதற்குக் காரணமான தீர்த்த நீரைத் தன்னிடத்தே கொண்ட அந்திக்காலம். வேறோரிடத்தில்லாத வெற்றி நெருங்குந் திருநாளினைத் தன்னிடத்தேயுடைய ஏழாநாளந்தியில் தீர்த்த மாடுதல் மரபு’ என்று உரை கூறுவதன் வழி அறியமுடிகிறது.

மணிமேகலையில் சுதமதி தன் தீவினைப் போக்கக் கன்னியாகுமரியில் கடலாடியமையினை,

**“பார்ப்பிணி சாலி காப்புக்கடை கழிந்து**
**கொண்டோற் பிழைத்த தண்ட மஞ்சித்**
**தென்றிசைக் குமரி யாடிய வருவோள்”**[121]

*எனச் சாத்தனார் குறிப்பிடுகின்றார். மேற்சுட்டிய சான்றுகளின் வழி தீவினைப் போகக் கடலாடியதனை அறியமுடிகிறது. இன்று புனித நாட்களிலும் தீமை பயப்பதாகக் கருதும் நாட்களிலும் காசி, இராமேஸ்வரம் போன்ற இடங்களுக்குச் சென்று நீராடுகின்ற வழக்கம் காணப்படுகின்றது. மேலும், கணவனைப் பிரிந்து வாழும் பெண்கள் நீராடினால் கணவனுடன் சேர்ந்து வாழலாம் என்பர்.*

**“இரு காமத்து இணை ஏரி” *(பட்டினப்.39)***

*‘இன்மையிலும் மறுமையிலும் உண்டாகிய காமவின்பத்தினைக் கொடுத்தற்கரிய இணைந்த ஏரியும் அது’*

**“சோமகுண்டம் சூரிய குண்டம், துறைமூழ்கிக்**
**காமவேள் கோட்டம் தொழுதார் கணவரொடுந்**
**தாம் இன்புறுவர் உலகத்துத் தையலார்**
**போகஞ் செய் பூமியினும் போய்ப் பிறப்பர்” *(சிலம்பு.9:59-62)***

*என்ற சிலப்பதிகார அடிகளையும் கூறி உரை விளக்குகின்றார். இவற்றின் வழி நீராடினால் இம்மையிலும் மறுமையிலும் கணவன், மனைவி இருவரும் பிரியாது இன்பமாக இருப்பர் என்ற நம்பிக்கை இருந்தமையை அறியமுடிகிறது.*

**கதவிற்கு நெய் பூசுதல்**

**“நெய்பட கரிந்த திண்போர் கதவின்” *(மதுரைக்.354)***

*என்ற அடிக்கு, ‘நெய் பலகாலுமிடுதலாற் கருகின திண்ணிய செருவினையுடைய கதவினையும், வாயிலிற் தெய்வமுறையுமாகலின் அதற்கு அணியும் நெய்யுமாம்’ என்று விளக்கம் அளிக்கின்றார். மேலும்,*

**“ஐயவி அப்பிய நெய் அணி நெடு நிலை” *(நெடுநல்.86)***

*நச்சினார்க்கினியர், ‘வெண்சிறுகடுகு அப்பி வைத்த நெய்யணிந்த நெடிய நிலையினையுடைய அதிற் தெய்வத்திற்கு வெண்சிறுகடுகு நெய்யுமணிந்து’ என்று உரை விளக்குகின்றார். வீட்டின் வாயிற் கதவினில் தெய்வம் உறையும்*

*என்று நம்பிக்கைக் கொண்டு கதவிற்கு நெய்யும் வெண்சிறுகடுகும் அணிந்துள்ளனர் என்பதை இவ்வுரையின் வழி அறியமுடிகின்றது.*

**நேர்த்திக் கடன்**

*மனிதன் தனக்குத் துன்பம் நேருகின்ற போதும் மற்றும் வாழ்வில் நன்மை ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இவைனை வழிபடுவான். அவ்வாறு வழிபடுகின்ற போது எனது குறைகளைத் தீர்த்தால் என்னால் முடிந்த பொருள்களை உனக்குக் காணிக்கையாகச் செலுத்துகின்றேன் என்று வேண்டிக் கொள்ளும் பழக்கம் இருந்தமையை நச்சினார்க்கினியர் உரையில் குறிப்பிட்டுள்ளார்.*

***"கை தொழூஉப் பரவிப் பழிச்சினிர் கழிமின்" (மலைபடு.360)***

*என்ற அடிக்கு, 'நீடும் ஆண்டுறையும் தெய்வங்களைக் கையாலே தொழுது எம் குறை முடித்தால் நுமக்கு இவை தருமென்று பரவுக்கடன் வாழ்த்திப் போவீர்' என்று உரை விளக்குகிறார். இன்று இவ்வழக்கம் மக்களிடம் அதிகம் நிலவி வருகின்றது.*

**தெய்வங்கள்**

*தலைவன் பிரிவால் வருந்திய தலைவியின் மேனி மெலிவும் பசப்பும் கண்டு இவற்றிற்குக் காரணம் தெய்வமே எனப் பிறழ உணர்ந்து, அவளுக்காக வெறியாட்டு எடுப்பர். இவ்வெறியாட்டினால் தலைவியின் துன்பம் நீங்கும் எனும் நம்பிக்கை கொண்டிருந்தனர். இவை கட்டுக்கேட்டடல், கழங்கு பார்த்தல் எனப் பெயர் பெறும்.*

***"நீயும்" (குறிஞ்சிப்.8)***

***"அலவுற்று" (குறிஞ்சிப்.7)***

***"அகல் உள் ஆங்கண் அறியுநர் வினாய்" (குறிஞ்சிப்.4)***

*என்ற அடிகளுக்கு, 'நீளும் அலம் வந்து அகன்ற இடத்தையுடைய ஊரிடத்துக் கட்டினாலும் கழங்கினாலும் எண்ணியவாரை வினாவி அவர் தெய்வத்தான் வந்த வருத்தமென்றலின்' என்று உரை விளக்குகின்றார். இவ்வுரையின் வழி நச்சினார்க்கினியர் காலத்தில் கட்டினாலும் கழங்கினாலும் குறி சொல்லும் முறை இருந்தமையை அறியமுடிகிறது.*

கழங்குக்குறி பற்றி நற்றிணைக்கு உரை வரைந்துள்ள பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், “கழங்கு கழற்சிவித்துப் பலவற்றை முருகன்முன் போட்டு வேலன் தன் தலையில் ஆடைசூடிக் கையிற் பல தலைகளிற் சிறுபறைகளைக் கட்டிய கோலொன்றேந்தி அக்கோலாற் கழங்கு வித்துஞ்சலை வாரியெடுப்புழிக் குறிப்புக் காணுகின்ற ஒருவகைக் குறி”[122] என்று விளக்கம் அளிக்கின்றார். ஔவை துரைசாமிப்பிள்ளை, “தன் தலையில் ஆடை கட்டிய சிறிய பைகள் நாலவிட்ட பல கிளைகளை உடைய வளைந்த கொம்பொன்றில் கழற்காய்களை முருகன் முன் வைத்து அள்ளியெடுக்குங்கால் கண்டு கூறும் ஒருவகைக் குறி”[123] என்று ஐங்குறுநூற்றுக்கு வரைந்த உரையில் கழங்குக் குறி என்பதற்கு விளக்கம் தருகிறார். இன்றும் மக்களிடம் குறி கேட்கும் வழக்கம் காணப்படுகின்றது.

**தொகுப்புரை**

- சமூகம் என்பது மக்கள் தொகுதி. அவர்களின் நோக்கம், தேவை (Means), பழக்க வழக்கம், நம்பிக்கை, நாகரிகம், பண்பாடு, கலாச்சாரம் மற்றும் மனித உறவுகள் (Human Relationship), கல்வி, மதம், சாதி, மொழி அனைத்தும் உள் அடங்கிய நிலையமாகும்.
- மன்னர்கள் அக்காலத்தில் தம் பிறந்தநாளைச் சிறப்பாகக் கொண்டாடி யுள்ளனர். அரசர்கள் படைத்தலைவர்க்கு ஏனாதி பட்டம் வழங்கி சிறப்புச் செய்துள்ளனர். அரசனின் அவையில் சான்றோகள் கூடித் தருக்கம் நிகழ்த்தியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.
- நச்சினார்க்கினியர், ஏரகம், (மலைநாட்டகத்தொரு திருப்பதி), ஆவினன்குடி, வேலூர், மலைநாடு, தண்பணைநாடு, காட்டுகாடு, சாலியூர் போன்ற முற்காலத்து ஊர்ப்பெயர்களைத் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார்.
- மகளிர் தலையில் அணியக்கூடிய தலைக்கோலம் என்பதற்குச் சீதேவி என்னும் தலைக்கோலம் என்று பொருள் கூறியுள்ளார். இத்தலைக்கோலம் சங்கினால் சுறாவின் வாய் போன்று செய்யப்பட்டுள்ளது.

- காதில் அணியக்கூடிய அணிகலன்கள் கல்லினாலும் பொன்னாலும் செய்யப்பட்டிருந்தன. இவை மகரக்குழை, தாளுருவி என்ற பெயரால் அழைக்கப்பட்டுள்ளன.
- சுட்டு வெளுக்கப்பட்ட சங்கினால் செய்த வளையல்களை அணிந்திருந்தனர்.
- நச்சினார்க்கினியர் காலத்தில் புடவையைக் குறிக்க, சீரை, வடங்கள் என்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இருபாலரின் உடைகளும் புடைவை என்ற சொல்லால் இவர் காலத்தில் வழங்கப்பட்டுள்ளது.
- ஆடையின் தூய்மை, மற்றும் அதன் சிறப்புக் கருதி ஆடையினை மடிப்புடைவை, தூமடி என்ற சொற்களால் குறிப்பிட்டுள்ளதை அவரது உரை வழி அறியமுடிகின்றது.
- மகளிரின் மேலாடையைக் (மார்பு) கச்சு என்று குறிப்பிடுகின்றார். பட்டுப்புடவையின் முந்தானையில் சிறுசிறு முடிச்சுக்கள் இருந்தமையையும் தனது உரையின் வழி விளக்குகின்றார்.
- பண்ணியாரம் இனிப்புச் சேர்த்து பல்வேறு வடிவுடன் செய்யப்பட்டுள்ளது. கும்மாயத்தை நச்சினார்க்கினியர் காலத்தில் பருப்புச் சோறு என்று கூறியுள்ளனர்.
- அந்தணராகிய நச்சினார்க்கினியர் சாதாரண மக்கள் உண்ணும் உணவான உப்புக்கண்டம், கருவாடு, நண்டுடன் பீர்க்கங்காய் கலந்த குழம்பு முதலியவற்றையும் தனது உரையின் வழி விளக்குகின்றார்.
- நெல்லினால் அவரது காலத்தில் கள் சமைத்ததனைக் கூறுகின்றார்.
- விருந்தினரை அண்ணன், அம்மான் போன்ற உறவுமுறைப் பெயர்கள் இட்டு விருந்து உபசரித்ததனை அறியமுடிகிறது.
- இக்காலத்தில் வீட்டினைப் பல அறைகளாகப் பிரித்துக் கட்டுவதைப் போன்று, வீடுகள், மண்டபம், கூடம், தாய்க்கட்டு, அடுக்களை எனப்பல அறைகளைக் கொண்டதாக நச்சினார்க்கினியர் காலத்தில் கட்டியுள்ளனர்.

- உழவுத் தொழில் உலகத்துத் தொழில்களில் மேன்மையான தொழில் என்றும், ஒருசால், இருசால் என்று உழுதல் மரபு என்றும் குறிப்பிடுகின்றார்.
- இவர் காலத்தில் கத்தரிக்காய் வழுதுணங்காய் எனவும் திராட்சைப்பழம் முந்திரிகைப்பழம் எனவும் அழைக்கப்பட்டுள்ளன.
- வண்டியின் தோற்றத்தினையும் அதன் ஒவ்வொரு உறுப்பினையும் பொருள் அறிந்து விளக்கியுள்ளார். இதேபோன்று தேரின் ஒவ்வொரு உறுப்புக்களைப் பற்றியும் தனது உரையின் வழி விளக்குகின்றார்.
- பொன், வெள்ளி போன்ற உலோகத்தால், வட்டில், கலன் முதலிய பொருள்கள் செய்தமையைக் குறிப்பிடுகின்றார்.
- நவமணி, பொன், சந்தனம், கருப்பூரம் முதலியவற்றைப் புழுகிலும் பனிநீரிலும் நனையவைத்து இடித்துச் சண்ணம் தயாரிக்கும் பழக்கம் இருந்துள்ளது.
- பாக்கு வேகவைத்துப் பக்குவப்படுத்தும் தொழில் இருந்தமையைக் கூறுகின்றார்.
- சோறிடும் சாலைகள் (அன்னச்சாலைகள்) இவர் காலத்தில் இருந்தமைப் புலனாகிறது.
- அந்தணர் என்பவர் அந்தத்தை அணவுவார். அதாவது வேதாந்தத்தையே நோக்குபவர் என்று குறிப்பிட்டுள்ளார். இவர்களின் தொழில் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறினையும் குறிப்பிட்டுள்ளார்.
- பழக்கம் என்பது தனிமனிதனால் தொடங்கப்பெற்ற செயல் என்றும் வழக்கம் என்பது அச்செயல் தொடர்ந்து சமுதாயத்தால் பின்பற்றப்பட்டு வருவது எனவும் கொள்ளலாம். மரபு என்பது முன்னோர் சொன்ன வழியில் இன்று நெறிதவறாமல் நடப்பதாகக் கொள்ளலாம்.

- அரசன், உபாத்தியாயன், தாய், தந்தை முதலியோருக்குக் குவிந்த கையுடன் மரியாதை கொடுப்பதைப் பற்றிக் கூறியுள்ளார்.
- கல்வியில் வல்ல சான்றோரைக் கல்வியில் கரை கண்டார் என்று கூறும் வழக்கு நச்சினார்க்கினியர் காலத்தில் இருந்துள்ளது.
- இஞ்சியைப் பாவை என்று கூறும் மரபு இருந்துள்ளது.
- யாகத்திற்குச் சந்தனம் பூசுகின்ற மரபினை அறியமுடிகிறது.
- கல்வி, கொடை, தவம், கள்ளுக்கடை முதலிய இடங்களில் கொடி நடும் பழக்கம் இருந்திருக்கின்றது.
- தந்தையின் சொத்தில் மக்களுக்கும் கொடுக்கும் வழக்கம் இவர் காலத்தில் இருந்தமைப் புலனாகின்றது.
- பிள்ளையைப் பெற்றால் பெண்கள் கைகளில் வளையல் அணியாத நிலை இவர் காலத்தில் இருந்துள்ளது.
- நச்சினார்க்கினியர் காலத்தில் திருமணம் 'கலியாணம்' என்ற சொல்லால் வழங்கப்பெற்றுள்ளது.
- நம்பிக்கை என்பதை மனித மனத்தின் ஒருவித உணர்வின் வெளிப்பாடாகக் கருத முடிகிறது.
- அந்தணர்கள் இரண்டு பிறவிகள் மீது நம்பிக்கை கொண்டுள்ளதை அறியமுடிகிறது.
- முதற்சூல் கொண்ட பெண்கள் குழந்தையை இடுக்கனின்றிப்பெற தெய்வத்தை வணங்கியுள்ளனர்.
- நச்சினார்க்கினியர் காலத்தில் கட்டினாலும் கழங்கினாலும் குறி சொல்லும் முறை இருந்தமை அவரின் உரை வழிப் புலனாகின்றது.
- நீராடினால் தீவினைபோகும் என்று நம்பியுள்ளனர். கதவினில் தெய்வம் உறையும் என்று நம்பிக்கைக் கொண்டு நெய்யும் வெண்சிறுகடுகும் அணிந்துள்ளனர்.

**சான்றெண் விளக்கம்**

1. ச.வே.சுப்பிரமணியன் (உ.ஆ.), பத்துப்பாட்டு, ப.14
2. மேலது, ப.14
3. மேலது, ப.14
4. முனைவர் பாக்கியமேரி, வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.84
5. மேலது, ப.85
6. முனைவர் வ.ஜெயா, சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும், ப.79
7. சி.எஸ்.எஸ்.சோமசுந்தரம், சமூகச் சிற்பிகள், ப.9
8. இரா.குருநாதன், குறிஞ்சி காட்டு சமுதாயம், ப.112
9. ர.இராசகோபால், புதியபார்வைகள், ப.20
10. மேலது, ப.19
11. மேலது, ப.20
12. மேலது, ப.19
13. வ.ஜெயா, சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும், ப.79
14. மேலது, ப.79-80
15. மேலது, ப.79
16. மேலது, ப.79
17. கார்த்தியேசு சிவத்தம்பி, தமிழ்ச் சமூகமும் பண்பாட்டின் மீள் கண்டு பிடிப்பும், ப.30
18. செபமாலைராஜா, சமுதாயப் பகுப்பாய்வு, ப.13
19. மேலது, ப.23
20. க.ப.அறவாணன், இலக்கியச் சமூகவியல், ப.30
21. மோ.ஜான்ஜெபராஜ், திருக்குறள் விவிலியத்தில் அறமதிப்புகள் ஓர் ஒப்பாய்வு, ப.272
22. கா.இந்திரசித்து, இரா.இளவரசன், (தொ.ஆ.), சூரியகாந்தன் படைப்பிலக்கியத் திறனாய்வுகள், ப.12

23. முகிலை.இராசபாண்டியன், பாரதி உரைநடையில் சமுதாயம், ப.15

24. வாழ்வியற் களஞ்சியம், ப.30

25. ர.இராசகோபால், புதிய பார்வைகள், ப.20

26. இராம.குருநாதன், குறிஞ்சி காட்டும் சமுதாயம், பக்.112-113

27. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.68

28. மேலது, ப.68

29. தொல்.பொருள்.புறத்.நூ.30:1-2

30. க.வெள்ளைவாரணன் (1983), தொல்காப்பியம் புறத்திணையியல் உரைவளம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், ப.336

31. மா.இராசமாணிக்கனார் (1970), பத்துப்பாட்டு ஆராய்ச்சி, சென்னை பல்கலைக்கழகம், ப.450

32. ச.குருசாமி, நச்சினார்க்கினியர் உரைநெறி, ப.260

33. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), தொல்.பொருள்.அகத்.நூ.30

34. ச.குருசாமி, நச்சினார்க்கினியர் உரைநெறி, ப.261

35. மேலது, ப.261

36. தொல்.பொருள்.புறத்.நூ.17:17

37. இளம்பூரணர் (உ.ஆ.), தொ.பொருள். ப.221

38. அ.ஆறுமுகம் (1994), சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு, ப.237

39. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு, ப.384

40. பொ.வே.சோமசுந்தரணார், (உ.ஆ), பத்துப்பாட்டு, ப.230

41. கு.பகவதி, தமிழர் ஆடைகள், ப.2

42. மேலது, ப.20

43. மேலது, ப.21

44. மேலது, ப.21

45. மேலது, ப.21

46. மேலது, ப.31

47. மேலது, ப.32

48. மேலது, ப.67

49. மேலது, ப.45

50. மேலது, பக்.45-46

51. மேலது, ப.46

52. மேலது, ப.53

53. மேலது, ப.52

54. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.78

55. கு.பகவதி, தமிழர் ஆடைகள், ப.39

56. மேலது, ப.33

57. மேலது, ப.46

58. அ.கா.பெருமாள், உணவுப்பண்பாடு, ப.3

59. மேலது, ப.3

60. சே.நமசிவாயம், தமிழர் உணவு, ப.1

61. பக்தவத்சலபாரதி (தொ.ஆ.), தமிழர் உணவு, ப.272

62. சே.நமசிவாயம், தமிழர் உணவு, ப.1

63. மேலது, ப.104

64. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு, உ.வே.சாமிநாதையர் பதிப்பு, ப.230

65. மேலது, ப.247

66. சே.நமசிவாயம், தமிழர் உணவு, ப.137

67. மேலது, ப.52

68. மேலது, பக்.57-58

69. இரா.சாரங்கபாணி, சங்கத் தமிழ் வளம், ப.155

70. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்.பொருள். ப.250

71. தொ.பரமசிவன், பண்பாட்டு அசைவுகள், ப.45

72. வி.சி.சசிவல்லி, பண்டைத்தமிழர் தொழில்கள், ப.36

73. மேலது, பக்.36-37

74. மேலது, ப.37

75. மேலது, பக்.40-41

76. மறைமலை அடிகளார், வேளாளர் நாகரிகம், ப.3

77. இல.செ.கந்தசாமி, தமிழர் வேளாண்மை மரபுகள் (ஆய்வேடு), ப.28

78. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.41

79. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.368

80. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.47

81. இரா.இளங்குமரன் (உ.ஆ.), புறநானூறு, ப.131

82. பரிமேலழகர் (உ.ஆ.), திருக்குறள், ப.314

83. மேலது, ப.315

84. மேலது, ப.316

85. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு, உ.வே.சாமிநாதையர் (ப.ஆ.), ப.487

86. களைக்களஞ்சியம், தொகுதி-4, ப.215

87. தேவநேயப்பாவாணர், பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.53

88. அ.அப்துல்மஜீத், ஆய்வுக்கொத்து, ப.140

89. மு.இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி, ப.152

90. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.82

91. மேலது, ப.82

92. செந்தமிழ் அகராதி, ப.320

93. நர்மதா தமிழ் அகராதி, ப.280

94. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.96

95. பரிமேலழகர் (உ.ஆ.), திருக்குறள், ப.32

96. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு, ப.47

97. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.165

98. தொல்.பொருள்.கற்.நூ.5:15

99. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்.பொருள்.ப.257

100. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), தொல்.பொருள்.பக்.576-577

101. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு, உ.வே.சாமிநாதையர் பதிப்பு, ப.390

102. கலைக்களஞ்சியம், தொகுதி-7, பக்.29-30

103. எஸ்.பி.ஆதிநாராயணன், மனித உள்ளம், ப.171

104. பி.சேதுராமன், ஆற்றுப்படை இலக்கியத்தில் தமிழர் வாழ்வியல், ப.143

105. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.13

106. பாஸ்கல் கில்பர்ட், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.54

107. மேலது, ப.234

108. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.14

109. மேலது, ப.15

110. மேலது, பக்.15-16

111. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு, உ.வே.சாமிநாதையர் பதிப்பு, ப.626

112. தொல்.பொருள்.நூ.50

113. தொ.பரமசிவன், பண்பாட்டு அசைவுகள், ப.45

114. தொல்.பொருள்.நச்சினார்க்கினியர் (உ.ஆ.), ப.285

115. வி.சி.சசிவல்லி, தமிழர் திருமணம், ப.3

116. அ.ஜெகதீசன், சங்க இலக்கிய மதிப்பீடுகள், ப.53

117. கு.பகவதி, தமிழர் ஆடைகள், ப.175

118. இரா.சாரங்கபாணி, சங்கத் தமிழ்வளம், ப.168

119. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.361

120. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.356

121. புலியூர் கேசிகன் (உ.ஆ.), மணிமேகலை, பா.எண்.13:5-7

122. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், (உ.ஆ.), நற்றிணை, ப.65

123. ஔவை துரைசாமிப்பிள்ளை, (உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.585

**முன்னுரை**

தமிழ் ஆய்வுலகில் இலக்கிய ஆராய்ச்சியும் மொழியாராச்சியும் இன்று விரைவாக வளர்ந்து வருகின்றன. பல நூற்றாண்டுகளுக்கு முன்பே இவ்விரு துறைகளிலும் நுழைந்து செயற்கரிய செயல்கள் பலவற்றைச் செய்தவர்கள் உரையாசிரியர்கள். நூலாசிரியர்கள் எழுதிய மூல நூல்கள் காலம் பல செல்லினும் மொழிநிலை மாறினும் மக்களிடையே நின்று நிலவத் துணை செய்தவர்கள் உரையாசிரியர்கள். இவ்வாறு உரை எழுதிய உரையாசிரியர்களுள் மிகவும் குறிப்பிடத்தக்கவராக விளங்குபவர் நச்சினார்க்கினியர். இவரின் பத்துப்பாட்டு உரைகளில் காணலாகும் விளக்கம் கூறுதல், கொண்டு கூட்டிப் பொருள் கூறுதல், நூலாசிரியரைப் போற்றுதல், பிறர் உரை கூறுதலும் மறுத்தலும், மேற்கோள் காட்டுதல், பாடவேறுபாடு சுட்டல், பல்கலை அறிவு, உரைவேறுபாடு சுட்டல், பிற உரையாசிரியரிடமிருந்து வேறுபடும் தன்மைகள் போன்றவற்றை விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

**விளக்கம் கூறுதல்**

நச்சினார்க்கினியர் விளக்கம் கூறுவதில் வல்லவர். பத்துப்பாட்டிற்கு மூன்று நிலைகளில் விளக்கம் கூறுகின்றார். பத்துப்பாட்டின் தலைப்பிற்கு விளக்கம், உவமைகளுக்கு விளக்கம், அரிய சொற்கள் மற்றும் தொடர்களுக்கு விளக்கம் கூறுதல் ஆகிய முறைகளில் உரை விளக்கம் அமைகின்றது.

**தலைப்பிற்கு விளக்கம் கூறல்**

பத்துப்பாட்டில் முதலாவதாக இடம்பெற்றுள்ள திருமுருகாற்றுப்படைக்கு உரையின் இறுதியில் விளக்கம் கூறுகின்றார். “முருகாற்றுப்படையென்றதற்கு வீடுபெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடு பெற்றானொருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்ததென்று பொருள் கூறுக”[1] என்று விளக்கம் தருகின்றார்.

*பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப் படை மூன்றிற்கும் தொல்காப்பியச் சூத்திரத்தினை இதற்கு விதி என்று கூறுகின்றார்.*

**"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியு**
**மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்**
**சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்"[2] *(தொல்.புறத்.108)***

*என்பது இதற்கு விதி என்று உரையின் இறுதியில் குறிப்பிடுகின்றார். தொல்காப்பியர் குறிப்பிடுகின்ற விளக்கத்தினை நச்சினார்க்கினியரும் கூறுகின்றார். இவற்றின்வழிச் சான்றோரை மதிக்கின்ற வழக்கம் இருந்தமைப் புலப்படுகின்றது.*

*முல்லைப்பாட்டிற்கு; இப்பாட்டிற்கு முல்லையென்று பெயர் கூறினார்; முல்லை சான்ற கற்புப் பொருந்தியதனால் இல்லறம் நிகழ்த்துதற்குப் பிரிந்து வருந்துணையும் ஆற்றியிருவென்று கணவன் கூறிய சொல்லைப் பிழையாமல் ஆற்றியிருந்து இல்லறம் நிகழ்த்திய இயற்கை முல்லையாமென்று கருதி இருத்தலென்னும் பொருள்படர முல்லையென்று இச்செய்யுட்கு நட்பூதனார் பெயர் கூறினமையிற் கணவன் வருந்துணையும் ஆற்றியிருந்தாளாகப் பொருள் கூறலே அவர் கருத்தாயிற்று. "தானே சேறல்" (தொல்.அகத்.27) என்று பொருள் விளக்குகின்றார்."[3] மேலும், "தொல்காப்பியனார் கருத்திற்கேற்ப நம்பூதனார் செய்யுள் செய்தாரென்றுணர்க. இவ்வாறன்றி ஏனையோர் கூறும் பொருள்கள் இலக்கணத்தோடு பொருந்தாமையுணர்க"[4] என்று உரையின் முடிவில் குறிப்பிடுகின்றார். நூலாசிரியரின் உள்ளக் கருத்தினைப் புலப்படுத்துகின்றார். தொல்காப்பியரின் இலக்கண விதிகளைப் பின்பற்றி உரை எழுதியுள்ளார் என்பதையும் அறியமுடிகிறது.*

*மதுரைக்காஞ்சி என்பதற்கு, "இப்பாட்டிற்கு மாங்குடி மருதனார் மதுரைக்காஞ்சியென்று துறைப்பெயரானன்றித் திணைப்பெயராற் பெயர்*

கூறினார். இத்திணைப் பெயர் பன்னிருபடல முதலிய திணைப்பெயர்ப் பொருளே இப்பாட்டிற்குப் பொருளாகக் கோடலின். வஞ்சி மேற்செல்லலானும், காஞ்சி எஞ்சாதெதிர் சென்றூன்றலானும், ''வஞ்சியுங் காஞ்சியுந் தம்முன் மாறே'' எனப் பன்னிருபடலத்திற்கூறிய திணைப்பெயர். இப்பாட்டிற்குப் பொருளன்மையுணர்க. அவர் முதுமொழிக்காஞ்சி முதலியவற்றைப் பொதுவியலென்று ஒரு படலமாக்கிக் கூறலின் அவை திணைப் பெயராகாமை யுணர்க.''[5]

இனி, மதுரைக்காஞ்சியென்றதற்கு ''மதுரையிடத்து அரசற்குக்கூறிய காஞ்சியென விரிக்க. இஃது உருபும் பொருளும் உடன்றொக்கது ''காஞ்சி தானே பெருந்திணைப் புறனே'' (தொல்.புறத்.22) என்பதனாற் காஞ்சி பெருந்திணைக்குப் புறனாயிற்று. அது, ''பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற்றானு, நில்லா வுலகும்புல்லிய நெறித்தே'' (தொல்.புறத்.23) என்பதாம். இதன்பொருள்: அறம் பொருள் இன்பமென்னும் பொருட்டகுதியானும் அவற்று உட்பகுதியாகிய உயிரும் யாக்கையும் செல்வமும் இளமையும் முதலியவற்றானும், நிலைபேறில்லாத உலகியற்கையைப் பொருந்திய நன்னெறியினை உடைத்து அக்காஞ்சி யென்றவாறு. எனவே, வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமை சான்றோரறையுங் குறிப்பினது காஞ்சித்திணையென்பது பொருளாயிற்று. இச்செய்யுட் புலவர் இப்பொருளே கோடலின், யாம் இப்பொருளே தர உரை கூறுகின்றோம்''[6] என்று விளக்கம் அளிக்கின்றார். மூல நூலாசிரியரின் கருத்தினைச் செவ்வனே அறிந்து அதற்கேற்ப விளக்கம் கூறுகின்ற முறை நச்சினார்க்கினியரிடம் இருந்தமையை நன்கு அறியமுடிகிறது.

நச்சினார்க்கினியர் நெடுநல்வாடை என்பதற்கு ''இப்பாட்டிற்கு நெடுநல்வாடையென்று பெயர் கூறினார். இப்பெயர் நெடிதாகிய நல்ல வாடையென விரித்தலிற் பண்புத் தொகையாயிற்று. வாடையென, வாடைக் காற்றிற்றோன்றின கூதிர்ப்பாசறையை யுணர்த்தலிற் பிறந்தவழிக் கூறலென்னும் (தொல்.வேற்றுமயங்கு, 31) ஆகுபெயராய் நின்றது. இப்பாட்டினுள்,

'கூதிர்நின் றன்றாற் போதே' (72) எனவும், 'கூதிர்ப்பானாள்' (12) எனவுங் கூறுகின்றாராதலின், இது 'வாகை தானே பாலையது புறனே' (தொல்.புறத்.18) எனப் பாலைக்குப் புறனாகக் கூறிய வாகைத் திணையாய் அதனுள், 'கூதிர் வேனி லென்றிரு பாசறைக், காதலினொன்றிக் கண்ணிய மரபினும்' (தொல்.புறத்.21) எனக்கூறிய கூதிர்ப் பாசறையேயாயிற்று. தலைவனைப் பிரிந்திருந்து வருந்துந் தலைவிக்கு ஒரு பொழுது ஓரூழி போல நெடிதாகிய வாடையாய்ப் பாலையாகிய உரிப்பொருளுணர்த்திற்று. அகத்தொடுங்கிப் போகம் நுகர்வார்க்குச் சிறந்த காலமாயினும் அரசன் போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறானாய் அப்போகத்தில் மனமற்று வேற்றுப் புலத்துப் போந்திருக்கின்ற இருப்பாகலின், அவற்கு நல்லதாகிய வாடையாயிற்று. எனவே காமத்திடத்து வெற்றியெய்தலின், வாகைத்திணையாயிற்று; இப்பாட்டு, சுட்டி ஒருவர் பெயர் கொள்ளாமையின் (தொல்.அகத்.54) அகப்பொருளாமேனும், 'வேம்புதலை யாத்த நோன்காழெஃகம்' (176) என அடையாளப்பூக் கூறினமையின் அகமாகாதாயிற்று"[7] என்று விளக்கம் கூறுகின்றார். ஒரு தலைப்பினைப் பல்வேறு கோணங்களில் சிந்தித்துப்பார்த்து பொருள் கூறலாம் என்பதற்கு நச்சினார்க்கினியரின் இவ்வுரையினைச் சான்றாகக் கூறலாம். நச்சினார்க்கினியரின் நுன் அறிவுத்திறனும் இவற்றின்வழி வெளிப்படுகின்றது.

குறிஞ்சிப்பாட்டிற்கு விளக்கம் கூறுகின்ற போது, "இதற்குக் குறிஞ்சியென்று பெயர் கூறினார். இயற்கைப் புணர்ச்சியும் பின்னர் நிகழும் புணர்ச்சிகளுக்கு நிமித்தங்களும் கூறுதலின்; அன்றியும் முதலானும் கருவானும் குறிஞ்சிக்குரியனவே கூறுதலானும் அப்பெயர் கூறினார். 'அறத்தொடு நிற்குங் காலத்தன்றி, அறத்தியல் மரபிலள் தோழி என்ப' (தொல்.பொருளியல்.12) என்பதனால், தோழி அறத்தொடு நிற்குங் காலம் வந்து செவிலிக்கு அறத்தொடு நின்றவழி அதற்கிலக்கணங்கூறிய, 'எளித்தல் ஏத்தல் வேட்கையுரைத்தல், கூறுதல், உசாஅதல், ஏதீடு, தலைப்பாடு, உண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ, அவ்வெழுவகையது என்மனார் புலவர்' (தொல்.பொருளியல்.13) என்னும் சூத்திரத்து ஏழனுள் கூறுதலுசாதலொழிந்த ஆறுங்கூறி அறத்தொடு

நிற்கின்றாளென்றுணர்க"[8] என்று குறிப்பிடுகின்றார். மேலும், "இதனால் தோழி தலைப்பாடு கூறினாள்", "இத்துணையும் ஏத்தல் கூறினாள்", "இதனால் ஏதீடு கூறினாள்", "இத்துணையும் எளித்தல் கூறினாள்", "இதனால் ஏதீடும் வேட்கையுரைத்தலும் கூறினாள்", "உண்மை செப்புங் கிளவி கூறினாள்", "இதனால் வேட்கையுரைத்தல் கூறினாள்" என்று ஆறனையும் குறித்திருப்பது பாராட்டத்தக்கதாகும். இதன்மூலம் "எந்த நூலையும் எழுத்தெண்ணிப் படிப்பவர் நச்சினார்க்கினியர் என்பதனை நன்கு உணரலாம்"[9] என்று இரா.மோகன் நக்கினார்க்கினியரின் உரை விளக்கத்தினைப் புகழ்ந்து கூறுகின்றார்.

பட்டினப்பாலை என்பதனைப் பின்வருமாறு விளக்குகின்றார். "இது பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத்திணையாகலின், இதற்குப் பட்டினப்பாலையென்று பெயர் கூறினார். பாலையாவது பிரிதலும் பிரிதனிமித்தமும் கூறுவது. இப்பாட்டு, வேற்றுநாட்டகல்வயின் விழுமத்துத் தலைவன் செலவழுங்கிக் கூறியது: (தொல்.கற்பு.5) இது, முதலும் கருவும் கூறாது உரிப்பொருளே சிறப்பக் கூறியது"[10] என்று விளக்குவர்.

மலைபடுகடாம் என்பதற்கு நச்சினார்க்கினியர்,

**"மலைபடு கடாஅ மாதிரத் தியம்ப"   (மலைபடு.348)**

என்ற அடிக்கு, "மலையாகிய யானைக்கு உண்டாகின்றவொலி திசைகளெல்லா மொலிப்ப, கடாம், ஆகுபெயராய் அதனாற் பிறந்த ஓசையையுணர்த்திற்று. மலைக்கு யானையை உவமித்து அதன்கட்பிறந்த ஓசையைக்கடாமெனச் சிறப்பித்தவதனால், இப்பாட்டிற்று மலைபடுகடாமென்று பெயர் கூறினார்"[11] என்று சிறப்பானதொரு விளக்கத்தினை அளிக்கின்றார்.

**உவமை விளக்கம்**

பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள உவமைகளுக்கு நச்சினார்க்கினியர் புதிய விளக்கம் தருகின்றார். இவரது உரை விளக்கம் இல்லையெனில் சில உவமைகளின் பொருள் புலப்படாமல் இருந்திருக்கக்கூடும்.

**"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு**

**பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு**

**ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி"** ***(முருகு.1-3)***

என்ற திருமுருகாற்றுப்படைக்குச் சூரியன் உதயமாகுங் காட்சியினை நச்சினார்க்கினியர் இறைவனின் ஒளிக்கு உவமையாகக் கூறுவர். "ஞாயிறு இருளைக் கெடுக்குமாறு போலத் தன்னை மனத்தால் நோக்குவார்க்கு கடலிற் பசுமையும் ஞாயிற்றின் செம்மையும் போல மயிலிற் பசுமையும் திருமேனிச் செம்மையுந் தோன்றலின் வண்ணவுவமமும் கொள்ளக் கிடந்தமைக் காண்க"[12] என்று நச்சினார்க்கினியர் பொருள் புலப்படத்தக்க வகையில் விளக்கம் அளிக்கின்றார்.

**"அரசு அவை இருந்த தோற்றம் போல"** ***(பொருந்.55)***

என்ற அடியினை

**"இன்மை தீர வந்தனென்"** ***(பொருநர்.129)***

என்ற அடியோடு இணைத்து மூவேந்தர்கள் அரியணையில் இருந்த காட்சியினைப் பொருநரின் இசையின் பயனிற்கு உவமையாகக் குறிப்பிடுகின்றார். "இனி அரசவையில் இருந்த தோற்றம்போல வலிவும் மெலிவும் சமனுமாகப் பாடுதலைப் பற்றியவென்று பாட்டின் மேலேற்றிப் பொருள் கூறின், குலமும் செல்வமும் வீரமும் முதலியவற்றால் தம்மில் ஒத்தாரை உவமித்தலின், அவர்க்கும் வலிவும் மெலிவும் சமனுமென்னும் குணங்கள் எய்துமாதலின், அங்ஙனம் கூறல் பொருந்தாமையுணர்க; அன்றியும் பயனே ஈண்டு உவமை என்றுணர்க" என்றும், "இனிப்பாட்டு நிருத்த கீதவாச்சியத்தை யுடைமையின் அரசரோடு உவமித்தென்பாரு முளர்"[13] என்று மூவேந்தர்கள் அரியணையில் இருந்த தோற்றத்தினை இசையின் பயனிற்கு உவமையாகக் குறிப்பிடுவதால் இவருக்கு இசையின் மேல் உள்ள ஈடுபாட்டினை அறியமுடிகிறது.

**"சேய் வரல் கரை கொல் கான்யாறு**

**செல்புனல் உழந்த நறு பொழில்"** ***(சிறுபாண்.3-4)***

என்ற அடிகளுக்கு இரண்டு மலைகளில் இருந்து விழும் நீரினை விறலியின் மார்பினில் கிடந்தசையும் முத்துவடத்திற்கு உவமையாகக் கூறுகின்றார். "இரண்டு மலையினின்றும் வீழ்ந்து ஆற்றிடைக் குறையைச் சூழ வந்து பின்னர்க் கூடுதலின், முத்துவடம் உவமையாயிற்று; இது மெய்யுவமம். பெருக்காற் கோடுகள் வருந்துதலின், உழந்தவென்றார். இதனாற்பயன் ஆற்றிடைக்குறையில் நின்றமரம் இளவேனிற் காலத்து மிகவும் பூத்ததாயிற்று"[14] என்று குறிப்பிடுகின்றார்.

**"மகமுறை தடுப்ப"** ***(சிறுபாண்.192)***

என்ற அடியை,

**"உழவர் தங்கையாகிய"** ***(சிறுபாண்.190)***

என்ற அடியோடு இணைத்து மேலும் **"மகடூஉ"** (சிறுபாண்.192) என்ற சொல்லினையும் இணைத்து, தன் பிள்ளைகளைப் போல் விருந்தினரை உபசரிக்க வேண்டும் என்கிறார். "இனி, பிள்ளைகளை உபசரிக்குமாறு உபசரித்து விளக்கவென்றுமாம்"[15] என்று விருந்தோம்பல் முறையினை உவமை மூலம் விளக்குகின்றார்.

**"பல்மீன் நடுவண் பால்மதி போல**
**இன் நகை ஆயமொடு இருந்தோன் குறுகி"**

***(சிறுபாண்.219-220)***

என்ற அடிகளுக்குக் "கலைகள் நிறைந்திருந்தமைப் பற்றித் தலைவற்கு ஈண்டு மதி உவமையாயிற்று, பல விண்மீன்களின் நடுவில் அமைந்த மதி போல பல கலைகள் நிறைந்த அவையின் நடுவில் இருந்தான் அரசன்"[16] என்று உவமையின் வழி விளக்குகின்றார்.

**"யாறு அறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்**
**உடை நெடு தகர் ஈந்து"** ***(பெரும்பாண்.86-87)***

என்ற அடிகளுக்கு ஆற்றுமணலை அறுக்கப்பட்ட ஈந்திற்கு உவமையாகக் கூறியுள்ளார். "மடலினடி தன்னிடத்தே நிற்க மேல் அறுப்புண்ட ஈந்து அறல் போன்றிருக்குமாறு உணர்க"[17] என்று குறிப்பிடுகின்றார்.

***“புகர் இணர் வேங்கை வீ கண்டன்ன***

***அவரை வால் புழுக்கு அட்டி” (பெரும்பாண்.194-95)***

என்ற அடிகளுக்கு “வேங்கைப்பூ வரிகளையுடைய விதைக்கு உவமம்”[18] என்று விளக்குகின்றார். அவரையின் விதையினை வேங்கைப்பூவிற்கு உவமையாகக் கூறுகின்றார்.

***“வேண்டினர்க்கு” (பெரும்.444)***

***“கொடை கடன் இறுத்த கூம்பா உள்ளத்து***

***துரும்பு இல் சுற்றமொடு இருந்தோன் குறுகி” (பெரும்பாண்.446-47)***

என்ற பெரும்பாண்நாற்றுப்படை அடிகளுக்கு, ஞாயிற்றினை அரசனுக்கு உவமையாகக் கூறுகின்றார். “ஞாயிறுபோல இருளைக்கடிந்து முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும் வேண்டுவன முடித்துக் கொடுத்தலின் அவனை உவமித்தார். கடலைச் சுற்றத்திரட்சிக்கு உவமையாக்கலுமொன்று”[19] என்றும் நயம்படச் சுட்டுகின்றார்.

***“உலகம் வளைஇ” (முல்லைப்.1)***

என்ற அடியை

***“எழுந்த கொடு செலவு எழிலி” (முல்லைப்.5)***

என்ற அடியோடு இணைத்து, திருமால் பேருருவம் கொண்டு உலகினை வளைத்தமையை முகிலிற்கு உவமையாக விளக்குகின்றார். “மால் நீர் செல நிமிர்ந்தாற் போல மேகமும் நீர்செல நிமிர்ந்த தென்றார்”[20] என்பர்.

***“மூவுலகும் ஈரடியான் முறை நிரம்பா வகைமுடியத்***
***தாவிய சேவடி” (சிலப்.17)***

***“திரண்டமரர் தொழுதேத்துந் திருமால் நின் செங்கமல***
***இரண்டடியான் மூவுலகும் இருள்தீர நடந்தனையே” (சிலப்.34)***

என்ற இளங்கோவடிகள் கூற்றும் நினைவு கூறத்தக்கது.

***“அரசு இருந்து பனிக்கும் பாசறை” (முல்லைப்.79)***

மருந்தினைப் பாசறைக்கு உவமையாகக் கூறியுள்ளார். “பனிக்கும் பாசறை நோய் தீருமருந்து போனின்றது”[21] என்பர்.

சரக்கு ஏற்றுதற்குரிய மரக்கலம் நின்ற காட்சியினை மழை முற்றிய மலைக்கு உவமையாக விளக்குகின்றார்.

**“மழை முற்றிய மலை புரைய**

**துறை முற்றிய துளங்கு இருக்கை” (மதுரைக்.84-85)**

என்ற அடிகளுக்கு, “துறை ஆகுபெயர் சரக்குப் பறித்தற்குக் கடலில் நின்ற மரக்கலங்கள் அக்கடல் சூழ நின்றதற்கு மழை முற்றியமலை உவமமாயிற்று”[22] என்று விளக்கம் அளிக்கின்றார்.

**“யாறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருவில்” (மதுரைக்.359)**

“இருகரையும் யாறும் போன்றன, இரண்டு பக்கத்தின் மனைகளும் தெருக்களும்”[23] மனைகள் மற்றும் தெருக்களின் அமைப்பினை இருகரையும் யாறும் இருந்த அமைப்பிற்கு உவமையாக விளக்கம் கூறுகின்றார்.

**“நோன் குறடு அன்ன மார்பின்” (மதுரைக்.742)**

வேலும் அம்பும் பட்டு உருவி நின்ற மார்பிற்குக் குறடினை உவமையாகக் குறிப்பிடுகின்றார். “வேலும் அம்பும் பட்டு எங்கும் உருவி நிற்றலிற் குறடும் அதிற் தைத்த ஆர்களும் போன்ற மார்புகள், குறடுகள் பட்டை மரமுமாம்”[24] என்பர்.

கண்ணபிரானை ஆசிரியருக்கு உவமையாகக் கூறுகின்றார்.

**“நிலம் தரு திருவின் நெடியோன் போல” (மதுரைக்.763)**

என்ற மதுரைக்காஞ்சி அடிக்கு, “கண்ணன் எப்பொருளும் தானாயிருக்கின்றபடியைக் காட்டி ஸ்ரீ கீதையருளிச் செய்து எல்லாரையும் போதித்தாற்போல எல்லாரையும் போதிக்கவல்லராகிய ஆசிரியரென்று”[25] உவமை விளக்கம் அளிக்கின்றார்.

**“பல் மீன் நடுவண் திங்கள் போலவும்**

**பூத்த சுற்றமொடு பொலிந்து இனிது விளங்கி” (மதுரைக்.769-770)**

என்பதற்கு, “மண்டிமாக்கள் தண்டத்தலைவர் முதலிய சுற்றத்தோர்க்கு நடுவே ஞாயிறு போல விளங்கி, பல்கலைக் கற்றோரிடத்தே மதி போல விளங்கி

யென்"[26] என்று உரையின் வழி உவமை விளக்கம் தருகின்றார். கலைகள் நிறைந்தமை பற்றி மதியை உவமை கூறுதல் மரபென்பது இவரது உரையின் வழி அறியமுடிகிறது.

**"தாறு அடு களிற்றின் வீடு பெற ஓச்சி"   (குறிஞ்சிப்.150)**

என்பதற்கு, "தனக்குக் காவலாகிய பெருமையினையும் உரனையும் கைகடந்து வேட்கை மீதூர்ந்து நிற்றலால் தாறடுகளிற்றை உவமங் கூறினார். மதக்களிற்றிற்கு அங்ஙனம் ஓச்சி நிற்றல் இயல்பு"[27] என்று உரை விளக்கம் தருகின்றார். இதன்வழி வேட்கை மிகுதிக்குத் தாறடுகளிற்றினை உவமையாகக் குறிப்பிட்டுள்ளதனை அறியமுடிகிறது.

**"கயிறு ஊர் பாணியின் தளரும் சாரல்"   (குறிஞ்சிப்.194)**

என்ற குறிஞ்சிப்பாட்டு அடிக்கு, "இதற்கு உள்ளுறையுவமங்கொள்ளுமாறு: மிளகு உக்கபாறை அந்நிலத்து மாக்களுறைகின்ற ஊராகவும், நெடுஞ்சுனை தலைவன் குடியாகவும், மாம்பழத்தாலும் பலாப்பழத்தாலும் விளைந்ததேறல் தந்தையாலும் தாயாலுமுளனாகிய தலைவனாகவும், பிரசம் இவரைக் கூட்டின பால்வரை தெய்வமாகவும், அதனையுண்டமயில் உயர்ந்த தலைவனைத் தன் குலத்திற்கு ஒத்தானாகக் கருதி நுகர்ந்த தலைவியாகவும் அத்தேறலிற் பிறந்த களிப்புக் களவொழுக்கத்தாற் பிறந்த பேரின்பமாகவும் மயில் ஆடவாற்றாத தன்மை வருந்திக் குறைந்த தன்மையாகவும் உள்ளுறை உவமங்கொள்க"[28] என்று உரை குறிப்பிடுகின்றார்.

**"நல் பல வம்பு விரி களத்தின் கவின் பெற**
**பொலிந்த குன்று கெழு நாடன்"   (குறிஞ்சிப்.197-198)**

என்ற அடிகளுக்கு, "உயர்ந்த நிலத்தே நின்று மணக்கின்ற காந்தள் வரையா மகளிராற் கீழ் நிலத்தே பரந்து, அவ்விடத்தைக் கச்சு விரித்தாற்போல அழகு பெறுத்தும் என்றதனால், நம்மில் உயர்ச்சியையுடைய தலைவன் நமது நல் வினையால் தனது பெருமைதானுமொழிந்து இவ்விடத்தே வந்துகூடி நமக்கும் உயர்ச்சியுளதாக்கி நம்மை அழகு பெறுத்துகின்றானென்று உள்ளுறையுவம மெய்திற்று"[29] என்று விளக்குகின்றார்.

மழை மாசு நீங்கிய வானத்தே தோன்றும் மகமீன் பொய்கைக் கரைக்கும் அவற்றினிடைப்பட்ட முழுத்திங்கள் பொய்கைக்கும் உவமையாகக் குறிப்பிடுகின்றார்.

**"மழை நீங்கிய மா விசும்பல்**
**மதிசேர்ந்த மகம் வெள் மீன்**
**உருகெழு திறல் உயர் கோட்டத்து" (பட்டினப்.34-36)**

என்பதற்குப் பல்பொருள் உவமத்தின் வழி உரை விளக்குகின்றார். "மதியும் மீனும் பொய்கைக்கும் கரைக்கும் உவமிக்கும் பொருள். இனி உயர் கோட்டத்தை, எல்லாரும் மதியைச் சேர்ந்த மகவெண் மீனைப் பார்க்கைக்கு இடமாகிய கோயிலாக்கிக் கோயிலும் பொய்கையுமென எண்ணுதலுமாம். இனிப் பொய்கைக் கரையிலே கோயிலாக்கி கோயிலும் பொய்கையும் மதிசேர்ந்த மகவெண்மீன் போன்ற தென்றுமாம்"[30] என்பர்.

**"மா மலை அணைந்த கொண்மூ போலவும்**
**தாய்முலை தழூவிய குழவி போலவும்" (பட்டினப்.95-96)**

என்பதற்கு நச்சினார்க்கினியர் கடலோடு காவிரி கலத்தமையை உவமையாகக் கொண்டு "கரிய உயர்ந்த திரைமீதே சிவந்த யாற்றுநீர் பரந்ததற்கு உவமை" என்று விளக்குகின்றார். இவற்றுள் 'கொண்மூ' என்பதற்குச் "செக்கர் மேகம்" என்று வலிந்து பொருள் கூறியுள்ளார். மேலும், 'தாய் முலை தழுவிய சேய்' என்பதற்கு "இது ஒன்றுபடுதற்கு உவமை"[31] என்று உவமை வழி குறிப்பிடுகின்றார்.

மேகங்கள் கடலில் முகந்த நீரை மலையில் பொழிந்தன. மலையில் பொழிந்த நீர் கடலில் புகுந்து பரந்தன போன்று கடல்நீர் வழி வந்த பொருள்களை நிலத்தில் ஏற்றினர். நிலத்திலிருந்து வந்த பொருள்களைக் கடலில் மரக்கலங்களில் ஏற்றினர்.

**"வான் முகந்த நீர் மலை பொழியவும்**
**மலை பொழிந்த நீர் கடல் பரப்பவும்" (பட்டினப்.126-27)**

என்ற பட்டினப்பாலை அடிகளுக்கு, ‘‘நீர் கடற்பரப்பவுமென்ற உவமைக்கு நிலத்தினின்று நீர்ப்பவும் நீர் மலைப்பொழியவுமென்ற உவமைக்கு நீரினின்று நிலத்தேற்றவும் பொருளாகக் கொள்க’’[32] என்று விளக்கம் அளிக்கின்றார்.

**‘‘வருபுன றந்த வெண்மணற் கான்யாற்**

**றுருகெழு கரும்பி னொண்பூப் போல’’ (பட்டினப்.161-162)**

என்ற அடிகளுக்கு, ‘‘கடைத்தெருவின் இரண்டு புறத்திற்கும் எடுத்த கொடிக்கும் யாற்றங்கரையும் கருப்பம்பூவும் உவமை கூறினார்’’[33] என்று விளக்கம் தருகின்றார். கடைத்தெருவின் புறத்திற்கும் அதில் அவற்றின் இருபுறம் நடப்பட்ட கொடிகளின் தோற்றத்திற்கு யாற்றங்கரையும் அவற்றின் இருபுறமும் காணப்பட்ட கருப்பம்பூவும் உவமையாகக் குறிப்பிட்டுள்ளதைச் சுட்டிக் காட்டுகின்றார்.

தூம்பின் ஒலியை (ஓசையை) யானையின் ஓசைக்கு உவமையாகக் குறிப்பிடுகின்றார்.

**‘‘கண் இடை விடுத்த களிறு உயிர் தூம்பின்’’ (மலைபடு.6)**

என்பதற்கு ‘‘இனி யானை நெட்டுயிர்ப்புக் கொண்டாற் போலும் ஓசையையுடைய வென்றுமாம்’’[34] என்று உவமையின் வழி உரை விளக்கம் தருகின்றார்.

**‘‘மீமிசை நல் யாறு கடல் படர்ந்தாஅங்கு**

**யாம் அவண் நின்றும் வருதும்’’ (மலைபடு. 52-53)**

என்ற மலைபடுகடாம் அடிகளுக்கு, ‘‘மலையிற் பொருள்களை வாரிக் கொண்டு யாறு கடலை நோக்கிப் போனாற்போல அவ்விடத்திலுள்ள பொருள்களை வாரிக்கொண்டு வருகின்றோம் என்றுமாம்’’[35] இங்கு மலை, நன்னன் சேய் நன்னனுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. மலையின் சிறப்பினைக் கருத்திற் கொண்டு நன்னனை உவமையாகக் கூறியுள்ளார் என்பதனை இவ்வுரையின் வழி அறியமுடிகிறது.

*நீரின் பயனோடு நன்னனை உவமித்துள்ளார்.*

***"புது நிறை வந்த புனல் அம் காயல்" (மலைடு.61)***

*என்பதற்கு, "தண்ணீர் அரிய காலத்தே வந்து பயன்தருமாறு போல இவனும் பயன்றருவனென்றவாறு"[36] என்று உவமை வழி விளக்குகின்றார்.*

***"காழ் மண்டு எஃகும் களிறுமுகம் பாய்ந்தென***
***ஊழ் மலர் ஒழி முகை உயர்முகம்தோய***
***துறுகல் சுற்றிய சோலை வாழை" (மலைபடு.129-131)***

*என்ற அடிகளுக்கு வேல் குத்தப்பட்டு நிற்கும் யானையின் காட்சியினை வாழைப்பூ மலையைத் தீண்டி நிற்கும் காட்சிக்கு உவமையாகக் கூறுகின்றார். "சூவல் யானையைக் குத்தினாற்போல வாழைப்பூ மலையைத் தீண்டி நின்றதென்றுணர்க"[37] என்று விளக்கம் அளிக்கின்றார். மலையினை யானைக்கு உவமையாக்கி விளக்கம் தருகின்றார்.*

***"உயர்நிலை மாக்கற் புகர்முகம் புதைய***
***மாரியி னிகுதரு வில்லுமிழ் கடுங்கணைத்***
***தாரொடு பொலந்த வினை நவில் யானைச்***
***சூழியிற் பொலிந்த" (மலைபடு.225-228)***

*என்ற அடிகளுக்கு, "இனி அம்பையுடைய தூசிப்படையோடு பொலிந்த யானையொன்று யானைக்கு அடையாக்கி அவ்யானையினுடைய பூக்களெழுதின முகபடாம் போல உயர்நிலை மாக்கற் புகர்முகம் புதையப் பொலிந்த சுடர்ப்பூவையுடைய புரிசையென்றுமாம்; இன்னும் யானையின் மத்தகம் போலே பொலிந்த சுடர்ப்பூவையுடைய புரிசையென்றுமாம். இன்னும் யானையின் மத்தகம் போலப் பொலிந்த சுடர்ப்பூ இலஞ்சியையுடைய உயர்நிலை மாக்கல்லையுடைய புரிசையென்பாருமுளர். அவர் சுனையிடத்து மேலெழுந்த குவளை முதலியவற்றின் அரும்புகள் தலைசாய்ந்து கற்புதையக்கிடந்தாற்கு யானையின் மத்தகத்துப்புகரை உவமையென்று கொள்வர்"[38] இவற்றின் வழி மலையின் தோற்றம், வலிமை முதலியவற்றிற்கு யானையினை உவமையாகக் கூறியிருப்பதனை அறியமுடிகிறது.*

***“அலகைத் தவிர்த்த வெண்ணருந் திறத்த***

***மலைபடுகடாஅ மாதிரத் தியம்ப”   (மலைபடு.347-348)***

*என்ற அடிகளுக்கு யானையை மலைக்கு உவமித்து மலையின் கண் எழும் ஓசையையும் யானையின் கண் எழும் ஓசைக்கு உவமையாகக் கூறுகின்றார். ‘‘கடாம் ஆகுபெயராய் அதிற்பிறந்த ஓசையை யுணர்த்திற்று மலைக்கு யானையை உவமித்து அதன்கட்பிறந்த ஓசையைக் கடாமெனச் சிறப்பித்தவதனால் இப்பாட்டிற்கு மலைபடுகடாம் என்று பெயர் கூறினார்’’[39] என்று உரை விளக்குகின்றார்.*

*இனிமையாகிய பயனைக் கருத்திற்கொண்டு பண்ணிற்கு நுகரும் பொருளை உவமையாகக் குறிப்பிடுகின்றார்.*

***“நல் யாழ் பண்ணு பெயர்த்தன்ன நல்பல உடைத்து”***

***(மலைபடு.453)***

*என்பதற்கு ‘‘பின் ஒன்றையொன்றொவ்வாது இனிதாயிருக்குமாறுபோல நுகரும் பொருளும் ஒன்றையொன்றொவ்வா இனிமையுடையவென்றார்’’[40] என்று உரை விளக்கம் தருகிறார்.*

**சொற்கள், தொடர்களுக்கு விளக்கம் கூறல்**

*பத்துப்பாட்டு அனைத்திற்கும் உரை விளக்கம் தந்திருப்பினும் சில சொற்கள், தொடர்களுக்கு நச்சினார்க்கினியர் தரும் விளக்கங்கள் நயமானதாகவும், சிறப்பானதாகவும் காணப்படுகின்றன.*

**திருமுருகாற்றுப்படை**

*திருமுருகாற்றுப்படையுள் கூறப்பட்டுள்ள சொற்கள், தொடர்களின் விளக்கத்தினைக் கீழ்வருமாறு காணமுடிகிறது.*

*‘‘சேண் விளங்கு ஒளி’’ - கட்புலனால் நோக்குவார் கண்ணிடங்க ளெல்லாவற்றிலும் சென்று விளங்குகின்ற ஒளி (முருகு.3)*

*‘‘இமைத்தல்’’ - கண்களின் இதழ்களிரண்டினையும் குவித்தல் (முருகு.3)*

"மதன் உடை நோன்றாள்" - அறியாமையை உடைத்தற்குக் காரணமாகிய வலியினையுடைய தாளினையும் (முருகு.4)

"கார்கோள்" - கடல்கார் முகக்கப்படுதலிற் கடல் கார்கோளென்று பெயர் பெற்றது. (முருகு.7)

"மா" - அவுணரெல்லாரும் தம்முடனே எதிர்ந்தார் வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங் கொண்டிருந்து சாதித்ததொருமாவை வெட்டினாலென்றவாறு (முருகு.60)

"செவ்வேல்" - எக்காலமும் போர்செய்தலிற் செவ்வேலென்றார், (முருகு.61)

"அந்தணர்" - அந்தத்தை அணவுவார் அந்தணர்; என்றது வேதாந்தத்தையே நோக்குவார். (முருகு.96)

"சமம் முருக்கி" - நடுவுநிலைமைகெடுத்தல், கெடுத்தலாவது, தேவரையும் அசுரரையும் ஒப்பக்கருதாது தேவரைக்காத்து அசுரரையழித்தல் (முருகு.100)

"வள்ளியொடு நகை அமர்ந்தன்று" - காம நுகர்ச்சி இல்லாத இறைவன் இங்ஙனம் நகை அமர்ந்தான், உலகில் இல்வாழ்க்கை நடத்தற் கென்றுணர்க (முருகு.102)

"செற்றம்" - பகைமை நெடுங்காலம் நிகழ்வது (முருகு.132)

"சினம்" - கோபத்தின் பின்னாகச் சிறிது பொழுது நிற்பது சினம் (முருகு.135)

"எயிறு" - காளி, காளாத்திரி, யமன், யமதூதியென நான்காம் (முருகு.148)

"நாற்பெருந் தெய்வம்" - இந்திரன், யமன், வருணன், சோமன் என்னும் தெய்வங்கள் (முருகு.160)

"பதினொரு மூவரொடு" - ஆதித்தன், உருத்திரன், வசு, மருத்துவ னென்னும் ஒரோவோர் பொருள்கள் பலவாகப் பகுக்குங்காற்

*பன்னிருவர் பதினொருவர் எண்மர் இருவராகப் பகுக்க, நான்கு கூறாய் முப்பத்து மூவராயினாரென்றவாறு; பதினொருவராகிய மூவரென்க. அவர் ஆதித்தர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், வசுக்கள் எண்மரும், மருத்துவர் இருவருமாம் (முருகு.167)*

*“ஒன்பதிற்று இரட்டி” - பதினெண்கணங்களை அவர் தேவரும், அசுரரும், தைத்தியரும், கருடரும், கின்னரரும், கிம்புருடரும், இயக்கரும், விஞ்சையரும், இராக்கதரும், கந்தருவரும், சித்தரும், சாரணரும், பூதரும், பைசாசகணமும், தாராகணமும், நாகரும், ஆகாய வாசிகளும், போகபூமியோடுமெனவிவர் (முருகு.168)*

*“பைங்கொடி” - எல்லாவற்றிலும் பசித்திருத்தலின் பச்சிலை யென்று பெயர் பெற்றது; பச்சிலை யென்னாது சினைவினை முதன்மேலேற்றிப் பைங்கொடி யென்றார். (முருகு.190)*

*“முடித்த கில்லை” - இலையைத் தலையிலே யணிந்த கஞ்சங் குல்லையினையும் (முருகு.201)*

*“வேலன்” - பிள்ளையார் (பிள்ளையார் என்பது இங்கு முருகனைக் குறித்த சொல்லாகும்) வேலைத் தனக்கு அடையாளமாகக் கொண்டு திரிதலின் வேலனென்றார் (முருகு.222)*

*“முகன் அமர்ந்து” - அவன் தெய்வத் தன்மையைக் கண்ட பொழுது அச்சம் பிறவாது நிற்க வேண்டு மென்றதற்கு (முருகு.251)*

*“ஐவருள் ஒருவன்” - சதாசிவனும் மயேச்சுவரனும் உருத்திரனும் அரியும் அயனும் பூதங்களுக்குத் தெய்வமாகலின் ஐவரென்றார்; ஐவருள் ஒருவன் என்றது உருத்திரன் தெய்வமாகிய தீயை (முருகு.254)*

*“பழையோன் குழவி” - காடுகிழாள் என்பது இக்காலத்துக் காடுகாளென மருவிற்று அவளும் இறைவனுடைய சக்தியாகலான், அவளுடைய குழவியென்றார் (முருகு.259)*

*“பொருந” - பொருவப்படுமவன் பொருநனென நின்றது (முருகு.276)*

## பொருநராற்றுப்படை

*"நல்மொழி நீரொடு சிதறி" - தேவபாணிகளை நீர்மையுடன் பரக்கப்பாடி (பொருநர்.24)*

*"சீர்" - சீரெனவே பாணியும் தூக்கும் உளவாயின (பொருநர்.24)*

*"மறுகுநீர் மொக்குள்" - துளும்பும் நீரையுடைய கொப்புளம் (பொருநர்.45)*

*"மாக்கள்" - மக்களென்னாது மாக்களென்றார், வீடுபேறு குறியாது செல்வத்தைக் குறித்தலின் (பொருநர்.92)*

*"விரகு"- உபாயங்களாற் பண்ணுதலின் விரகென்றார் (பொருநர்.108)*

*"நிரல் அமை புழுக்கல்" - பழுத்த அரிசியை ஆக்கினமை தோன்ற நிரலமை புழுக்கென்றார் (பொருநர்.114)*

*"தாய் வயிற்று இருந்து தாயம் எய்தி பிறந்து" - தான் பிறக்கின்ற காலத்துப் பிறவாதே நல்ல முகூர்த்தம் வருமளவும் தாயுடைய வயிற்றிலேயிருந்து பிறக்கையினாலே அரசவுரிமையைப் பெற்றுப் பிறந்தென்றார். (பொருநர்.132)*

*"நாடு செகிற் கொண்டு" - தோள்வலியாலே பகைவென்று நாடுகாத்தமைப்பற்றி, நாடு செகிற் கொண்டென்றார். (பொருநர்.138)*

*"ஏடு இல் தாமரை" - ஒருவன் செய்ததன்றித் தனக்கென இதழில்லாத தாமரையை, பொற்றாமரைக்கு வெளிப்படை கூறினார். (பொருநர்.159)*

*"நில்லா உலகம்" - செல்வமும் யாக்கையும் முதலியன நில்லா உலகம். (பொருநர்.176)*

## சிறுபாணாற்றுப்படை

*"முல்லைசான்ற கற்பின்" - முல்லை சூடுதற்கமைந்த கற்பினையும் கற்பின் மிகுதி தோன்ற முல்லை சூடுதல் இயல்பு (சிறுபாண்.30)*

*"கல்லா இளையர்" - தம் தொழிலையொழிய வேறு கல்லாத இளையர் (சிறுபாண்.33)*

*“கடுசூல்” - கன்னியாய் நின்று அரும்புதலில் கடுஞ்சூல் (சிறுபாண்.148)*

*“அழிபசி” - அறிவு முதலியன அழிதற்குக் காரணமான பசி (சிறுபாண்.140)*

*“மடவோர்” - வறுமையுறுதலும் இயல்பென்றறியாது புறங் கூறுவோர். (சிறுபாண்.139)*

*“சிற்றினம்” - ஒழுக்கமில்லாத மாக்கள் திரள் (சிறுபாண்.207)*

*“வெ சினம்” - கோபம் நீட்டித்தது சினம் (சிறுபாண்.210)*

*“வரையாது கொடுத்தல்” - இனித் தனக்கென ஒன்றும் வரைந்து வையாமற் கொடுத்தல் (சிறுபாண்.217)*

*“அகளத்து” - தாழிபோலப் புடைப்பட்டிருத்தலின், அகளமென்றார் (சிறுபாண்.224)*

*“குறடு” - அச்சுக்கோக்குமிடம் (சிறுபாண்.254)*

*“போர்வை” - தேர்த்தட்டு வெளிமறையப் பாவின பலகையைப் போர்வையென்றார் (சிறுபாண்.256)*

*“பாகர்” - அதன் மேலே சுற்றுச் சுவராகப் பலகையாற் செய்த சுவரைப் பாகரென்றார் (சிறுபாண்.258)*

**பெரும்பாணாற்றுப்படை**

*“காய்சினம்” - கோபிக்கின்ற சினம் (பெரும்பாண்.3)*

*“வறுவாய்”-உண்ணாக்கினையில்லாத வாயினையும் (பெரும்பாண்.10)*

*“புலவு வாய் பாண” - கல்வியை வெறுத்துக் கூறுகின்ற வாயினையுடைய பாண (பெரும்பாண்.22)*

*“சூட்டு” - விளிம்பில் வைத்த வளைந்த மரம் (பெரும்பாண்.47)*

*“பரூஉ கை நோன் பார்” - அச்சுமரத்தின் மேலே நெடியவாய் இரண்டு பக்கத்தும் நெடுகக்கிடக்கின்ற பருமரங்களைப்*

*பரூஉக்கை யென்றார். அம்மரங்களிரண்டினையும் நெருங்கத் துளைத்துக் குறுக்கே ஏணிபோலக் கோத்ததனைப் பாரென்றார். (பெரும்பாண்.48)*

*"காடி" - புளியங்காய் நெல்லிக்காய் முதலியன ஊறவிட்டு வைத்ததனைக் காடியென்றார். (பெரும்பாண்.57)*

*"கொடு நுகம்" - துளைகளிற் செருகின கழிகள் கழுத்தசையப் பட்டு நிற்றலின், கொடுநுகமென்றார். (பெரும்பாண்.62)*

*"படம் புக்கு" - சட்டையிட்டு (பெரும்பாண்.69)*

*"சுரை" - கோல்செருகப்படுகின்ற சுரையை யுடைமையிற் சுரையென்றார், குழைச்சு (பெரும்பாண்.92)*

*"வாடு ஊண் - உப்புக்கண்டத்தோடே - (பெரும்பாண்.100)*

*"பைதீர் கடும்பொடு" - பசுமை தீர்ந்த சுற்றம் (பெரும்பாண்.105)*

*"மடிவாய் கோவலர்" - சீழ்க்கைபிடித்தலாலே மடித்த வாயையுடைய இடையர் (பெரும்பாண்.166)*

*"கடுப்பு உடை பறவை" - குளவி (பெரும்பாண்.229)*

*"பறி" - மீனை வாரியெடுக்கும் பறி (பெரும்பாண்.265)*

*"கோள் வள்"-மீனைத் தப்பாமற் பிடிக்கவல்லவன் (பெரும்பாண்.284)*

*"சிறுமீன் புரையும் கற்பின்" - அருந்ததியையொக்கும் கற்பினையும் (பெரும்பாண்.303)*

*"சூழ் சுறை பெரும் பழம்" - தின்பார் விரும்பிச்சூழும் சுளையையுடைய பெரிய பழம் (பெரும்பாண்.356)*

*"அடங்கா தானை"-ஒரெண்ணின்கண் அடங்காத படை (பெரும்பாண்.418)*

**முல்லைப்பாட்டு**

*''கல்லா இளைஞர்'' - வடமொழியை அடியிலே கல்லாத இளைஞர் யானைக்குச் செய்யும் தொழில்களொழிய வேறொரு தொழிலைக் கல்லாத இளைஞர் (முல்லைப்.35)*

*''உரையா நாவின்'' - வார்த்தை சொல்லாத நாவின், ஊமைகள் என்றற்கு (முல்லைப்.65)*

**மதுரைக்காஞ்சி**

*''நோக்கு'' - அழகு (மதுரைக்.13)*

*''நெடியோன்'' - வடிம்பலம் நின்ற பாண்டியன் (மதுரைக்.61)*

*''கொண்டி'' - கொள்ளப்படுதலின் உணவாயிற்று (மதுரைக்.133)*

*''அரந்தை'' - மனக்கவர்ச்சி (மதுரைக்.166)*

*''முருகு'' - தெய்வத்தன்மை ஆகுபெயராய் (மதுரைக்.181)*

*''விசும்பு'' - தேவர் உலகம் (மதுரைக்.182)*

*''வாணன்'' - வாணனென்னும் சூரன் (மதுரைக்.203)*

*''கவ்வை'' - எள்ளிளங்காய் (மதுரைக்.271)*

*''சேணோன்'' - இழிகுலத்தோனாகியவன் (மதுரைக்.295)*

*''பரதர்'' - செட்டிகள் (மதுரைக்.317)*

*''தீபுளி'' - கருப்புக்கட்டி (கரும்பின் வெல்லக்கட்டி) (மதுரைக்.318)*

*''துணியல்'' - கருவாடு (மதுரைக்.320)*

*''கண்டு அமைகல்லா விளங்கு பெருதிருவின்'' - பார்த்த பார்வை மாறுதலமையாத விளங்கும் பெரிய செல்வத்தினையுடைய (மதுரைக்.343-44)*

*''தட்டை'' - தட்டப்படுதலினாற் தட்டை (மதுரைக்.305)*

*''விறலியர்'' - விறல்பட ஆடுதலையுடையார் (மதுரைக்.218)*

*''கல்'' - நங்குரக்கல் (மதுரைக்.378)*

*''தாது'' - நீறுமாம் (மதுரைக்.399)*

*''தொய்யில்'' - எழுதுங் குழம்பு (மதுரைக்.416)*

"கழுநீர்" - தீவினையைக் கழுவுதற்குக் காரணமான தீர்த்த நீர் (மதுரைக்.428)

"அந்தணர்" - வேதாந்தத்தை எக்காலமும் பார்ப்போர் (மதுரைக்.474)

"சாயா யாக்கை" - விரதங்களுக்கு இளையாதமெய் (மதுரைக்.480)

"ஆன்று அடங்கு அறிஞர்" - கல்விகளெல்லாம் நிறைந்துக் களிப்பின்றி அடங்கின அறிவினையுடையார் (மதுரைக்.481)

"சேக்கையும்" - அமணப்பள்ளியும் (மதுரைக்.487)

"சேறு" - சுளையிருக்கின்ற தேன் (மதுரைக்.527)

"கடுசூல்" - முதற்சூல் (மதுரைக்.609)

"மடை" - பாற்போகம் முதலிய சோறுகள் (மதுரைக்.607)

"தொடுதோல் அடியர்"-செருப்புக்கோத்த அடியினர் (மதுரைக்.636)

"புரையோர்க்கு" - நட்பிற் குற்றம் தீர்ந்தோர் (மதுரைக்.737)

"கொடுஞ்சி" - தாமரைப்பூவாகப் பண்ணித் தேர்த்தட்டின் முன்னே நடுவது (மதுரைக்.752)

**நெடுநல்வாடை**

"கவுள் புடையூஉ நடுங்க" - பற்பறைகொட்டி நடுங்க (நெடுநல்.8)

"மெத்தென் சாயல்" - மெய்முழுதும் கட்புலனாய்த் தோன்றுகின்ற மெத்தென்ற சாயல் (நெடுநல்.37)

"மதலைப்பள்ளி" - கபோதகத்தலை (நெடுநல்.48)

"வாள் கேழ் வட்டம்" - சிலாவட்டம் (நெடுநல்.51)

"நாளோடு பெயரிய விழுமரத்து" - உத்தரமென்னும் நாளின் பெயர் பெற்ற உத்தரக்கற்கவியிலே (நெடுநல்.82)

"கேழ் விளக்கத்து" - முடக்கென்னும் மோதிரம் (நெடுநல்.144)

"ஆடு - மேடராசி" - (நெடுநல்.160)

**குறிஞ்சிப்பாட்டு**

"துய்" - இளையதான பருவத்துப் பஞ்சு நுனைபோன்றிப்பது (குறிஞ்சிப்.37)

''தழலும்'' - தழலாவது கையாற் சுற்றினகாலத்துத் தன்னிடத்துப் பிறக்கும் ஓசையாற்கிளி முதலியவற்றை ஒட்டுங்கருவி (குறிஞ்சிப்.43)

''தட்டை'' - தட்டையாவது மூங்கிலைக் கண்ணுக்குக்கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதோர் கருவி (குறிஞ்சிப்.43)

''குளிர்'' - கிளிகடி கருவி (குறிஞ்சிப்.43)

''பழுவும்'' - பிசாசும் (குறிஞ்சிப்.259)

**பட்டினப்பாலை**

''தவப் பள்ளி'' - தவஞ்செய்யும் அமண்பள்ளி பௌத்தப்பள்ளி (பட்டினப்.53)

''படிக்கால்'' - ஏணிகள் (பட்டினப்.142)

''கவிதல்'' - ஒன்றோடொன்று சேர்தல் (பட்டினப்.153)

''குழல்'' - வங்கியம் (பட்டினப்.156)

''கான்'' - மனம் (பட்டினப்.161)

''மஞ்சிகை'' - கொட்டாகாரம் (பட்டினப்.163)

''கந்து'' - தெய்வம் உறையும் தறி (பட்டினப்.249)

''ஒளியர்'' - ஒளிநாட்டார், ஒளியராவர் மற்றை மண்டலத்திற்கு அரசராதற்குரிய வேளாளர் (பட்டினப்.274)

**மலைபடுகடாம்**

''திருமழை'' - செல்வத்தையுண்டாக்கும் மழை (மலைபடு.1)

''பண் அமைத்து'' - பண்கள் தன் கண்களிலே உண்டாக்கப்பட்டு, இடக்க ணிளியா வலக்கண் குரலா நடப்பது தோலியற் கருவியாகும் (மலைபடு.2)

''பாண்டில்'' - கஞ்சதாளம் (மலைபடு.4)

''யாப்பு'' - பத்தலிற் குறுக்கே வலிபெற ஒட்டுவது (மலைபடு.29)

''உந்தி'' - யாழகத்து ஓர் உறுப்பு (மலைபடு.34)

*''பை தீர்பாணரொடு'' - பசுமையிற் பாணரொடு; என்றது, கல்வி முதிர்ந்தமையின் இளமையற்ற பாணரென்றவாறு (மலைபடு.40)*

*''விறலியர்'' - விறல்பட பாடியாடுவார் (மலைபடு.46)*

*''முடுக்கர்'' - நீர்க்குத்தின இடங்கள் (மலைபடு.213)*

*''கல்லாமை'' - தனக்குரிய தொழிலைக் கல்லாமை (மலைபடு.312)*

*''ஒருத்தல்'' - யானைத் தலைவன் (மலைபடு.299)*

*''சுட்டினும் பனிக்கும் சுரம்'' - தத்தமூர்களிலேயிருந்து நினைப்பினும் தலைநடுங்குவிக்குஞ் சுரம் (மலைபடு.398)*

*''விசயம்'' - கருப்புக்கட்டி (மலைபடு.444)*

*''உண்ணுநர் தடுத்த இடி நுண் நுவணை'' - தன்னை நுகர் வாரை வேறொன்றை நுகராமல் தடுத்த இடித்தலால் நுண்ணிதாகிய தினைப் பிண்டி (மலைபடு.445)*

*''நூறை'' - நூறைக்கிழங்கு (மலைபடு.515)*

*''தாயம்'' - உரிமை (மலைபடு.551)*

*''முடுவல்'' - பெண்நாய் (மலைபடு.566)*

*இவ்வாறு பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியர் கூறியுள்ள சொற்கள் மற்றும் தொடர்களுக்குக் கூறும் விளக்கத்தினை அறியமுடிகிறது. இவரது உரை விளக்கம் இன்றேல் பல சொற்கள், மற்றும் தொடர்களுக்குப் பொருள் விளங்காமல் இருந்திருக்கக்கூடும் என்பதனை இவரின் உரைகளின் தெளிவு வழி அறியமுடிகிறது.*

### கொண்டு கூட்டுப் பொருள் கோள்

*தொல்காப்பியர் மாடேற்றினைப் பற்றி*

***''அகன்று பொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்***
***இயன்று பொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்***
***மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்''***

***(தொல்.செய்.நூ.210)***

என்கிறார். மறைமலையடிகள், நச்சினார்க்கினியர் மேற்கொண்ட கொண்டு கூட்டு முறையைக் குறித்து "இதன் கருத்துப் பொருள் இதுவாதல் அறியமாட்டாத நச்சினார்க்கினியர் செய்யுளில் இடையற்று ஒழுகும் பொருள் ஒழுக்கம் அறிந்து உரை எழுதாராய் ஓர் அடியில் ஒரு சொல்லையும் தொலைவிற் கிடக்கும் வேறோர் சொல்லையும் தமக்குத் தோன்றியவாறெல்லாம் எடுத்து இணைத்துத் தாமோர் உரை வகுக்கின்றார். பிற உரையாசிரியர்கள் எவரும் இம்முறையை மேற்கொள்ளவில்லை 'அகன்று கிடக்கும் செய்யுட் பொருளை அணுக வைத்துப் பொருத்திச் சொல்வதே தொல்காப்பியனார் கூறிய மாட்டு' என்னும் உறுப்பாவதன்றிச் செய்யுள் ஒரு பக்கம் உரை ஒரு பக்கமாக வைத்து உரைப்பது அல்ல. நச்சினார்க்கினியர் இவ்வாறு செய்வதால் அது செய்யுட் பொருளைக் கௌவிக் கொண்டு செல்லாமல் வேறுபடுகிறது. இது முடிக்குத் தக்க தலை செய்து கொள்வோம் என்பது போலுள்ளது. வடமொழியில் இவ்வாறு செய்யுட்களை அமைத்துப் பாட்டு ஒரு பக்கமும் உரை ஒரு பக்கமும் இணங்காவுரை எழுதிய சங்கராசிரியரைப் பின்பற்றியே நச்சினார்க்கினியர் இங்ஙனம் உரை எழுதினார்"[41] என்று குறை பாட்டைச் சுட்டிக் காட்டுகின்றார்.

"தானம் மாற்றிச் செய்யும் கணக்குக் கூட்டுப் போல அடிமாற்றம் இவ்வகைக் கொண்டுகூட்டும்முறை குற்றம் உடையது"[42] என்கிறார் வ.சுப.மாணிக்கம்.

மாட்டு என்ற பெயரால், நச்சினார்க்கினியர் செய்யுட்களைக் கலைத்து, அடிகளை மாற்றி, சொற்களைப் பிரித்து முன்பின்னாகக் கூட்டி வலிந்து பொருள் கொண்டு தம் கருத்தைப் பாட்டில் திணித்துவிடுகின்றார். சில இடங்களில் இவ்வாறு செய்யுளை மாற்றிப் பொருள் கூறுகின்றபொழுது பொருத்தமாகவும் அமைகின்றது.

**"மாடம் மலி மறுகில் கூடல் குடவயின்**
**அம்சிறை பெண்டின் அரிகணம் (76)**
**இரு சேரு அகல் வயல் விரிந்து வாய் அவிழ்ந்த**

**முள் தாள் தாமரை துஞ்சி**

**வைகறை கள் கமழ் நெய்தல் ஊதி" (முருகு.71-75)**

என்று அடிகளை மாற்றி எழுதுகின்றார். இவ்வாறு அடிகளை மாற்றி எழுதியிருப்பினும் பொருள் மாறுபடாமல் பொருத்தமாக உரை எழுதுகின்றார். 'மாடங்கள் மிக்க ஏனைத் தெருக்களையுடைய மதுரையின் மேற்றிசையிடத்து, அழகினையுடையதாகிய சிறகையுடைய வண்டினுடைய அழகினையுடைய திரள், கரிய சேற்றினையுடைய அகன்ற வயலிலே முறுக்கு நெகிழ்ந்து பின்பு தாதும் அல்லியும் தோன்ற மலர்ந்த முள்ளையுடைத்தாகிய தாளையுடைய தாமரைப்பூவிலே இராப்பொழுது துயில் கொண்டு, விடியற்காலத்தே தேன்நாறுகின்ற நெய்தற் பூவை யூதி' என்று உரை விளக்கம் தருகின்றார். இங்ஙனம் செய்த மாற்றம் கருத்துக்களை வரிசைப்படுத்திப் பொருளுணர்தற் கேற்ற வகையில் எளிமைப்படுத்தித் தருதலைக் காணமுடிகிறது.

**"ஆங்கு அப் பன்னிருகையும் பால் பட இயற்றி"**

**(முருகு.117-118)**

என்ற அடிகளுக்கு நச்சினார்க்கினியர், முருகப்பெருமான் தன் பன்னிருகைகளும் முகத்தின் பகுதியிலே படும்படி தொழில் செய்யும் பாங்கினை மாட்டேறு எனும் உரை நெறியின் வழி விளக்குகின்றார். "முகங்களில் ஒருமுகம் ஓர்க்கும் (96), ஒருமுகம் விளக்கும் (98), ஒருமுகம் வேட்டன்று (100), ஒருமுகம் அமர்ந்தன்று (102), ஒருமுகம் விரிந்தன்று (92), ஒருமுகம் கொடுத்தன்று (94), அம்மூவிருமுகனும் அத்தொழில்களிடத்துச் செய்யும் முறைமைகளைப் பயின்று நடத்துகையினாலே (103), அம்முகங்களுக்குப் பொருந்தத் தோள்களில் (106), இருகை (110), திரிப்ப (111), ஒருகை விளங்க (112), ஒரு கை பொலிய (113), ஒரு கை கொட்ப (114), ஒரு கை இரட்ட (115), ஒரு கை பொழிய (116), ஒருகை சூட்ட (117), ஒரு கை ஐயர்க்கேந்தியது (107), ஒரு கை உக்கஞ் சேர்த்தியது (108), ஒரு கை கடாவ (110), ஒரு கை அசைந்தது (109) அப்படியே பன்னிருகையும் முகத்தின் பகுதியிலே படும்படி தொழில் செய்தன இச்சொன் முடிபுக் கேற்பக் கைகளையும் முகங்களையும் மாட்டாக முடிக்க" என்று உரையினை மாற்றிக்

கருத்துக்களைக் கூறினும் பொருள் நயம் குன்றாமல் இருப்பதனை அறியமுடிகிறது.

**"மாண்தலை கொடியோடு" (முருகு.227)**

என்ற அடியை

**"உரு கெழு வியனகர்" (முருகு.244)**

என்ற அடியோடு இணைத்து

**"அமைவர மண்ணி" (முருகு.227)**

என்ற முதல் அடியை இணைத்து "மாட்சிமைப்பட்ட தலைமையினை யுடைய கோழிக்கொடியோடே உருகெழு வியனகரை அமைவரப் பண்ணி" என்று உரை விளக்குகின்றார்.

**"ஒருமுகம் செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்**
**கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே" (முருகு.98-101)**

என்ற அடிகளுக்கு உரை கூறுங்கால் பாடலடியின் தொடர்களை முன்னும் பின்னும் மாற்றுகின்றார். பாடலின் பொருளை மட்டுமின்றிக் கவிஞனின் ஆழ்மனத்தையும் பிறர் உணர்ந்து கொள்ள வேண்டும் என்பதற்காக அவர் செய்யும் முயற்சியாகக் கருதமுடிகிறது.

**"ஒருமுகம் செல்சமம் முருக்கிக் கறுவு கொள்நெஞ்சம்**
**செறுநர் தேய்த்துக் களம் வேட்டன்று"**

'ஒருமுகம் திருவுள்ளத்துக்குச் செல்கின்ற நடுவுநிலைமையைக் கெடுத்து இவர்களைக் கொல்ல வேண்டுமென்று கறுவுதல் கொண்ட திருவுள்ளத்தோடே செறப்படும் அசுரர் முதலியோரைப் பொன்றக் கெடுத்துக் கள வேள்வியை வேட்டது' என உரை கூறுகின்றார். இறைவன் உள்ளத்தில் இருப்பது அனைவரையும் ஒப்பக் கருதும் நடுவுநிலைமை அது அழிந்தாலொழிய அங்குப் பகைமை இடம்பெற முடியாது. எனவே நடுவுநிலைமையழிந்து, பகையுடன் போர் செய்து களம் வேட்டதாக வரிசைப்படுத்துகின்றார். இம்மாற்றத்தினால் கருத்துத் தெளிவு ஏற்படுவது மட்டுமின்றிப் பொருள் நயம் சிறப்பதையும் காணமுடிகின்றது.

**"கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி**

**வாழிய பெரிதென் றேத்தி"** ***(முருகு.38-39)***

என்ற அடிகளை, 'வென்று அடு விறல் கோழி ஓங்கிய கொடி பெரிது வாழிய என்று ஏத்தி' என மாற்றி, 'வஞ்சியாக எதிர்நின்று அடுகின்ற வெற்றியையுடைய கோழி மேலாய் நின்ற கொடி நெடுங்காலம் வாழ்வதாக வென்று வாழ்த்தி' என உரை கூறுகின்றார்.

***"மயிர் குறை கருவி மாண்கடை அன்ன***

***பூகுழை ஊசல் பொறை சால் காது"*** ***(பொருநர்.29-30)***

என்ற அடிகளை 'மயிர் குறை கருவி மாண்கடை அன்ன காதின், பூ குழை ஊசல் பொறை சால் காது' என்று மாற்றி 'மயிரை வெட்டுகின்ற கத்தரிகையினுடைய மாட்சிமைப்பட்ட குழைச்சையொத்த காதினையும், பொலிவினையுடைய மகரக் குழையினுடைய அசைவினைப் பொறுத்தலமைந்த காது' என்று விளக்கம் தருகின்றார்.

***"நண்பல் லூர நாட்டொடு நன்பல்***

***வெரூஉப் பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை***

***வெருவரு செலவின் வெகுளி வேழம்"*** ***(பொருநர்.170-172)***

என்ற அடிகளுக்கு உரை கூறுகின்ற பொழுது பாடலடியின் தொடர்களை முன்னும் பின்னும் மாற்றிப் பொருள் கூறுகின்றார்.

***"ஒல்லெனத்***

***திரை பிறழிய இரு பௌவத்துக்***

***கரை சூழ்ந்த அகன் கிடக்கை"*** ***(பொருநர்.177-179)***

***"மண் மருங்கினான்"*** ***(பொருநர்.227)***

***"நாடு"*** ***(பொருநர்.248)***

என்று செய்யுளை மாற்றி 'ஒல்லென்றும் ஓசைபடத் திரை முரிந்த கரிய கடலினது கரை சூழ்ந்த அகன்ற பரப்பினையுடைய இவ்வுலகத்து ஒரு கூற்றின் கண் உளதாகிய சோழநாடு' வளம் செறிந்த கரிகாலனின் சோழநாடு

இவ்வுலகத்தின் ஒரு கூறாக அமைந்திருக்கின்றது என்பதை வரிசைப்படுத்தி விளக்கியிருப்பதனை இவ்வுரையின் வழி அறியமுடிகின்றது.

நிலமகள் தன் கருங்கூந்தலில் மலர்களைச் சூடியது போன்ற கரையோரக் கருமணலின் வாடல் பூ உதிர்ந்து கிடக்கின்றது என்பதைக் கூறுகின்ற போது செய்யுள் அடியை மாற்றிக் கூறுகின்றார்.

**"குயில் குடைந்து உதிர்த்த**
**புதுப்பூஞ் செம்மல் சூடிப் புடை நெறித்துக்**
**கதுப்புவிரித் தன்ன காழ் அக நுணங்கு அறல்"   (சிறுபாண்.4-6)**

என்ற அடிகளை 'காழ் அகம் நுணங்கு அறல் (6) குயல் குடைந்து உதிர்த்த (4) புதுப்பூ செம்மல் சூடி புடை நெறித்து (5) கதுப்பு விரித்தன்ன (6) வேனில் நின்ற (9) கருமையை இடத்தேயுடைய நுண்மையையுடைய அறல் குயில்கள் அலகாலுளர்ந்து உதிர்த்த புதிய பூக்களாகிய வாடலைச் சூடித் தம்மிடமெல்லாம் அறல்பட்டு மயிரை விரித்தாலொத்த தன்மையவாக இளவேனிற் நின்ற வென்க' என்று உரை விளக்குகின்றார். நேராகக் கூற வேண்டிய பொருளை மாற்றி வலிந்து உரை கூறுகின்றார்.

**"அயிலுளி பொருத**
**கைபுனை செப்பங் கடைந்த மார்பின்"   (சிறுபாண்.52-53)**

என்ற அடிகளை, "அயல் உளி" (52) "கடைந்த கைபுனை செப்பம்" (53) "பொருத" (52) "மார்பின்" (53) "மந்தி" (50) 'கூர்மையையுடைய உளிகள் உள்ளே சென்று கடைந்த சாதிலிங்கந் தோய்ந்த செப்புச் சேர்ந்த மார்பின் மந்தி' எனக் கூறுகின்றார். இவ்விடத்தில் மந்தியை முன்னிலைப்படுத்திக் கூறுவதற்குக் கொண்டுகூட்டும் முறையினைப் பயன்படுத்தியுள்ளமையை அறியமுடிகிறது.

பாணன் வீட்டு அடுப்பின் தன்மையைக் கூறுவதற்கு 'அட்டில்' என்ற சொல்லை மூன்று இடங்களில் கூறியுள்ளார்.

**"புனிற்று நாய் குரைக்கும் புல்லென் அட்டில்**
**காழ் சோர் 'அட்டில்'**
**பூழி புழல் காளாம்பி பூத்த அட்டில்" (பெரும்பாண்.132-134)**

'ஈன்றணிமையையுடைய நாய் கூப்பிடும் பொலிவழிந்த அடுக்களையில் கழிகள் ஆக்கையற்று விழுகின்ற அட்டில், பழைய சுவரிடத்தில் எழுந்த திரண்ட கறையான் தின்ற அட்டில், நனைந்த புழுதி உட்பொய்யாகிய காளானைப் பூத்த அட்டில்' இவற்றின் வழி செய்யுளைப் படித்தவுடன் பொருள் புரிந்து கொள்ளுதற்கு ஏதுவாக இச்சொல்லைப் பயன்படுத்தியமை புலப்படுகின்றது.

**"மானடி பொறித்த மயங்கதர் மருங்கின்" (பெரும்பாண்.106)**

என்ற அடியை, 'மயங்கு மான் அடி பொறித்த அதர் இன்' என மாற்றி, 'நீரின்மையின் மயங்கித்திரியும் மானடி அழுந்திக்கிடக்கின்ற வழியிடத்திலே' என்று உரை கூறுகின்றார். மானின் அடியினைத் தவிர வேறொரு அடியும் இல்லாத வழி என்பது பொருள். ஆனால் நச்சினார்க்கினியர் நீரின்மையால் மயங்கித்திரியும் மானின் அடி என்று பொருள் வலிந்து கூறுகின்றார். இவ்விடத்தில் சொல்லை மாற்றிக் கூறியமை பொருந்தாத் தன்மை என அறியமுடிகிறது.

**"அதளோன் றுஞ்சுங் காப்பி னுதள" (பெரும்பாண்.151)**

என்ற அடியில், இறுதியில் உள்ள சொல்லை முதலில் கூறிப் பொருள் கூறுகின்றார். "உதள அதளோன் றுஞ்சுங் காப்பின்" (151) என்பதற்கு, 'கிடாயினுடைய தோல்களைப் பாயலாகவுடைய முதியோன் துயில் கொள்ளும் காவலையுமுடைய' என்று உரை விளக்கம் தருகின்றார். இவ்வாறு சொல்லினை மாற்றி எழுதுவதினால் பொருள் எளிதில் விளக்கம் பெறுகின்றது.

**"வான மூன்றிய மதலை போல**
**வேணி சாத்திய வேற்றருஞ் சென்னி**
**விண்பொர நிவந்த வேயா மாடத்து" (பெரும்பாண்.346-348)**

என்ற அடிகளை, ''வானம் ஊன்றிய மதலை போல'' *(346)* ''விண் பொர நிவந்த மாடம்'' *(348)* ''சாத்திய ஏணி ஏற்றி அரு சென்னி'' *(347)* ''வேயா மாடத்து'' *(348)* என்று மாற்றிக் கூறியுள்ளார். ஆகாயத்தே திரிகின்ற தேவருலகுக்கு முட்டுக்காலாக ஊன்றி வைத்த ஒரு பற்றுக்கோடு போல விண்ணைத் தீண்டும்படி ஓங்கின மாடம், கற்றை முதலியவற்றால் வேயாது சாந்திட்ட மாடத்திடத்தே என்று உரை விளக்கம் தருகின்றார். இவ்விடத்தில் மாடத்தின் உயர்ந்த நிலையை வானுடன் ஒப்பிட்டுக் கூறுவதற்குச் செய்யுளை மாற்றிக் கூறுகின்றார். இவ்வாறு மாற்றிக் குறிப்பிடுகின்ற போது பொருள் மாறாது விளக்கம் பெறுகின்றதனை அறியமுடிகிறது. ''வானம் ஊன்றிய மதலை போல விண்பொர நிவந்த மாடம் என்றும், ஏணிசாத்திய மாடம் என்றும், ஏற்றரும் சென்னி மாடம் என்றும், வேயாமாடம் என்றும், தனித்தனியே கூட்டுக''[43] என்று பொ.வே.சோமசுந்தரனாரும் உரை விளக்கம் தருகின்றார்.

நச்சினார்க்கினியர் முல்லைப்பாட்டிற்கு மாட்டிலக்கணத்தால் உரை வரைந்தமைக்குக் காரணம் கூறுகின்றார். ''முல்லை என்றது காதலனைப் பிரிந்த காதலி அவன் வருந்துணையும் ஆற்றியிருக்கும் ஒழுக்கமாகும். நப்பூதனார் இதற்கு 'முல்லைப்பாட்டு' என்று பெயரமைத்தமையால் இதன்கண் அவ்வொழுக்கமே கூறப்படுதல் வேண்டும், இதற்கு வேறாகத் தலைவி ஆற்றாமல் வருந்தினாள் என்றது நெய்தல் என்னும் இரங்கல் ஒழுக்கமாகும் ஆகலின் இவ்விரங்கல் ஒழுக்கம் போதரப் பொருளுரைத்தல் நூலாசிரியர் கருத்தொடு முரணுமாகலின் இப்பாட்டுக்கு நேரே பொருள் கூறுதலாகாது; என்று சொல்லிப் பொற்சரிகை பின்னிய நற்பட்டாடையினைத் துண்டு துண்டாகக் கிழித்துச் சேர்த்துத் தைத்து அவப்படுவார் போலச் செய்யுட் சொற்றொடர்களை ஒரு முறையுமின்றித் துணித்துத் துணித்துத் தாம் வேண்டியவாறு சேர்ந்துப் பின்னி உரை வகுக்கின்றார்''[44] என்று நச்சினார்க்கினியர் கூறுகின்ற காரணத்தைக் கடிந்து மறுகின்றார் மறைமலை அடிகள். மேலும், நச்சினார்க்கினியர் கூறும் காரணத்தினை மறுத்துக் கீழ்வருமாறு கூறுகின்றார். ''வேனிற்காலத் தொடக்கத்தில் தலைவன் தான்

பிரியும்போது 'யான் கார்காலந் துவங்குதலும் மீண்டு வந்து நின்னுடன் இருப்பேன்; என் ஆருயிர்ப் பாவாய்! நீ அதுகாறும் நம் பிரிவாற்றாமையால் நிகழுந் துயரைப் பொறுத்திருத்தல் வேண்டும்' என்று கற்பித்த வண்ணமே, ஆற்றியிருந்த தலைமகள் அவன் குறித்த கார்ப்பருவம் வரக்கண்டும் அவன் வந்திலாமையின் பெரிதும் ஆற்றாளாயினாள்; இஃதுலக இயற்கை. இங்ஙனம் ஆற்றாளாகின்றமை கண்ட பெருமுது பெண்டிர் விரிச்சி கேட்டு வந்து வற்புறுத்தவும் ஆற்றாது வருந்துந் தலைவி பின் 'நாம் ஆற்றாமை வருந்துகின்றது. கணவன் கற்பித்த சொல்லைத் தவறியதாய் முடியும்' என்று நெடுக நினைந்துப் பார்த்து 'அவர் வருந்துணையும் நாம் ஆற்றுதலே செயற்பாலது' என்று தன்னைத் தேற்றிக் கொண்டு கிடந்தாள். முல்லையொழுக்கமே பயின்று வரும் இப்பாட்டின்கட் 'பூப்போல் உண்கண் புலம்பு முத்துறைப்ப' என்னும் இரங்கற்குரிய அழுகையினைக் கூறுதல் பொருந்தாதாம். பிறவெனின்; நன்று கடாயினாய், முன்னும் பின்னுமெல்லாம் முல்லையொழுக்கமே தொடர்ந்து வரும் இச்செய்யுளின் அகத்து இடையே தோன்றிய அவ்விரங்கற் பொருள் வருமாயினன்றே அது குற்றமாம். அல்லதூஉங், குறிஞ்சி, பாலை, மருதம், முல்லை முதலான ஒழுக்கங்கள் நடைபெறுங்காளெல்லாம் இடையிடையே தலைவி மாட்டு ஆற்றாமை தோன்றும் என்பதூஉம், அங்ஙனந் தோன்றும் அவ்வாற்றாமை எல்லாம் நெய்தல் ஒழுக்கமாதல் இல்லை என்பதூஉம் 'அகநானூறு' 'கலித்தொகை' முதலிய பண்டை நூல்களிலெல்லாங் காணக்கிடத்தலின், இம்முல்லைப் பாட்டினிடையே வந்த அவ்அடி பற்றி ஈண்டைக் காவதொரு குற்றமுமில்லையென விடுக்க ஆற்றுவிப்பார் யாருமின்றித் தனியாளாயிருந்து கடலை நோக்கியுங் கானலை நோக்கியுந் தலைவி இரங்குதலும், பிறர் உள்வழி அவரோடு இரங்கிக் கூறுதலும், நெய்தலொழுக்கமாம் என்பது தொல்லாசிரியர் நூல்களில் காணமுடிகிறது. ஆற்றுவிப்பார் உள்வழியெல்லாம் நிகழும் ஆற்றாமை 'நெய்தல்' ஆவதில்லையாகலின், இப்பாட்டின் கண்ணுங் கணவன் கூறிய சொல்லும் பெருமுது பெண்டிரும் ஆற்றுவித்தற் காரணமாய் நிற்பத் தலைவி மாட்டுத் தோன்றிய

*ஆற்றாமை இடையே வைத்து மொழியப்பட்டதாகலின், இது நெய்தற் றிணையாதல் ஒரு சிறிதும் பொருந்தாமையின் நச்சினார்க்கினியர் நிகழ்த்திய மறுப்புப் போலியாமென்று ஒழிக''*[45] *என்று குறிப்பிடுவர்.*

**''அந்தி விழவிற் றூரியங் கறங்கத்**
**திண்கதிர் மதாணி யொண்குறு மாக்களை**
**யோம்பினார்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்''**

***(மதுரைக்.461-463)***

*என்ற அடிகளை ''தாது அணி தாமரை போது பிடித்தாங்கு'' (463), ''ஒள்குறு மாக்களை'' (461), ''தழீஇ'' (462) என்று மாற்றி அதற்கு 'தாது சேர்ந்த செவ்வித் தாமரைப் பூவைப் பிடித்தாற் போல் ஒள்ளிய சிறுபிள்ளைகளையும் எடுத்துக் கொண்டு' என்று உரை எழுதுகின்றார். இவ்விடத்தில் பொருள் வலிந்து கூறுகின்றார் என்பதை அறியமுடிகின்றது.*

*''அம்ம (168) வானம் கார்காலத்து மழையைப் பெய்ததாகப் (2) பின்னர் நிகழ்ந்த பொழுது கூதிர்காலமாய் நிலைபெற்றது (72); அக்கூதிர்க் காலத்து நடுவியாமத்தே (75) வாயிலினையும் (88) முன்கடையினையும் (92) முற்றத்தினையும் (90) சிறப்பினையுமுடைய (89) கோயில் (100) வரைப்புக்களிற் (107) காண்பினல்லில்லிற் (114) பாண்டிலத் (123) சேக்கையலே (135) வதியுமரிவைக்குப் (166) படர்தீரும்படி (167) வேந்தன் (187) பலரொடு முரணிய பாசறைத் தொழில் (188) விறநந்து (167) இன்னேமுடிவதாக இஃது எனக்கு விருப்பம் (168) எனக் கொற்றவையைப் பரவிற்றாக வினைமுடிக்க''*[46] *என்று நெடுநல்வாடையின் இறுதிப்பத்தியில் நச்சினார்க்கினியர் மாட்டேற்று முறையில் உரை விளக்கம் தருகின்றார்.*

**''அகனகர் வியன் முற்றத்துச்**
**சுடர்நுதன் மடநோக்கி**
**னேரிழை மகளிர் உருங்குணாக் கவருங்**
**கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை**
**பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டு''** ***(பட்டினப்.20-25)***

என்ற பாடலடிகளைச் ''சுடர்நுதல் மடம் நோக்கின் (21) நேர் இழை மகளிர் உணங்கு உணா கவரும் (22) கோழி எறிந்த கொடுங்கால் கனங்குழை (23) பொன்கால் புதல்வர் புரவி இன்று உருட்டும் (24) முக்கால் சிறுதேர் முன் வழி விலக்கும் (25) அகல் நகர் வியன் முற்றத்து (20)'' என வரிசைப்படுத்தி எழுதுவதினால் உரைநடைப் பத்தியிலமைந்த ஒரு வாக்கியத்தைப் படிப்பது போல் பொருள் ஆற்றொழுக்குடன் ஒன்றையொன்று தொடர்ந்து தொடர்புடையதாக அமைந்துள்ளது. ஓரிரு இடங்களில் இவ்வாறு மாற்றிக் கூறினாலும் பொருள் பொருத்தமுடையதாக அமைகின்றது.

**''அருங்கரை கவியக்குத்திக் குழிகொன்று**
**பெருங்கை யானை பிடிபுக் காங்கு**
**நுண்ணிதி னுணர நாடி நண்ணார்''   (பட்டினப்.223-225)**

என்ற அடிகளை, ''நுண்ணிதின் உரைநாடி பெருங்கை யானை அருங்கரை கவிய குத்திக் குழி கொன்று பிடி புக்காங்கு''[47] என மாற்றியுள்ளார். 'தன்னுணர்வு கரிதாக உணரும்படி இதுவே காரியமென்று ஆராய்ந்து பெரிய கையினையுடைய யானை தான் அகப்படப்பண்ணின குழியில் ஏறுதற்கு அரிய கரைகளை இடியும்படி கோட்டாலே குத்திக் குழியைத் தூர்த்துப் பிடியிடத்தே சென்றார் போல' என உரை கூறுகின்றார். இங்ஙனம் செய்த மாற்றம் கருத்துக்களை வரிசைப்படுத்திப் பொருளுணர்தற்கேற்ற வகையில் எளிமைப்படுத்தித் தருதலைக் காணமுடிகிறது.

''நெஞ்சே (220) இவளை நேசமுடன் கொண்டு செல்வோமென்னின் கானம் அவன் (300) ஒக்கிய (229) வேலினும் வெய்யவாயிரா நின்றன (300) இவடோள் (301) அவன் (300) கோலினும் தண்ணிய (301); இவளைப் பிரியாதுறைதலில் யான் போதற்கு ஆற்றாவாயிநின்ற; ஆதலாற் பட்டினம் பெறினும் (218) வயங்குழை ஈண்டுப் பிரிந்திருப்ப (214) யான் நின்னுடன் வாரேன்; இனி ஆண்டுப்போய் வாழ்வாயாக (220) என வினைமுடிக்க''[48] என்று பட்டினப்பாலை உரையுள் இறுதியில் நச்சினார்க்கினியர் கொண்டு கூட்டுப் பொருள் கூறியுள்ளார்.

மலைபடுகடாத்திற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் மூன்று பக்க அளவில் கொண்டு கூட்டுப் பொருள் உரைக்கும் முறையில் உரை எழுதியுள்ளார். மேலும், நச்சினார்க்கினியர் கொண்டு கூட்டுப் பொருள் உரைக்கும் போது 'முடிக்க', 'வினைமுடிக்க', 'மேலே கூட்டுக' என்பதனை 'முன்னே கூட்டுதும்', 'மாட்டாக முடிக்க', 'என முடிக்க', 'முன்னே கூட்டி அடையாக்குக', 'என வினை முடிக்க', 'என்க', 'என கூட்டி வினை முடிபு செய்க', 'வினை முடிபு செய்க', 'என்பதனை இரண்டிடத்திற்கும் கூட்டுக', 'பின்னே கூட்டுதும்', 'முன்னே கூட்டுக', 'என வினைமுடிபு செய்க' என்பன போன்ற தொடர்களைக் கையாண்டு பத்துப்பாட்டிற்கு உரை விளக்கம் தருகின்றார்.

நச்சினார்க்கினியரின் கொண்டு கூட்டு முறையினை, "அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு; நீர்நீடு ஆடினால் கண்ணும் சிவக்கும்; ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும்; அதுபோல் நச்சினார்க்கினியர் அளவிறந்து வலிந்து பாடல்களுக்குக் கொண்டு கூட்டிப் பொருள் எழுதுவதைப் படிக்கும் போது படிப்பவர் உள்ளத்தில் சலிப்பும் சோர்வும் தோன்றுகின்றது"[49] என்று கடிந்து இவரது உரையைக் குறை கூறுகின்றார் இரா.மோகன்.

மாட்டேற்றுப் பொருள்கோள் நச்சினார்க்கினியர் உரையில் குழப்பத்தை விளைவித்திருப்பினும் ஒருசில இடங்களில் கருத்துணர்த்துவதில் எவ்விதக் குழப்பமின்றியும் காணப்படுகின்றது. குறையிருப்பினும் நிறையினைக் கருத்திற்கொண்டு மறைமலையடிகள்; நச்சினார்க்கினியரை, 'தனக்கு நிகர் தானே' என்று பாராட்டியிருப்பதனையும் அறியமுடிகிறது. மேலும், தமிழ்விடுதூதில்; எல்லாம் திருச்செவியில் ஏறும்படி உரைக்க வல்லாய்! உன்போல் எவர்க்கும் வாய்க்குமோ என்று வியந்து போற்றுவர்.

**பாடவேறுபாடு**

நச்சினார்க்கினியர் பத்துப்பாட்டு நூல்களுக்குத் தம் காலத்து வழங்கிய பாட வேறுபாடுகளையும் உரையின் இடையிடையே சுட்டிக்

*காட்டிச் செல்கின்றார். பாடவேறுபாட்டினைச் சுட்டிக்காட்டுவதுடன் அப்பாடத்திற்கான பொருளையும் உரைப்பது நச்சினார்க்கினியரின் உரைச்சிறப்புகளில் ஒன்றாகும். (இப்பாட வேறுபாட்டின் அட்டவணை பின்னினைப்பு:I)*

**கொலைஇய - குலைஇய**

***"கொடுந்தொழில் வல்வில் கொலைஇய கானவர்" (முருகு.194)***

*என்ற அடிக்கு 'கொடிய தொழிலையுடைய வலிய வில்லாற் கொல்லுதலைச் செய்த குறவர்' என்பது பொருள். மேலும், இவ்வடியில் உள்ள 'கொலைஇய' என்ற சொல்லுக்கு மாறாக 'குலைஇய' என் சொல்லைக் கொண்ட பாடமும் உள்ளது. 'குலைஇய' என்ற பாடத்திற்கு 'வில்லை வளைத்த கானவரென்க; எனவே கோறல் பெற்றாம்' என்று விளக்குகின்றார்.*

**குண்டுசுனை - கார்க்குண்டு சுனை**

***"குண்டு சுனை பூத்த வண்டு படு கண்ணி" (முருகு.199)***

*என்ற அடிக்கு, "அதுதான் ஆழ்ந்த சுனையிற்பூத்த பூவாற் செய்த வண்டு வீழ்கின்ற கண்ணி என்று உரை விளக்கம் தருகின்றார். 'கார்க் குண்டு சுனை' என்று பாடமாயின், கரிய ஆழ்ந்த சுனையென்க" என்று பிரிதோரு பாடம் வழங்கினமையையும் சுட்டிக் காட்டுகின்றார்.*

**மாண்டலைக்கொடி - ஆண்டலைக்கொடி**

***"மாண் தலை கொடியொடு உருகெழு வியனகர்***
***அமைவர மண்ணி" (முருகு.227)***

*என்பதற்கு, 'மாட்சிமைப்பட்ட தலைமையினையுடைய கோழிக்கொடியோடே உருகெழு வியனரை அமைவரப் பண்ணி என்று விளக்குகின்றார். இனி, 'ஆண்டலைக் கொடி' என்று பாடமாயின், பேய் முதலியன பலியை நுகராமல் தலை ஆண்மகன் றலையும், உடல் புள்ளியின் வடிவுமாக எழுதின கொடி' என்று பிரிதோரு பொருள் வழங்கினமையையும் சுட்டிக் காட்டுகின்றார்.*

**உயவும்-உயவி**

***"உண்டென உணரா உயவும் நடுவின்" (பொருநர்.38)***

*என்ற அடிக்கு, 'உண்டென்று பிறரும் அறியப்படாத வருந்துமிடையினையும்' என்று உரை கூறுகின்றார். மேலும், 'உயவி' என்று பாடமாயின் வருந்துதலையுடைய என்ற பொருளினையும் உரைக்கின்றார்.*

**மழை மணி மயில் கலாபம்-மணிமயில் கலாபம்**

***"துணி மழை மணி மயில் கலாபம் இடை மஞ்சு பரப்பி***
***தவழும் கோடு" (சிறுபாண்.264-64)***

*என்பதற்கு நச்சினார்க்கினியர், 'தெளிந்தமேகம் நீலமணி போலும் மயிலினுடைய விரிந்த தோகைக்கு நடுவே தனது மஞ்சைப் பரப்பித் தவழுமலை, சிறிது நீர் உட்கொண்டு பக்கம் வெள்ளிய மாசாயிருந்தலின், மேகம் மஞ்சைப் பரப்பி யென்றார்' என்று விளக்கம் அளிக்கின்றார். இனி, 'மணிமயல் கலாபம்' என்று பாடமாயின், மயிலை தன் கலாபத்தை மஞ்சிடையிலே பரப்புதலைச் செய்து துயில் கோடலென்க; என்று வேறொரு பொருள் விளக்கம் தருகின்றார்.*

**ஆரை வேய்ந்த-ஆர்வை வேய்ந்த**

***"மாரிக் குன்ற மழைசுமந் தன்ன***
***வாரை வேந்த வறை வாய்ச் சகடம்" (பெரும்பாண்.49-50)***

*என்ற அடிகளுக்கு, 'மலை மாரிக்காலத்து மேகத்தைச் சுமந்து நின்றாற் போன்ற தொத்துளிப்பாயாலே வேய்ந்த ஒலிக்கின்ற வாயையுடைய சகடம்' என்று பொருள் கூறுகின்றார். மேலும், 'ஆர்வை வேய்ந்த' என்று பாடமாயின் நிறைந்த வரகு வைக்கோலாலே வேய்ந்த தென்க என்று விளக்குகின்றார்.*

**கட்டி-அட்டி**

***"நெல் விலை கட்டி பசு பொன் கொள்ளாள்" (பெரும்பாண்.164)***

*என்பதற்கு நச்சினார்க்கினியர், 'பின்பு தான் நெய்யை விற்கின்ற விலைக்குக் கட்டியாகப் பசும்பொன்னை வாங்களாய் என்று பொருள் விளக்குகின்றார்.*

‘அட்டி’ யென்று பாடமோதி வார்த்தென்று கூறுதலுமாம்’ என்று தம் காலத்தில் வழங்கப்பட்ட பிரிதோரு பொருளையும் சுட்டுகின்றார்.

**நல் அடை-நெல்லடை**

> **“பாம்பு உறை புற்றின் குரும்பி ஏய்க்கும்**
> **பூ புறம் நல் அடை அளைஇ”** ***(பெரும்பாண்.277-278)***

என்ற அடிகளுக்கு, ‘பாம்பு கிடக்கின்ற புற்றின்கட் கிடக்கும் புற்றாம் பழஞ் சோற்றையொக்கும் பொலிவுபெற்ற புறத்தினையுடைய நல்ல முறையை யிடித்துச் சேர அதனை அதிலே கலந்து’ என்று உரை கூறுகின்றார். மேலும் ‘நல் அடை’ என்பதற்கு, நெல்லடையும் பாடம் என்று விளக்கம் அளிக்கின்றார்.

**முப்புடை திரள் - மூப்புடைத்திரள்**

> ***“முப்புடை திரள் காய்” (பெரும்பாண்.364)***

என்பதற்கு நச்சினார்க்கினியர், ‘மூன்று புடைப்பினை உடைய திரண்ட காய், பழுத்தால் அடி மூன்றாகப் புடைத்தல் அதற்கியல்பு’ என்று உரை விளக்குகின்றார். மேலும் இனி மூப்புடைத்திரள் காயும் பாடம் என்று தனது உரையில் குறிப்பிட்டுள்ளார். இவற்றின் வழி முதிர்ந்த நிலையைக் குறிப்பிடுதற்கு ‘மூப்புடைத் திரள்காய்’ என்று வழங்கியிருக்கக்கூடும்.

**அரிசெத்து - அரிசெய்தென்று**

> **“அரி செத்து உணங்கிய பெரு செந்நெல்லின்**
> **தெரி கொள் அரிசி திரள் நெடு புழுக்கல்”**
> ***(பெரும்பாண்.473-74)***

என்ற அடிகளுக்கு, ‘நிறத்தால் ஞாயிற்றையொத்து உலர்ந்த பெரிய செந்நெல்லினுடைய பொறுக்கிக் கொண்ட அரிசியாலாக்கின திரண்ட இடைமுரியாத சோறும்’ என்று விளக்கம் கூறுகின்றார். இனி, ‘அரிசெய்தென்று’ பாடமாயின் அரிதலைச் செய்தென்று கூறுக’ என்று இவ்வடிகளில் வந்துள்ள ‘அரிசெத்து’ என்பதற்கு மாறாக, ‘அரி செய்தென்று’ எனப் பிரிதொரு பாடம் வழங்கியதையும் சுட்டிக்காட்டி அதன் பொருளினையும் உரைக்கின்றார்.

**வாய் நட்பினையே - வாய் நடப்பினையே**

***"உயர்நிலை உலகம் அமிழ்தொடு பெறினும்***

***பொய்சேண் நீங்கிய வாய்நட் பினையே" (மதுரைக்.197-198)***

*என்னும் அடிகளுக்கு, 'ஒரு பொய்யாலே உயர்ந்த நிலையையுடைய தேவருலகை அவர் நுகரும் அமுதத்தோடே பெறுவையாயினும் அவற்றைத் தருகின்ற பொய் நின்னைக் கைவிட்டு நீங்க மெய்யுடனே நட்புச் செய்தலையுடைய' என நச்சினார்க்கினியர் பொருள் விளக்கம் கூறுகின்றார். மேலும், இனி 'பொய் சேணீங்கிய வாய் நடப்பினையே' என்று பாடமாயின் மெய்யை நடத்தலைச் செய்தனையென்க' என அப்பாடத்திற்குப் பொருள் கூறுகின்றார்.*

**அறைவனர் நுவல - அறைவன நுவல**

***"மா கால் எடுத்த முந்நீர் போல முழங்கு இசை***

***நல் பணை அறைவனர் நுவல" (மதுரைக்.361-62)***

*என்ற அடிகளுக்கு, 'பெருமையையுடைய காற்றெடுத்த கடலொலிபோல முழங்கும் ஓசையையுடைய நன்றாகிய முரசைச் சாற்றினராய் விழவினை நாட்டிலுள்ளார்க்குச் சொல்லுகையினாலே' என்று உரை கூறுகின்றார். மேலும், இவ்வடிகளில் இடம்பெற்ற 'அறைவனர் நுவல' என்ற சொல்லுக்கு மாறாக 'அறைவன நுவல' என்ற சொல்லைக் கொண்ட பாடமும் இடம்பெற்றுள்ளது. 'அறைவன நுவல' என்ற பாடத்திற்கு 'அறையப்படுவனவாய விழாவைச் சொல்லவென்க' என்று விளக்கம் அளிக்கின்றார்.*

***சேறும் நாற்றமும் பலவின் சுளையும்***
***வேறுபட கவினிய தேம் மா கனியும்*** } -
***சேறு நாற்றமும் வேறுபடக் கவினிய***
***பலவின் சுளையும் தேமாங் கனியும்***

***"சேறும் நாற்றமும் பலவின் சுளையும்***

***வேறுபட கவினிய தேம் மா கனியும்" (மதுரைக்.527-528)***

என்ற அடிகளுக்கு, ‘தேனும் நாற்றமும் உடையவாகிய பலாப்பழத்தின் வடிவு சுளையும் வேறுபட அழகுபெற்ற இனிய மாவிற் பழங்களையும், என்று உரை விளக்குகின்றார். மேலும், ‘சேறு நாற்றமும் வேறுபடக் கவனிய, பலவின் சுளையுந் தேமாங் கனியும்’ என்ற பாடம் இருந்ததனையும் குறிப்பிட்டுள்ளார்.

**செவ்வி அரும்பின் - செவ்வரி அரும்பின்**

***“மடவரல் மகளிர் பிடகைப் பெய்த***
***செவ்வி அரும்பின் பைங்காற் பித்திகத்து***
***அவ்விதழ் அவிழ்பதம் கமழப் பொழுதறிந்து”***
***(நெடுநல்.39-41)***

என்னும் அடிகளில் இடம்பெற்றுள்ள ‘செவ்வி அரும்பின்’ என்ற தொடருக்கு ‘அலருஞ் செவ்வியையுடைய அரும்பினது’ என்பது பொருளாகும். ‘செவ்வி அரும்பின்’ என்பதற்கு மாறாக, ‘செவ்வரி அரும்பின்’ என்ற பாடமும் இடம்பெற்றுள்ளது. ‘செவ்வரி அரும்பு பாடமாயிற் சிவந்த வரியினையுடைய அரும்பென்க’ என அப்பாடத்திற்கும் பொருள் விளக்கம் கூறியுள்ளார்.

**கட்டளை திரியாது - கட்டளை தெரியாது**

***“வேனில் பள்ளி தென்வளி தரூஉம்***
***நேர் வாய் கட்டளை திரியாது”   (நெடுநல்.61-62)***

என்ற அடிகளுக்கு, ‘இளவேனிற் காலத்துத் துயிலும் படுக்கைக்குத் தென்றற் காற்றைத்தரும் சாலேகத்திலே நின்று உலாவாதே’ என்று உரை விளக்கம் தருகின்றார். மேலும் ‘கட்டளை தெரியாது’ என்று பாடமாயின் ‘திறவாதென்க’ என்ற விளக்கமும் கூறியுள்ளார்.

**வாயுறை - வாயுற**

***“நெடுநீர் வார்குழை களைந்தெனக் குறுங்கண்***
***வாயுறை யழுந்திய வறிதுவீழ் காதின்”   (நெடுநல்.139-140)***

என்ற அடிகளுக்கு, ‘பெரிய ஒளி யொழுகின மகரக் குழையை வாங்கிற்றாகச் சிறிதே தாழ்ந்த காதினையும் சிறிய இடத்தையுடைய தாளுருவி அழுத்திய காது’

என்று பொருள் கூறுகின்றார். மேலும் இனி, 'வாயுறவென்று' பாடமாயின் 'கடுக்கனை வாயுறும்படியழுத்தின காதென்க' என்று அப்பாடத்திற்குப் பொருள் குறிப்பிடுகின்றார்.

**தா துளியும் - தாழ் துளியும்**

***"தவ்வென்று அசைஇ தா துளி மறைப்ப" (நெடுநல்.185)***

என்பதற்கு, 'தவ்வென்னும் ஓசைபட்டு அசைந்து பரக்கின்ற துளியைக் கரக்க' என்று உரை குறிப்பிடுவர். 'தாதுளியும்' என்பதற்கு மாறாக, 'தாழ்துளியும்' என்ற பாடமும் இடம்பெற்றுள்ளதை கூறுகின்றார்.

**வெடி படுத்து எதிர - வெடிபடுத்தார்த்து**

***"கானம் கல்லென***
***மடி விடு வீளையர் வெடி படுத்து எதிர" (குறிஞ்சிப்.160-161)***

என்னும் அடிகளுக்கு, 'காடெல்லாம் கல்லென்னும் ஓசை பிறக்கும்படி வாயை மடித்து விடுகின்ற சீழ்க்கையராய் மிக்க ஓசையையுண்டாக்கி அக்களிற்றைப் புனத்தினின்றும் ஓட்டுகையினாலே' என்று பொருள் விளக்குகின்றார். மேலும், 'வெடிபடுத்தார்த்தெனவும்' பாடம் இடம் பெற்றிருப்பதனையும் குறிப்பிடுகின்றார்.

**நெஞ்சு அமர்ந்து - நெஞ்சமைந்து**

***"அம் தீ தெள் நீர் குடித்தலின் நெஞ்சு அமர்ந்து" (குறிஞ்சிப்.211)***

என்பதற்கு, 'மலையில் அழகிய இனிய தெள்ளிய அருவி நீரை அவன் குடிக்கையினாலே இவள் நெஞ்சு சூளுறவிலே பொருந்தி, நீர் குடித்தலும் ஒரு சூளுறவாக அக்காலத்தில் கருதப்பட்டுள்ளது' என்று உரை கூறுகின்றார். மேலும், 'நெஞ்சமைந்தென்றும்' பாடம் எனத் தம் காலத்து வழங்கிய பிறிதொரு பாடத்தினையும் எடுத்துக்காட்டுகின்றார்.

**புலந்து - புலர்ந்து**

***"புனிறு போகிய புனம் சூழ் குறவர் புலந்து" (மலைபடு.203)***

என்ற அடிக்கு நச்சினார்க்கினியர், 'ஈன்றணிமைதீர்ந்து முற்றின

தினைப்புனத்தைக் காத்தற்குச் சூழ்ந்த குறவர் தினை யழிக்கின்றதற்கு வெறுத்து' என்று உரை கூறுகின்றார். இவ்வடியில் இடம்பெற்றுள்ள 'புலந்து' என்ற சொல்லிற்கு மாறாக, 'புலர்ந்து' என்ற பாடமும் இடம்பெற்றிருப்பதைத் தமது உரையில் குறிப்பிட்டு அதற்கான விளக்கத்தினையும் உரைக்கின்றார்.

**பகல் நிலை தளர்க்கும் - பகை நிலை தளர்க்கும்**

***"பகல் நிலை தளர்க்கும் கவண் உமிழ் கடு கல்" (மலைபடு.206)***

என்ற அடிக்கு, 'பகற்பொழுதே நிற்கின்ற நிலையைக் கெடுக்கும் கவண் காலுகின்ற கடிய கற்கள்' என்று விளக்கம் அளிக்கின்றார். மேலும் அவர், 'பகைநிலை தளர்க்கும்' என்று பாடமாயின், 'பகைத்த நிலையென்க' என இவ்வடிவில் வரும் 'பகல் நிலை தளர்க்கும்' என்பதற்கு மாறாக, 'பகை நிலை தளர்க்கும்' எனப் பிறிதொரு பாடம் வழங்கியதையும் சுட்டிக்காட்டி; அப்பாடத்திற்கான பொருளினையும் உரைத்துள்ளார்.

**யோரியாற் றியவன் - ஓராற்றியவு**

***"சுடர்ப்பூ விலஞ்சி***
***யோரியாற் றியவின் மூத்த புரிசை" (மலைபடு.228-229)***

என்ற அடிகளுக்கு, 'ஒளியையுடைய பூக்களையுடைய மடுவினையுடைய யாற்றுக்கரையில் ஒரு வழியினையுடைய ஊர்' என்பது இதன் பொருள். மேலும், 'ஓராற்றியவு' என்று பாடமாயின் 'ஒருப்பட்ட வழியென்க' என்ற பிறிதொரு பாடம் தம் காலத்தில் வழங்கியதையும் குறிப்பிடுகின்றார்.

**பிறர் உரை கூறுதல்**

பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியரின் உரை முதல் உரை என்று இதுவரை கூறப்படுகின்றது. இருப்பினும் பத்துப்பாட்டிற்கு அவர் எழுதிய உரையில் ஐம்பத்தெட்டு இடங்களில் 'என்பாருமுளர்', 'கூறுவாருமுளர்', 'உரைப்பாருமுளர்' என்று குறிப்பிடுகின்றார். இவ்வாறு குறிப்பிடுவது பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியர் உரைக்கு முன்னதாகப் பழைய உரை ஒன்று இருந்திருக்கக்கூடும் எனலாம். மேலும், தம் காலத்தில் அச்சொற்களுக்கு

வேறொரு பொருள் வழங்கியதை இவ்வாறு குறிப்பிடுகின்றார் என்பதை ஊகிக்க இடமுண்டு.

**திருமுருகாற்றுப்படை**

நச்சினார்க்கினியர், திருமுருகாற்றுப்படையின் உரையின் ஒன்பது இடங்களில் 'கூறுவாருமுளர்', 'என்பாருமுளர்' போன்ற சொற்களால் உரை எழுதியுள்ளார்.

**"மால் வரை நிவந்த சேண் உயர்வெற்பில்" (முருகு.12)**

என்ற அடிக்கு, 'பெருமையையுடைய மூங்கில் வளர்ந்த தேவருலவாகச் செல்லவுயர்ந்த மலையில், வரைகளையுடைமையின் வரையாற்று; இஃது ஆகுபெயர்; 'பெரிய வரைவயிரங்கொண்டு' என்றார் பிறரும்; இனித் திருமால் போலும் குவடுகளோங்கிய வெற்பென்றுமாம்; "மாயோனன்ன மால்வரைக் கவாஅன்" (நற்.32:1) என்றார் பிறரும்"[50] என்று பிற உரையாசிரியர்கள் இவ்வடிக்கு எழுதிய உரையில் மேற்கோள் காட்டியதைச் சுட்டிக் காட்டுகின்றார். இவ்வாறே,

**"அறு வேறு வகையின் அஞ்சுவர மண்டி" (முருகு.58)**

**"புலம் பிரிந்து உறையும் அடி" (முருகு.63)**

**"ஆரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்**
**செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு**
**வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமர் தோள்"**
**(முருகு.104-106)**

**"சீரை தைஇய உடுக்கையர்" (முருகு.126)**

**"ஒன்பதிற்று இரட்டி உயர்நிலை பெறீஇயர்" (முருகு.168)**

**"குடந்தம்பட்டு" (முருகு.229)**

**"சில் பலி செய்து பல் பிரப்பு இரீஇ" (முருகு.234)**

**"விழுமிய பெறல்**
**அரு பரிசில் நல்குமதி" (முருகு.294-295)**

முதலிய அடிகளுக்கு உரை விளக்கம் கூறுகின்ற போது பிற உரையாசிரியர்கள் இவ்வடிகளுக்குக் கூறிய உரை விளக்கம் மற்றும் மேற்கோளினை நச்சினார்க்கினியர் தனது உரையில் குறிப்பிடுகின்றார்.

**பொருநராற்றுப்படை**

நச்சினார்க்கினியரின் பத்துப்பாட்டு உரைக்கு முன்னர் சிலர் உரை எழுதியிருப்பதனைத் தனது பொருநராற்றுப்படை உரையில் குறிப்பிடுகின்றார். சான்றாக,

**"அளை வாழ் அலவன் கண் கண்டன்ன**
**துளை வாய் தூர்ந்த துரப்பு அமை ஆணி" (பொருநர்.9-10)**

என்ற அடிகளுக்கு, 'முழையிலே வாழ்கின்ற ஞெண்டின் கண்ணைக் கண்டாலொத்த பத்தலிரண்டுஞ் சேர்த்தற்குத் திறந்த துளைகளின் வாய் மறைதற்குக் காரணமாகிய முடுக்குதலமைந்த ஆணியினையும்' என்று உரை கூறுகின்றார். இதற்கு வேறொரு உரையாசிரியர் குறிப்பிட்டுள்ள உரையினை "தோல் ஞெகிழாமல் முடுக்கின ஆணியென்று முரைப்பர்"[51] என்று தனது உரையில் கூறுகின்றார். இவ்வாறே பிறர் உரையாசிரியரின் உரையினைத் தனது உரையில் சுட்டிக் காட்டுகின்றார்.

**"அரசு அவை இருந்த தோற்றம் போல" (பொருநர்.55)**
**"பரல்வறைக் கருனை காடியின் மிதப்ப**
**வயின்ற காலைப்" (பொருநர்.115-116)**
**"இரு பனம் போந்தை தோடும்" (பொருநர்.143)**
**"பூக்கமழ் தேறல் வாக்குபு தரத்தர**
**வைகல் வைகல் கைகவி பருகி" (பொருநர்.157-158)**

போன்ற அடிகளுக்குப் பிற உரையாசிரியரின் உரைக்குறிப்பினை விளக்குகின்றார். நச்சினார்க்கினியருக்கு முன்னர் பொருநராற்றுப்படை உரையினைக் கொண்டு கூட்டுப்பொருள் கோள் முறையில் உரை வரைந்திருப்பதையும் தனது உரை விளக்கத்தின் வழி குறிப்பிடுகின்றார்.

***“பல புலந்து***
***நில்லா உலகத்து நிலைமை தூக்கி***
***செல்க என விடுக்குவன் அல்லன்” (பொருநர்.175-177)***

*என்ற அடிகளை, “நில்லாவுலகத்து நிலைமை தூக்கிப் (176) பல புலந்து (175) செல்க என விடுக்குவன் அல்லன் (177)”[52] என்று செய்யுளடிகளை மாற்றிக் கூறியிருப்பதைத் தனது உரையில் கூறுகின்றார். இதன்வழி செய்யுளடிகளை மாற்றிக் கூறும் வழக்கம் நச்சினார்க்கினியர் காலத்திற்கும் முன் இருந்தமை இதன்வழிப் புலப்படுகின்றது.*

**சிறுபாணாற்றுப்படை**

*சிறுபாணாற்றுப்படையில் நான்கு இடங்களில் பிற உரையாசிரியர் உரை கூறியிருப்பதைச் சுட்டிக் காட்டுகின்றார். சான்றாக,*

***“காரி குதிரை காரியொடு மலைந்த***
***ஓரி குதிரை ஓரியும்” (சிறுபாண்.110-111)***

*என்ற அடிகளுக்கு, ‘காரியென்னும் பெயரையுடைத்தாகிய குதிரையையுடைய காரியென்னும் பெயரையுடையவனே போர் செய்த ஓரியென்னும் பெயரை யுடைத்தாகிய குதிரையையுடைய ஓரியென்னும் வள்ளலும்’ என்று நச்சினார்க்கினியர் உரை விளக்கம் தருகின்றார். ‘காரி’, ‘ஓரி’ என்பதற்கு பிற உரையாசிரியர் கூறிய விளக்கத்தினையும் நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார். “காரி கரிய குதிரையென்றும், ஓரி பிடரிமயிரென்றும் கூறுவாருமுளர்”[53] என்று விளக்குகின்றார். இவ்வாறே,*

***“அறிவு மடம் படுதலும் அறிவு நன்கு உடைமையும்”***
***(சிறுபாண்.216)***

***“தேம்பெய்***
***தமிழ்பொதிந் திலிற்று மடங்குபுரி நரம்பின்”***
***(சிறுபாண்.226-227)***

***“இளையோர்க்கு மலர்ந்த மார்பினை எனவும்”***
***(சிறுபாண்.232)***

*முதலிய அடிகளுக்கு பிற உரையாசிரியர் கூறிய மேற்கோளினைக் கூறுகின்றார்.*

**பெரும்பாணாற்றுப்படை**

பெரும்பாணாற்றுப்படையில் எட்டு இடங்களில் பிற உரையாசிரியரின் உரைக் குறிப்பினை விளக்கியுள்ளார். அவை,

**"புல்லென் யாக்கை புலவு வாய் பாண" (பெரும்பாண்.22)**

என்ற அடிக்கு, 'பொலிவழிந்த வடிவினையும் கற்ற கல்வியை வெறுத்துக் கூறுகின்ற வாயினையுமுடைய பாண' என்று நச்சினார்க்கினியர் உரை கூறுகின்றார். இவ்வடிக்கு,

**"சில்செவித் தாகிய கேள்வி நொந்து" (புறம்.68:3)**

என்றார் பிறரும்; புலால் நாறுகின்ற வாயுமாம்"[59] என்று வேறொரு உரையாசிரியரின் உரைக் கருத்தினையும் தனது உரையில் குறிப்பிடுகின்றார்.

**"..... கயிறு பிணித்து**
**காடி வைத்த கலன் உடை மூக்கின்" (பெரும்பாண்.56-57)**

என்ற அடிகளுக்கு நச்சினார்க்கினியர், 'தகராதபடி கயிற்றாலே வரிந்து காடி வைத்த மிடாவையுடைய அப்பாரிற்றலையிலே' என்று பொருள் விளக்குகின்றார். மேலும், "புளியங்காய் நெல்லிக்காய் முதலியன ஊறவிட்டு வைத்ததனைக் காடியென்றார்; இனிக்காடி நெய்யென்பாருமுளர்; இனிப்பாரிற் கழுத்தானவிடத்தே வைத்த மிடாவென்றுமாம்"[55] என்று பிற உரையாசிரியரின் உரையினையும் கூறுகின்றார். இவ்வாறே,

**"அரு சுரம் இறந்த அம்பர் குறும்பில் சேப்பின்"**
**(பெரும்பாண்.117)**

**"அந்நு ணவிர்புகை கமழக் கைம்முயன்று**
**ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழிச்**
**செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்"**
**(பெரும்பாண்.177-179)**

**"பகட்டா வீன்ற கொடுநடைக் குழவிக்**
**கவைத்தாம்பு தொடுத்த காழூன் றல்கு"**
**(பெரும்பாண்.243-244)**

***“கோடை நீடினும் குறைபடல் அறியா தோள்***
***தாழ் குளத்த கோடு காத்திருக்கும்” (பெரும்பாண்.272-273)***
***“சுடர் கடை பறவை பெயர் படு வத்தம்” (பெரும்பாண்.305)***
***“.......... ஞெகிழி***
***யுரவுநீ ரழுவத் தோடு கலங் கரையும்***
***துறை” (பெரும்பாண்.349-351)***

*முதலான அடிகளுக்குப் பிற உரையாசிரியர்கள் நச்சினார்க்கினியரைப் போன்று உரை கூறாமல் வேறாக உரை எழுதியிருப்பதைத் தனது உரை விளக்கத்தின் இறுதியில் சுட்டிக் காட்டுகின்றார்.*

**முல்லைப்பாட்டு**

*முல்லைப்பாட்டின் ஓர் இடத்தில் மட்டும் பிற உரையாசிரியரின் உரைக்கருத்தினை வெளிப்படுத்துகின்றார்.*

***“நீர் செல நிமிர்ந்த மாஅல் போல்” (முல்லைப்.3)***

*என்பதற்கு, ‘மாவலி வார்த்த நீர் தன் கையிலே சென்றதாக உயர்ந்த திருமாலைப் போல, இனி நேமியோடு வலம்புரியுமாகிய உத்தம இலக்கணங்களைப் பெற்றிருக்கின்ற திருமகளையணைத்த கையிலே நீர் செல்லவென்றுமாம்’ என்று பொருள் கூறுகின்றார். மேலும் இனி, உலகத்தைத் திருவடிகளிலே அனைத்துக் கொண்டு நிமிர்ந்த மால் என்றும் உரைப்பர்”[56] என்று குறிப்பிடுகின்றார்.*

**மதுரைக்காஞ்சி**

**“மேதக மிகப்பொலிந்த**
**வோங்குநிலை வயக்களிறு” *(மதுரைக்.14-15)***

*என்ற அடிகளுக்கு, ‘அறவும் பொலிவு பெற்ற உலகத்தைத் தாங்குதல் வளருந் தனிமையுடைய வலியையுடையவாகிய திக்கயங்கள் இவர் தாங்குதலின் வருத்தமுற்று மேம்பாடுதக’ என்று உரை விளக்குகின்றார். “சுருளும் படியுமாகப் பண்ணினவிடத்துப் பண்ணி நிற்கும் யானை யென்றுரைப்பாருமுளர்”[57] என்று வேறொரு உரை இருப்பதனையும் சுட்டிக் காட்டுகின்றார்.*

**"உயர் பூரிமம் விழு தெருவில்" (மதுரைக்.18)**

என்பதற்கு நச்சினார்க்கினியர், 'உயர்ந்த சிறகுகளையுடைய சீரிய தெருவிலிருக்கும் மாந்தர்' என்று பொருள் கூறுகின்றார். மேலும் இதற்கு, "பூரிமம் சாந்திட்ட தொட்டிகளென்பாருமுளர்"[58] என்று பிற உரையாசிரியரின் உரையினையும் குறிப்பிடுகின்றார். இவ்வாறே மதுரைக்காஞ்சி அடிகளுக்குப் பிற உரையாசிரியரின் உரைகளையும் தமது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

***"வாண்மிகு மறமைந்தர்***
***தோண் முறையான் வீறுமுற்றவும்" (மதுரைக்.53-54)***

***"சீர் சான்ற உயர் நெல்லின்***
***ஊர் கொண்ட உயர் கொற்றவ" (மதுரைக்.87-88)***

***"குரு கெழு பெருஞ்சிறப்பி***
***னிருபெயர்ப் பேராயமொ***
***டிலங்குமருப்பிற் களிறு கொடுத்தும்" (மதுரைக்.100-102)***

***"நரம்பின் முரலும் நயம் வரும் முரற்சி***
***விறலியர் வறுகை குறு தொடி செறிப்ப" (மதுரைக்.217-218)***

***"வாள் உழந்து அதன் தாள் வாழ்த்தி" (மதுரைக்.222)***

***"நாள் ஈண்டிய நல் அகவர்க்கு***
***தேரோடு மா சிதறி" (மதுரைக்.223-224)***

***"..... இன்குரல்***
***றளிமழை பொழியுந் தண்பரங் குன்றிற்***
***கலிகொள் சும்மை....." (மதுரைக்.262-264)***

***"சேணோன் அகழ்ந்த மடி வாய் பயம்பின்***
***வீழ் முகம் கேழல் அட்ட பூசல்" (மதுரைக்.294-295)***

***"காணுந ரிட்ட***
***நெடுங்கரைக் காழக நிலம்பரலுறுப்ப" (மதுரைக்,597-598)***

***"பேயு மணங்கு முருவுகொண் டாற்கோற்***
***கூற்றக் கொஃறேர் கழுதொடு கொட்ப" (மதுரைக்.632-633)***

***"வானம் நீங்கிய நீல் நிறம் விசும்பின்" (மதுரைக். 678)***

***"மிக்கு புகழ் எய்திய பெரு பெயர் மதுரை" (மதுரைக். 699)***

***"கோதையின் பொலிந்த சேக்கை துஞ்சி" (மதுரைக். 713)***

முதலிய அடிகளுக்கு விளக்கம் கூறுகின்ற போது பிற உரையாசிரியரின் உரை விளக்கம் மற்றும் பிற நூல்களிலிருந்து எடுத்துக்காட்டிய மேற்கோள் முதலியவற்றையும் நச்சினார்க்கினியர் குறிப்பிட்டுக் காட்டுகின்றார்.

**நெடுநல்வாடை**

***"மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்படத்***
***துணை புணரன்னத் தூநிறத் தூவி***
***யிணையணை மேம்படப் பாயணை யிட்டு"***

***(நெடுநல். 131-133)***

என்ற அடிகளுக்கு, 'மெல்லியதாக விரிந்த இணைதலணைந்த படுக்கையென்க' அச்சேக்கைக்கு மேலாகத் தம்பேட்டைப் புணர்ந்த அன்னச் சேவலின் தூய நிறத்தையடைய சூட்டாகிய மயிர் பரக்கப்பட்டு என்று விளக்கம் கூறி, பின்பு "சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சுசேணா, சேக்கையோரைந்து" (கலித். 72:1:8, ந.மேற்., சீவக. 838, ந.மேற்.) என்ற ஐந்தினையும்படுத்ததென்பது தோன்ற இணையணையென்றார். என்புருகி மிக்க அன்போடு புணர்தலிற் சூட்டிற்கு மென்மை பிறக்குமென்பது தோன்றத் துணைபுணரன்னத் தூநிறத் தூவி யென்றார் என்று பிற நூல்களிலிருந்தும் கூடுதல் விளக்கம் அளிக்கின்றார். மேலும், பிறரும் இக்கருத்தே பற்றி, ஆதாரம் பெருகுகின்ற வன்பினாலன்ன மொத்தும்"[59] (சீவக. 189) என்றார் என்று இக்கருத்திற்கு இணையாகப் பிற உரையாசிரியர் குறிப்பிட்டிருப்பதனையும் சுட்டிக் காட்டுகின்றார். இவ்வாறே,

***"ஆரம் தாங்கிய அலர் முலை ஆகத்து***
***பின்னமை நெடு வீழ் தாழ" (நெடுநல். 136-137)***

என்ற அடிகளுக்கு நச்சினார்க்கினியர், 'முன்பு முத்தாற் செய்த கச்சுச் சுமந்த பருத்தமுலையினையுடைய மார்பிடத்தே இப்பொழுது குத்துதலமைந்த

நெடிய தாலி நாணென்றுமே தூங்க' என்று விளக்குகின்றார். மேலும், "வீழ்ந்து கிடத்தலின் வீழென்றார் இனிப் பின்னுதலமைந்த நெடிய வீழ், மயிரென்பாருமுளர்"[60] என்று பிற உரைக்குறிப்பினையும் குறிப்பிடுகின்றார்.

**"நல் நுதல் உலறிய சில் மெல் ஓதி" (நெடுநல்.138)**

என்பதற்கு, 'ஒன்றாகிய நுதலிடத்தே கை செய்யாமல் உலறிக்கிடந்த சிலவாகிய மெத்தென்ற மயிரினையும்' என்று பொருள் கூறுகின்றார். "இனித் துணை துறந்து உலறிய ஓதியென்கூட்டிக் கூடிக்கிடந்த தன்மை நீங்கி உலறிய ஓதியென்றுரைப்பாருமுளர்"[61] என்று செய்யுளை மாற்றிக் குறிப்பிட்டு உரையெழுதிய பிற உரையாசிரியரின் உரையினையும் தனது உரையில் குறிப்பிடுகின்றார்.

**குறிஞ்சிப்பாட்டு**

**"கலி கெழு மரம்மிசை சேணோன் இழைத்த**
**புலி அஞ்சு இதணம்" (குறிஞ்சிப்.40-41)**

என்ற அடிகளுக்கு, 'ஆரவாரம் பொருந்தின மரத்தின் உச்சியிலே இராக்காலம் ஆகாயத்திருப்போன் பண்ணினபுலி அஞ்சுகைக்குக் காரணமான பரண்' என்று விளக்கம் அளிக்கின்றார். "சேணோன் மாட்டிய நறும்புகை நெகிழி" (குறுந்.150:1) என்றார் பிறரும்"[62] என்று பிற உரையாசிரியர் குறிப்பிட்டுள்ள மேற்கோள் விளக்கத்தினைத் தனது உரையில் கூறுகின்றார்.

**"தழலும்" (குறிஞ்சிப்.43)**

என்பதற்கு, 'தழலும், தழலாவது கையாற் சுற்றின காலத்துத் தன்னிடத்துப் பிறக்கும் ஓசையாற் கிளி முதலியவற்றை ஓட்டுங் கருவி' என்று விளக்கம் அளிக்கின்றார். மேலும், இதனை "கவணென்பாருமுளர்"[63] என்று பிற உரைக்கருத்தினையும் குறிப்பிடுகின்றார்.

**"திணி நிலை கடம்பின் திரள் அரை வளைஇய**
**துணை அறை மாலையின் கைபிணி விடேஎம்"**
**(குறிஞ்சிப்.176-177)**

என்ற அடிகளுக்கு, 'திண்ணிய நிலையினையுடைய கடம்பினது திரண்ட முதலை நெருங்கச் சூழ்ந்த மகளிரொழுங்கிற்கு ஒப்புச் சாற்றுதலையுடைய மாலைபோல கைகோத்தலை விடேமாய்' என்று பொருள் கூறுகின்றார். மேலும், இவ்வடிகளுக்கு வேறுரை இருந்தமையை, "மகளிரொடுங் களத்தை கடப்பமாலை வளைத்தாற் போல மிகவும் கடப்பமாலை வளைத்த வென்பாருமுளர்"[64] என்று குறிப்பிடுகின்றார்.

**"நூழிலும்"** ***(குறிஞ்சிப்.248)***

என்ற சொல்லிற்கு, 'வழிப்பறிப்பார் கொன்று குவிக்கும் இடங்களும்' என்று விளக்குகின்றார். இதற்கு வேறு உரையாசிரியர், "நூழில் கொடிப் பிணக்கென்பாருமுளர்"[65] என்று விளக்கம் கூறுகின்றார்.

**பட்டினப்பாலை**

பட்டினப்பாலையில் வேறு உரையாசிரியரின் உரைக்குறிப்பினை மூன்று இடங்களில் விளக்குகின்றார். சான்றாக,

***"இரு காமத்து இணை ஏரி"   (பட்டினப்.39)***

என்ற அடிக்கு நச்சினார்க்கினியர், 'இம்மையிலும் மறுமையிலும் உண்டாகிய காமவின்பத்தினைக் கொடுத்தற்குரிய இணைந்த ஏரிகளையும்' என்று பொருள் விளக்கம் கூறியப் பின்பு சிலப்பதிகார மேற்கோளினையும் குறிப்பிடுகின்றார். "அது, சோமகுண்டஞ் சூரிய குண்டந் துறைமூழ்கிக், காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடுந், தாமின் புறுவ ருலகத்துத் தையலார், போகஞ்செய் பூமியினும் போய்ப் பிறப்பர்" (சிலப்.9:59-62) என்ற தனாணுமுணர்க என்று குறிப்பிடுவர். மேலும், இதற்கு

***"இனி வளகாமரேரி வணிகாமரேரி? யென்றும்,***
***சங்கிராம காமம் வணிக்கிராம காமமென்று உரைப்ப"[66]***

என்று பிற உரையாசிரியரின் உரைக் கருத்தினையும் விளக்குகின்றார்.

***"வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகி***
***னீர்நாப் பண்ணு நிலத்தின் மேலு***
***மேமாப்ப வினிது துஞ்சி"   (பட்டினப்.193-195)***

என்ற அடிகளுக்கு, 'ஏமாப்பினாலே புகாரினடுவிடத்தும் கரையினிடத்தும் அழிவின்றி இனிதாகத் தங்குகையினாலே, செல்வம் தலை தெரியாத அகன்ற இடங்களையுடைய தெருக்களையும்' என்று உரை கூறுகின்றார். மேலும், செழுநகர் வரைப்பிற் (183) புரவி முதலியன ஈண்டித் (192) துஞ்சி (195) மயங்கி மறுகு (193) என்க' என்று உரை விளக்கத்தின் இறுதியில் கூட்டி உரைக்கின்றார். "இனி, இனிது துஞ்சி (195) மீன் பிறழவும் (197) மா ஈண்டவும் (198) என மேலே கூட்டுவாருமுளர்"[67] என்று குறிப்பிடுகின்றார். இவற்றின் வழி நச்சினார்க்கினியருக்கு முன்கூட்டி உரைக்கும் முறை இருந்தமையை அறியமுடிகின்றது.

**"பண்ணி அட்டியும்**

**புண்ணியம்" (பட்டினப்.203-204)**

என்பதற்கு, 'பெரியதாகப் புண்ணியங்களைத் தாங்கள் பண்ணி அவற்றைச் செய்யமாட்டாதாருக்குத் தானம் பண்ணியும்' என்று நச்சினார்க்கினியர் விளக்கம் கூறுவர். "பண்ணியமட்டியு மென்றதற்குச் சோற்றை ஆக்கியிட்டு மென்பாருமுளர்"[68] என்று பிற உரையாசிரியர் குறிப்பிட்டுள்ளதையும் தனது உரையின் வழி வெளிப்படுத்துகின்றார்.

**மலைபடுகடாம்**

நச்சினார்க்கினியர் பிற உரையாசிரியரின் உரைக் கருத்தினைக் கூறுவதோடு மட்டுமின்றி அதனை மறுத்தும் உரை கூறியுள்ளார்.

**"கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக்**

**குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பி**

**னரலை தீர வுரீஇ" (மலைபடு.22-24)**

என்ற அடிகளுக்கு, 'நூற்கேள்வி அடைய முற்றுபெற்று, வெண்சிறு கடுகளவும் கொடும்பு இல்லையாம்படி தீற்றி, முடங்கிப் பரற்றன்மையாயிருத்தலிற் கொடும்பை அரலை என்றார். அரலை குற்றமுமாம். ஓசையை ஓர்ந்து பார்த்துக் கட்டின வடித்து முறுக்கின நரம்பினையும், கேள்வி போகா, உரீஇத் தொடுத்த

நரம்பென்க' என்று உரை விளக்கம் தருகின்றார். "இனி, வெண்சிறுகடுகளவும் கேள்விதப்பா தென்பாருமுளர்; அது வடிவிற்கு உவமையாதலிற் பொருந்தாது"[69] என்று பிற உரையாசிரியரின் உரை விளக்கத்தினை மறுத்தும் உரை கூறியுள்ளார்.

**"வரகின் குரல்**

**வார்ந்தன்ன நுண் துளை இரீஇ" (மலைபடு.24-25)**

என்பதற்கு, 'வரகின் கதிர் ஒழுகின தன்மைத்தாக நெருங்கின நுண்ணிய துளைகளையிருத்தி, இது, பொல்லம் பொத்துமிடத்திற்றுளை' என்று விளக்கம் அளிக்கின்றார். பிறர் இதனை, "பரியரைக் கமுகின் பாளையம் பசும்பூக், கருவிருந் தன்ன கண் கூடு செறிதுளை"[70] என்று விளக்குகின்றதனைக் குறிப்பிடுகின்றார்.

**"விழுந்தோர் மாய்க்குங் குண்டுகயத் தருகா**

**வழும்புகண் புதைத்த நுண்ணீர்ப் பாசி" (மலைபடு.220-221)**

என்ற அடிகளுக்கு, 'விழுந்தோரை மறைக்கும் ஆழத்தையுடைய குளங்களுக்கு அருகாக இடம் மறைதற்குக் காரணமாகிய நுண்ணிய நீர்மையையுடைய பாசியினது குற்றம்' என்று உரை விளக்குகின்றார். "வழும்பறுக்க கில்லாவாந்தேரை வழும்பில்சீர்"[71] என்றார் பிறரும் என்று பிற உரைக் கருத்தினையும் சுட்டுகின்றார்.

**"சுடர்ப்பு விலஞ்சி**

**யோரியாற் றியவின் மூத்த புரிசை" (மலைபடு.228-229)**

என்ற அடிகளுக்கு, 'ஒளியையுடைய பூக்களையுடைய மடுவினையுடைய யாற்றுக்கரையில் ஒருவழியினையுடைய ஊர், 'ஒராற்றியவு' பாடமாயின் ஒருப்பட்ட வழியென்க' என்று பொருள் விளக்குகின்றார். மேலும், "இனி அம்பையுடைய தூசிப்படையோடு பொலிந்த யானையென்று யானைக்கு அடையாக்கி அவ்வியானையினுடைய பூக்களெழுதின முகபடாம் போலே உயர்நிலை மாக்கற் புகர் முகம் புதையப் பொலிந்த சுடர்ப் பூவையுடைய

புரிசையென்றுமாம்; இன்னும் யானையின் மத்தகம் போலே பொலிந்த சுடர்ப்பூவையுடைய புரிசை யென்றுமாம்; இன்னும் யானையின் மத்தகம் போலே பொலிந்த சுடர்ப்பூ இலஞ்சியையுடைய உயர்நிலைமாக்களையுடைய புரிசையென்பாருமுளர்”[72] என்று பிற உரையாசிரியரின் கருத்தினைக் கூறி அவ்வாறு கூறுதற்கான காரணத்தையும் கீழ்வருமாறு விளக்குகின்றார். “அவர் சுனை யிடத்து மேலெழுந்த குவளை முதலியவற்றின் அரும்புகள் தலைசாய்ந்து கற்புதையக் கிடத்தற்கு யானையின் மத்தகத்துப்புகரை உவமை என்று கொள்வர்”[73] என்பர்.

**“காஅய் கொண்ட நுகம் மருள் நூறை” (மலைபடு.515)**

என்பதற்கு நச்சினார்க்கினியர், ‘காவிக் கொண்டு வந்த நுகமென்று மருளும் நூறைக்கிழங்கு’ என்று உரை விளக்கம் தருகின்றார். “நூறை - மலங்கென்பாருமுளர்”[74] என்று பிற உரையாசிரியர் வேறு பொருள் உரைக்கின்றார்.

பிற உரையாசிரியரின் கருத்தினைக் கூறுகின்ற போது உரையாசிரியரின் பெயர்களைக் குறிப்பிடவில்லை. நச்சினார்க்கினியரைப் போலவே கொண்டு கூட்டு முறையில் உரை வரைந்திருப்பதனை இவரின் உரை வழி அறியமுடிகிறது. மேலும், பிற உரையாசிரியரின் உரைக்கருத்திற்கு விளக்கமும், அதனை மறுத்தும் உரை கூறியுள்ளார்.

**நச்சினார்க்கினியாரின் தனித்தன்மைகள்**

இன்றைய காலகட்டத்தில் பத்துப்பாட்டிற்குப் பல்வேறு உரைகள் தோன்றியுள்ளன. ஆரம்பக் காலத்தில் பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியர் உரையைத் தொடர்ந்து வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியரும், பொ.வே.சோமசுந்தரனாரும் உரை இயற்றியுள்ளனர். நச்சினார்க்கினியர் உரையின் தனித்தன்மையை அறிந்து கொள்வதற்கு இவரது உரைக்குப்பின் தோன்றிய இவ்விருவரின் உரையினை மட்டும் ஒப்பிட்டு விளக்குவதாக அமைகின்றது. இம்மூவரின உரை வேறுபாட்டினை அட்டவணைப்படுத்தலாம். (பின்னிணைப்பு:II)

**இமைக்கும் - ஒளிர்தல் - இதழ்கள் இரண்டினையும் குவித்தல்**

***"ஓவற இமைக்கும் சேண் விளங்கு அவிர் எளி" (முருகு.3)***

இவ்வடியிலுள்ள 'இமைக்கும்' என்பதற்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோவும் 'இமைத்துப் பார்ப்பதற்குக் காரணமாகும்' எனவும் 'இமைத்தல்', 'கண்களின் இதழ்கள் இரண்டினையும் குவித்தல்' என்றும் உரை கூறியுள்ளனர். பொ.வே.சோமசுந்தரனார் 'ஒளிர்தல்' என்று பொருள் கூறுகின்றார். 'இமைக்கும்' என்பதற்குக் 'கண்கள் இதழ்கள் இரண்டினையும் குவித்தல்' என்று பொருள் கொள்ளுதலே பொருத்தமாக அமைகின்றது.

**மா**

***"………. கவிர் இணர்***
***மா முதல் தடித்த" (முருகு.59-60)***

என்ற அடிகளிலுள்ள "மா" என்பதற்கு நச்சினார்க்கினியர், 'கீழ்நோக்கின பூங்கொத்துக்களையுடைய மாமரத்தை வெட்டின' என்று உரைகூறி; மேலும், 'அவுணரெல்லாரும் தம்முடனே எதிர்ந்தார் வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங் கொண்டிருந்து சாதித்த தொருமாவை வெட்டினான் என்றவாறு' என்று விளக்குகின்றார். இதற்கு வை.மு.கோவும், பொ.வே.சோமசுந்தரனாரும், 'கீழ்நோக்கின பூங்கொத்துக்களையுடைய மாமரத்தை வெட்டின' என்று உரை கூறுகின்றனர். இவற்றின் வழி நச்சினார்க்கினியர் கூறுகின்ற கூடுதல் விளக்கத்தின் மூலம் மற்ற உரையாசிரியரிடம் இருந்து வேறுபடும் தன்மையையும் நுணுக்கமாகப் பொருள் கூறுகின்ற முறையினையும் அறியமுடிகிறது.

**வரி புனை பந்தொடு பாவை தூங்க**

***"வரி புனை பந்தொடு பாவை தூங்க" (முருகு.68)***

என்ற அடிக்கு நச்சினார்க்கினியர், 'நூலால் வரிந்து புனையப்பட்ட பந்தும் பாவையும் அறுப்பாரின்மையின் தூங்கியே விடும்படி' என்று உரை கூறி, 'பகைவரை மகளிராக்கி அவர் கொண்டு விளையாடுதற்குத் தூக்கின' என்று

மேலும் ஒரு உரை விளக்கத்தினைக் கூறுகின்றார். இவ்வடிக்கு வை.மு.கோவும், பொ.வே.சோமசுந்தரனாரும், 'நூலால் வரிந்து புனையப்பட்ட பந்தும் பாவையும் அறுப்பாரின்மையின் தூங்கியே கிடப்ப' என்று பொருள் கூறுகின்றனர். "பண்டைக் காலத்தில் மன்னர்கள் பகைவரைப் பொறுதற் பொருட்டுத் தம்மரண்மனை முற்றத்தே கொடியுயர்தக அதன் அருகே பந்தையும் பாவையையும் தூங்கவிடுதலின் கருத்து, எம்மை வெல்லும் ஆண்மையாளர் யாருமிலர்; எம்பகைவரை யாம் பெண்டிர்போலக் கருதுகின்றோம். ஆண்மையாளர் உளரேல் இவற்றை அறுமின் என்னும் குறிப்பே என்றும் அறியலாம்"[75] என்பர்.

***"பந்தும் பாவையும் பசுவரிப் புட்டிலும்***
***என்றிவை பலவுஞ் சென்று சென்றெறியும்***
***முந்தை மகளிரை இயற்றை"[76] (தொல்.புறத்.12:3)***

என்றும்,

***"பகைவரைப் பாவை மாரெனத் தொப்பப் பந்தொடு***
***பாவைக டூங்கித்***
***தகைசிறி தறியா வாயில்சா னாஞ்சிற் றடப்பெரு நொச்சியும்"[77]***
***(திருநாகை-திருநகர-90)***

என்ற சான்றோர்கள் கூற்றினாலும் அறியமுடிகிறது.

**வசிந்து**

**"சுடர் விடுபு வசிந்து வாங்குதோள்" *(முருகு.106)***

என்ற அடியிலுள்ள 'வசிந்து' என்பதற்கு நச்சினார்க்கினியர் வை.மு.கோ., பொ.வே.சேமசுந்தரனார் மூவரும், 'சுடரையுடைய படைக்கலன்களை யெறிந்து பகைவர் மார்பைப் பிளந்து அவற்றை வாங்கு தோள்' என்று உரை கூறுகின்றார். இவற்றிற்கு நச்சினார்க்கினியர் 'வசிந்தென்பதற்குப் படைக்கலன்களால் வடுப்பட்டென்று பொருளுரைத்தல் இறைவனாதலிற் பொருந்தாது' என்று மேலும் விளக்குகின்றார்.

**ஒரு கை மார்பினோடு விளங்க**

**“ஒருகை *மார்போடு விளங்க*” (*முருகு.111*)**

என்ற அடிக்கு, ‘நச்சினார்க்கினியர், வை.மு.கோ., பொ.வே.சோமசுந்தரனார் மூவரும்,’ ஒருகை முனிவர்க்குத் தத்துவங்களைக்கூறி உரையிறந்த பொருளை உணர்த்தும் காலத்துத்திருமார்போடு விளங்கா நிற்ப என்று பொருள் விளக்குகின்றனர். மேலும், “இறைவன் மோனமுத்திரையைத் தானாய்த் தானாயேயிருந்து காட்ட ஊமைத் தசும்புள் நீர் நிறைந்தாற்போல ஆனந்தமயமான ஒளி மாணாக்கர்க்கு நிறைதலின் அதற்குரிய மோன முத்திரை கூறிற்று”[78] என்ற நச்சினார்க்கினியரின் அரிய விளக்கத்தினையும் அறியமுடிகிறது.

**மானின் உரிவை**

***“.......... மானின்***

***உரிவை தைஇய வூன்கெடு மார்பின்” (முருகு.128-129)***

என்ற அடியிலுள்ள, ‘மானின் உரிவை’ என்பதற்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோவும் ‘கிருட்டினாசினம் போர்த்த’ என்ற உரை விளக்குகின்றனர். பொ.வே.சோமசுந்தரனார் ‘கருமானின் தோல் போர்த்த’ என்று பொருள் கூறுகின்றார். “கருமானின் தோலை முனிவர் போர்த்துக்கோடல் வழக்கம். இதனைக் கிருட்டிணாசனம் என்பர் வடநூலார். நீர்பலகால் என்ற வெண்பாவில் தோலுடையா”[79] என்று வருதலாலும் உணர்க என்று பொருள் கூறுகின்றார். இவற்றின்வழி வடநூல் புலமையும் நச்சினார்க்கினியரிடம் இருந்தமைப் புலனாகிறது.

**மாசில் தூவுடை**

***“புகைமுகந்தன்ன மாசில் தூவுடை” (முருகு.138)***

‘மாசில் தூவுடை’ என்பதற்கு நச்சினார்க்கினியர், ‘தெய்வத் தன்மையால் அழுக்கேறாத உடை’ என்று பொருள் கூறுகின்றார். வை.மு.கோவும், பொ.வே.சோமசுந்தரனாரும், ‘அழுக்கேறாத தூய உடையினையும்’ என்று

உரை விளக்குகின்றனர். இவற்றின் வழி நச்சினார்க்கினியர் கடவுள் பற்று அதிகம் உடையவர் என்பதனை அறியமுடிகிறது.

**தலை தந்து**

> ***"………. தலைதந்து***
> ***குன்றுதோறு ஆடலும்"   (முருகு.216-217)***

இவ்வடிகளில் உள்ள 'தலைதந்து' என்பதற்கு நச்சினார்க்கினியர் முதற்கை கொடுத்து என்று உரை விளக்குகின்றார். வை.மு.கோவும், பொ.வே.சோமசுந்தரனாரும் 'இருப்பிடம் கொடுத்து' என்று பொருள் கூறுகின்றனர்.

**கந்துடை நிலை**

> ***"கந்துடை நிலையினும்"   (முருகு.226)***

என்பதற்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோவும், 'ஆதீண்டு குற்றியையுடைய இடம்' என்று பொருள் கூறுகின்றனர். பொ.வே.சோமசுந்தரனார், 'திருவருட் குறியாக நடப்பட்ட தறி இடம்' என்று உரை கூறுகின்றார். மேலும், கந்துடை நிலை என்றது, இறைவன் அருட்குறியாகக் கல் தறி நட்டிருக்கும் இடத்தை, பண்டைக் காலத்தே ஊர்களில் இறைவணக்கம் செய்தற் பொருட்டுக் கல்தறி நட்டு அதனை வணங்கி வந்தனர். அக்கல்தறியே பிற்றை நாள் சிவலிங்க வுருவமாகக் கொள்ளப்பட்டதென்றறிக. இத்தகைய கடவுள் தறியைப் பொதியிலிடத்து நட்டனர் என்பதையும், அக்கந்துருவினை மலர் முதலியவற்றால் ஒப்பனை செய்து அதன்முன் மெழுக்கிட்டு விளக்கேற்றி, ஊர் மக்கள் வணங்கினர் என்பதையும்,

> ***"கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி***
> ***அந்தி மாட்டிய நந்தா விளக்கின்***
> ***மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ***
> ***வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியல்"[80]   (பட்டினப்.249-)***

எனவரும் அடிகளாலும் உணரலாம் என்று பொ.வே.சோமசுந்தரனார் கந்துடை நிலைக்கு விளக்கம் தருகின்றார். பட்டினப்பாலையில் இடம்பெற்றுள்ள

'கந்துடை' என்பதற்கு நச்சினார்க்கினியர் 'தெய்வம் உரையும் தறி' என்று பொருள் கூறுகின்றார். இவற்றின் வழி இவர் காலத்திலும் கந்துடை என்பதற்குத் தெய்வம் உறையும் இடம் பீடமாக வழங்கப்பட்டிருப்பதனை அறியமுடிகிறது.

**குடந்தம்**

**"குடந்தம்பட்டு"** ***(முருகு.229)***

என்பதற்கு, நச்சினார்க்கினியர், வை.மு.கோ., பொ.வே.சோமசுந்தரனார் ஆகிய மூவரும் 'வழிபட்டு' என்று பொருள் கூறுகின்றனர். நச்சினார்க்கினியர் இதற்கு மேலும் ஒரு விளக்கத்தினை, "குடவென்பது தடவென்பது போல வளைவை உணர்த்துவதோர் உரிச்சொல்லாகலின், அதனடியாகப் பிறந்த பெயருமாம்"[81] என்று குறிப்பிடுகின்றார். இவற்றின் வழி இலக்கணத்தோடு பொருந்திச் சொற்களை விளக்கும் தன்மை புலனாகிறது.

**கடன் கழித்தல்**

***"காடுறை கடவுட்கடன் கழிப்பிய பின்றை"*** ***(பொருநர்.52)***

இவ்வழியிலுள்ள, 'கடன் கழிப்பிய' என்பதற்குக் 'காட்டின் கண்ணே தங்குகின்ற தெய்வத்திற்கு மனமகிழ்ச்சியாகச் செய்யும் முறைமைகளைச் செய்து' என்று நச்சினார்க்கினியர், வை.மு.கோ., பொ.வே.சோமசுந்தரனார் மூவரும் பொருள் கூறுகின்றனர். இதற்கு நச்சினார்க்கினியர் 'தடாரியை வாசித்தல்' என்று உரை விளக்குகின்றார். இவற்றின் வழி காட்டிலே தங்குகின்ற தெய்வத்திற்கு மனமகிழ்ச்சி செய்யும் பொருட்டுத் தடாரிப்பண் வாசிக்கும் வழக்கம் இருந்தமையை வெளிப்படுத்துகின்றார்.

**நிரல் அமை**

**"விரலென நிமிர்ந்த நிரலமை புழுக்கல்"** ***(பொருநர்.114)***

இவ்வடியில் இடம்பெற்றுள் 'நிரலமை' என்பதற்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோவும், 'விரலென்னும்படி நெடுகின ஒன்றோடொன்று சேராத சோற்றையும்' என்று பொருள் கூறுகின்றனர். பொ.வே.சோமசுந்தரனர்

‘விரலென்னும்படி நெடுகின அளவொப்புமையமைந்த சோற்றையும்’ என்று விளக்குகின்றார். இங்கு ‘நிரலமை’ என்றற்கு ‘ஒன்றோடொன்று சேராத சோறு’ என்ற பொருளே பொருத்தமானதாக அமைகின்றது. வடித்த சோறு ஒன்றோரென்று சேராமல் தனித்தனியாகவே காணப்படும். ஆதலால் நச்சினார்க்கினியர் இவ்வாறு உரை விளக்கம் தந்திருக்கக்கூடும் எனலாம்.

**பூஞ்சுமடு**

**“புகர் வாய் குழிசி பூஞ்சுமடு இரீஇ”** ***(பெரும்பாண்.159)***

இவ்வடியிலுள்ள ‘பூஞ்சுமடு’ என்பதற்கு நச்சினார்க்கினியர், ‘பூவாற் செய்த சுமடு’ என்றும், வை.மு.கோ. ‘அழகிய சுமடு’ என்றும், பொ.வே.சோமசுந்தரனார், ‘மெல்லிய சுமடு’ என்றும் பொருள் கூறுகின்றனர். பூக்களால் சுமடு செய்து தலையில் பொருள்கள் கொண்டு செல்லும் வழக்கம் இன்று பல சிற்றூர்களில் காணப்படுகின்றது. ஆதலால் நச்சினார்க்கினியர் காலத்தில் இந்நிலை வழக்கத்தில் இருந்தமைப் புலனாகிறது.

**கருநாகு**

**“எருமை நல்ஆன் கருநாகு பெறூஉம்”** ***(பெரும்பாண்.165)***

என்ற அடியிலுள்ள ‘கருநாகு’ என்பதற்கு நச்சினார்க்கினியரும் வை.மு.கோவும், ‘கரிய எருமை நாகினையும்’ என்று உரை விளக்குகின்றனர். பொ.வே.சோமசுந்தரனார் ‘எருமையினையும் அவையிற்றின் கருவாகியக் கன்றுகளையும்’ என்று பொருள் கூறுகின்றார். இங்கு நச்சினார்க்கினியரும் வை.மு.கோவும் கருமை நிறத்தையுடைய எருமைக்கன்று என்று பொருள் கூறுதலே பொருத்தமுடையதாக இருக்கின்றது. எருமை கரிய நிறமுடையதாகக் காணப்படுதலால் இவ்வாறு உரை வரைந்திருக்கக்கூடும்.

**மேம்பால்**

**“மேம்பால் உரைத்த ஓரி”** ***(பெரும்பாண்.172)***

இவ்வடியிலுள்ள ‘மேம்பால்’ என்பதற்கு நச்சினார்க்கினியர், ‘எல்லா மனமும் பொருந்தும் பசுக்கறந்த பாற்கையைத்தடவின மயிரினையும்’ என்று உரை

கூறுகின்றார். வை.மு.கோ. ‘பலரும் விரும்புகின்ற பசுக்கறந்த பாற்கையைத் தடவின மயிரினையும்’ என்று பொருள் கூறுகின்றார். பொ.வே.சோமசுந்தரனார், ‘ஏனைப் பாலினும் மேன்மையடைய ஆன்பாலைத் தடவிய மயிரினையும்’ என்று பொருள் விளக்குகின்றார். இவற்றுள் வை.மு.கோ. கூறுகின்ற உரை விளக்கம் பொருத்தமானதாக அமைகின்றது. இவரின் உரைக்கு அரணாக “ரா.இராகவையங்கார் ‘மேம்பால்’ என்பதனை ‘வேம்பால்’ என்று பாடம் கொண்டு ‘விரும்பும்பால்’”[12] என்று பொருள் கூறுகின்றார்.

**பஞ்சாய் கோரை**

**“பஞ்சாய்க் கோரை பல்லிற் சவட்டி” (பெரும்பாண்.217)**

இவ்வடியில் இடம்பெற்றுள்ள ‘பஞ்சாய்க் கோரை’ என்பதற்கு நச்சினார்க்கினியர் வை.மு.கோ., பொ.வே.சோமசுந்தரனார் ஆகிய மூவரும் ‘தண்டானாகிய கோரை’ என்று உரை கூறுகின்றனர். சங்க காலத்தில் பஞ்சாய்க் கோரை என்பது நச்சினார்க்கினியர் காலத்திலும் அதற்குப் பிற்பட்ட காலத்திலும் ‘தண்டான் கோரை’ என்று வழங்கப்பட்டிருத்தலை அறியமுடிகிறது.

**வெண்கோடு**

**“வேழம் நிரைத்து வெண்கோடு விரைஇத்” (பெரும்பாண்.263)**

‘வெண்கோடு’ என்பதற்கு நச்சினார்க்கினியர், ‘வஞ்சி மரமும் காஞ்சி மரமுமாகிய வெள்ளிய கொம்பு’ என்று உரை கூறுகின்றார். வை.மு.கோவும், பொ.வே.சோமசுந்தரனாரும் ‘வெள்ளிய மரக் கொம்புகள்’ என்று பொருள் கூறுகின்றனர்.

**தனிமனை**

**“தண்டலை உழவர் தனிமனை சேட்பின்” (பெரும்பாண்.355)**

என்ற அடியிலுள்ள ‘தனிமனை’ என்பதற்கு நச்சினார்க்கினியர் ஒப்பில்லாத மனை என்று பொருள் கூறியுள்ளார். வை.மு.கோ. தனிப்பட்டுள்ள அல்லது ஒப்பில்லாத மனை என்று உரை கூறுகின்றார். பொ.வே.சோமசுந்தரனார்,

தோப்புக்குடிகளுடைய தனித்தனியாக 'அமைந்த மனை' என்று உரை விளக்குகின்றார். "இவர்கள் தென்னந்தோப்புகளை உழுது பயன்படுத்தும் தோழிலுடையர் ஆதல் பற்றி மருதநில மாக்களாகிய உழவரல்லர் எனத் தெரிந்தோதுவார் தண்டலை உழவர் என்றார். இத்தண்டலை உழவரின் தனிமனைகளைக் கடற்கரையருகே உள்ள தெங்கந் தோட்டங்களில் இன்றும் காணலாம்"[83] என்று நச்சினார்க்கினியர் கூறியுள்ள உரை விளக்கத்தினை பொ.வே.சோமசுந்தரனார் தனது உரை நூலில் விளக்கிக் கூறுகின்றார். இவற்றின்வழி தென்னந்தோப்புகளில் இம்மனைகள் இன்றும் காணப்படுவதை அறியமுடிகிறது.

**பொன் பூப்ப**

**"நயந்தோர் தேஎ நன்பொன் பூப்ப"** ***(பெரும்பாண்.424)***

இவ்வடியிலுள்ள 'பொன்பூப்ப' என்பதற்கு நச்சினார்க்கினியரும் வை.மு.கோவும், 'தன்னை விரும்பி வந்தோர் தேசம் திருமடந்தையார் பொலிவு பெற்றிருப்ப' என்று உரை கூறுகின்றனர். பொ.வே.சோமசுந்தரனார், 'தன்னை விரும்பியிருந்தோர் நாடுகள் நன்றாகிய பொன்பூத்துத் திகழா நிற்பவும்' என்று உரை கூறுகின்றார். இவற்றின் வழி தெய்வத்தன்மையால் நாடு செல்வச் செழிப்புடன் சிறந்து விளங்கும் என்ற நம்பிக்கை வெளிப்படுகின்றது.

**இடைத்தெரிந்து உணரும்**

**"இடைத்தெரிந் துணரும் இருதீர் காட்சிக்"** ***(பெரும்பாண்.445)***

இவற்றுள் 'இடைத்தெரிந்து உணரும்' என்பதற்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோவும், 'நடுநிலையை ஆராய்ந்து அறியும் மயக்கம் தீர்ந்த அறிவோடுகூடி' என்று பொருள் விளக்குகின்றனர். பொ.வே.சோமசுந்தரனார், 'தன்னால் விரும்பப்பட்டார் தனக்குக் கூறாமலே அவருளந்தெரிந்து உணரா நின்ற மயக்கமற்ற நற்காட்சியை உடையனாய்' என்று உரை கூறுகின்றார்.

**பசலை**

**"சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்" (முல்லைப்.12)**

என்ற அடியிலுள்ள 'பசலை' என்பதற்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோவும், 'வருத்தத்தையுடைய கன்று' என்று உரை கூறுகின்றனர். பொ.வே.சோமசுந்தரனார், 'இளங்கன்று' என்று பொருள் விளக்குகின்றார். பாலுண்ணப்பெறாமல் பசியால் நின்ற வருந்துகின்ற கன்றாதலால், வருத்தத்தையுடைய கன்று என்று பொருள் கூறுதலே பொருத்தமானதாக அமைகின்றது.

**நிழத்திய**

**"நெடு நா ஒண் மணி நிழத்திய நடு நாள்" (முல்லைப்.50)**

இவ்வடியிலுள்ள 'நிழத்திய' என்பதற்கு நச்சினார்க்கினியர் 'எறிந்துவிட்ட' என்று பொருள் கூறி மேலும், 'கோயில் பணி மடங்கினால் மணியெரிந்துவிடுதல் இயல்பு' என்று பொருள் விளக்குகின்றார். வை.மு.கோ. 'அடிக்கப்பட்டு அடங்கிய' என்றும், பொ.வே.சோமசுந்தரனார் 'நுணுகிய' என்றும் பொருள் கூறுகின்றனர். மூவரும் சொல்லால் வேறுபடுகின்றனரே தவிர பொருள் ஒத்துக் காணப்படுகின்றது. நடுயாமத்தில் மணியின் ஓசை அடங்கிய நிலையினைக் கூறுதற்பொருட்டே இச்சொல் வழக்கினை கூறுகின்றனர். பொ.வே.சோமசுந்தரனார் தொல்காப்பியத்தினை அடிப்படையாகக் கொண்டு பொருள் விளக்கியுள்ளார்.

**"செய்தல் ஆய்தல் நிழத்தல்காஅய்**
**ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்" (தொல்.32)**

தொல்காப்பியர் 'நிழத்தல்' என்பதற்கு 'நுணுக்கம்' என்று விளக்குகின்றார்.

**பொழுது அளந்து அறியும் பொய்யா மாக்கள்**

**"பொழு அளந்து அறியும் பொய்யா மாக்கள்" (முல்லைப்.55)**

வை.மு.கோ. இவ்வடிக்கு 'இவ்வளவாயிற்றென்று நாழிகை வட்டிலைக் கொண்டு அளந்தறியும் தன்மையுள்ள தனக்கு ஏற்பட்ட தொழிலைத் தவறாமல்

செய்யவல்ல பொழுதறியுமவர்' என்று பொருள் கூறுகின்றார். பொ.வே.சோமசுந்தரனார் 'நாழிகையை அளந்து இத்துணையென்று அறியும் பொய்த்த லில்லாத நாழிகைக் கணக்கர்' என்று உரை விளக்குகின்றார். நச்சினார்க்கினியர் 'மாக்கள் பொழுது அளந்து அறியும் பொய்யா காண்கையர்' என்று அடியினை மாற்றி 'அறிவில்லாதோருடைய வாழ்நாளை இத்துணையென்று அளந்தறியும் பொய்யாத காட்சியையுடையார்' என்று வலிந்து பொருள் கூறுகின்றார். பொழுதறிந்து நுவலும் நாழிகைக் கணக்கரும் அதனை அறிகருவியான நாழிழை வட்டிலும் பண்டைக் காலத்தில் இருந்தமையை,

> **"பூமென் கணையும் பொருகிலையுங் கைக்கொண்டு**
> **காமன் திரியும் கருவூரா யாமங்கள்**
> **ஒன்றுபோ யொன்றுபோ யொன்றுடோய் நாழிகையும்**
> **ஒன்றுபோ யொன்றுபோ யொன்று" (சிலம்பு.5:49)**

என்றும்,

> **"குறுநீர் கன்னலின் யாமங் கொள்பவர்" (மணி.7:64-65)**

என்றும்,

> **"குறுநீர்க் கன்னல் எண்ணுத லல்லது**
> **கதிர்மருங் கறியா தஞ்சுவரப் பாஆய்" (அகம்.43:6-7)**

என்ற அடிகளாலும் அறியமுடிகிறது.

### இரவு செய்யும் வெள் திங்கள்

> **"இரவு செய்யும் வெள் திங்கள்" (மதுரைக்.8)**

என்ற அடிக்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோவும் 'இராப்பொழுதை யுண்டாக்கும் வெள்ளிய மதியும்' என்று பொருள் கூறுகின்றனர். பொ.வே.சோமசுந்தரனர், 'இராப்பொழுதின்கண் ஒளி செய்யும்வெண்மையான திங்களும்' என்று உரை கூறுகின்றார். 'பகற்செய் செஞ்ஞாயிறு' என்பதற்கேற்ப 'இரவுச் செய்யும் வெண்டிங்கள்' என்று மருதனார் கூறியமையின் இரண்டுக்கும் ஒரு நிகராகப் பொருள் கொள்ளல் நேரிதென ஆசிரியர் நச்சினார்க்கினியர்

‘இரவுச் செய்யும்’, ‘இராப்பொழுதை உண்டாக்கும்’ என்று உரை விளக்குகின்றார் என்பர்.”[84] வை.மு.கோ. நச்சினார்க்கினியர் மருதனாரின் கவி நயத்திற்கேற்ப பொருள் கூறுகின்றார். ஆனால் பொ.வே.சோமசுந்தரனார் ஏழாவது உருவினை விரித்து ‘இரவின்கண் ஒளி செய்யும் வெண்மையான திங்கள்’ என்று பொருள் கொள்ளுதலே பொருத்தமானதாக அமைகின்றது. ஏனென்றால் நிலவு என்பது எப்பொழுதும் வானில் இருக்கக்கூடியது. இரவில் மட்டும் தான் அதன் நிறம் மாறி வெளிப்படையாகத் தெரிகின்றது. ஆதலால் பொ.வே.சோமசுந்தரனார் இரவின்கண் ஒளி செய்கின்ற வெண்மையான திங்கள் என்று உரை வரைந்திருக்கக்கூடும் எனலாம்.

**நிலம் தந்த பேருதவி**

**“நிலம் தந்த பேருதவி”** ***(மதுரைக்.60)***

என்ற தொடருக்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோவும், ‘நாட்டிலிருக்கின்ற அரசர் நிலங்களை யெல்லாங் கொண்ட பெரிய உதவியையும்’ என்று விளக்குகின்றனர். மேலும் நச்சினார்க்கினியர், ‘மலையும் காடும் அரனாக இருந்த அரசை அழித்த வலியாலே நாட்டிலிருக்கின்ற அரசர் தத்தம் நாடுகளை விட்டாரென்றதாம்’ என்று குறிப்பிடுகின்றார். பொ.வே.சோமசுந்தரனார், ‘இவ்வுலகத்தைத் திருத்திக் கொடுத்த பெரிய உதவியினையும்’ என்று உரை கூறுகின்றார். பாண்டியன் நெடுஞ்செழியனிடம் தோற்ற அரசர்கள் தத்தம் நிலங்களையெல்லாம் நெடுஞ்செழியனுக்குத் தந்த நிலையினை விளக்குதற்கே நச்சினார்க்கினியர் இவ்வாறு உரை விளக்கியிருக்கக்கூடும். “கொடுக்கப்பட்ட பொருள் ‘உதவி’ எனப்படுதலை, ‘உயர்ந்தவர்க்கு உதவிய உதவி’ என்ற கம்பன் வாக்காலும் அறியலாம் என்பர்”[90] வை.மு.கோ.

**நெல்லின் ஊர்**

***“சீர் சான்ற வுயர் நெல்லின்***
***ஊர்கொண்ட உயர் கொற்றவ”*** ***(மதுரைக்.87-88)***

இவ்வடிகளுக்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோவும், 'தலைமையமைந்த உயர்ந்த நெல்லின் பெயரைப் பெற்ற சாலியூரைக் கொண்ட உயர்ந்த வெற்றியையுடையவன்' என்று பொருள் கூறுகின்றனர். பொ.வே.சோமசுந்தரனார், 'நெல்லூரரைக் கைக்கொண்ட உயர்ந்த வெற்றியை உடையவன்' என்று உரை விளக்குகின்றார்.

**நிலத்து ஆற்றும் குழூஉப்புதவின்**

**"நிலத்து ஆற்றும் குழூஉப்புதவின்"** ***(மதுரைக்.165)***

என்ற அடிக்கு நச்சினார்க்கினியரும் வை.மு.கோவும், 'நிலத்து உள்ளாரை யெல்லாம் போக்கும் வாசல் காப்போருடைய வாசலின் கண்ணேயிருந்து' என்று உரை விளக்குகின்றனர். பொ.வே.சோமசுந்தரனார், 'நிலத்தின்கண்ணே நின்று தொழில் செய்கின்ற நிலையோடு கூடின கதவு' என்று பொருள் கூறுகின்றார். "கைப்பற்றிய நிலத்துள்ளாரையெல்லாம் வாசல் காப்பாரைக் கொண்டு வெளிப்போக்கினான் என்பது கருத்து என்பர் வை.மு.கோ."[85] நெடுஞ்செழியனின் ஏவலால் பகைவர் நாடுகள் பாழ்பட்டன. ஆதலால் ஊரில் உள்ளோரை யெல்லாம் வாசல் காப்போன் வெளியேற்றினான் என்ற உரை விளக்கம் இவ்விடத்தில் பொருத்தமுடையதாக அமைகின்றது எனலாம்.

**திண்ணிய போர்க்கதவின்**

**"நெய்படக் கரிந்த தின்போர்க் கதவின்"** ***(மதுரைக்.354)***

என்ற அடியிலுள்ள 'திண்போர்க் கதவின்' என்றதற்கு நச்சினார்க்கினியரும் வை.மு.கோவும், 'திண்ணிய செருவினையுடைய கதவினையும்' என்று உரை கூறுகின்றனர். பொ.வே.சோமசுந்தரனார் 'திண்ணிய வாய்ப் பொருத்தப்பட்ட கதவு' என்று பொருள் விளக்குகின்றார். 'போர்க் கதவு' என்பது பலகைகள் பல சேர்தலையுடையக் கதவு என்பர் வை.மு.கோ."[86]

**"போரார் கதவம்"** ***(கலித்.90)***

என்பதற்குப் 'பலகை பொருத நிறைந்த கதவம்' என நச்சினார்க்கினியர் உரை விளக்குகின்றார்.

**“போரமைப்புணர்ப்பின் நெடுநிலை” (நெடுநல்.84)**

என்ற அடிக்கு “பல மரங்களும் தம்மிற் கிட்டுதலமைந்த கூட்டத்தினையுடைய நெடுநிலை”[87] என்று உரை கூறுகின்றார். இவற்றின் வழி பகைவர் தம்மை எளிதில் தாக்க முடியாத வண்ணம் திண்ணிய கதவுகளால் வீடுகள் அமைக்கப்பட்டிருத்தலையும், மேலும் நச்சினார்க்கினியர் செருவினையுடைய கதவு என்று உரை கூறியதும் இதன் பொருட்டே என்பதும் பெறப்படுகின்றது.

**வானம் மூழ்கி**

**“வகை பெற எழுந்து வானம் மூழ்கி” (மதுரைக்.357)**

இவ்வடியிலுள்ள வானம் மூழ்கி என்றதற்கு நச்சினார்க்கினியர் ‘தேவருலகிலே சென்று’ என்று பொருள் கூறுகின்றார். வை.மு.கோவும், பொ.வே.சோமசுந்தரனாரும், ‘ஆகாயத்தே சென்று’ என்பதே இயல்பான பொருள். ஆனால் நச்சினார்க்கினியர் ‘தேவருலகிலே சென்று’ என்று வேண்டாத பொருள் கூறுகின்றார். இவற்றின் வழி இவரின் வைதீக சமயச் சார்புத் தன்மை வெளிப்படுகின்றது.

**அங்கண் மால் விசும்பு**

**“அங்கண்மால் விசும்பு” (மதுரைக்.384)**

என்ற அடிக்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோ.வும் ‘அழகிய இடங்களைத் தன்னிடத்தேயுடைய பெரிய ஆகாயம்’ என்று பொருள் கூறுகின்றனர். பொ.வே.சோமசுந்தரனார், ‘அழகிய ஞாயிறாகிய கண்ணையுடைய ஆகாயம்’ என்று உரை விளக்குகின்றார். மேலும் நச்சினார்க்கினியர் ‘அங்கண்மால் விசும்பு’ என்பதற்கு, ‘தேவருலகம் முதலியவற்றைத் தன்னிடத்தேயுடைமையின்’ என்று பொருள் கூறுகின்றார். பெரும்பாலும் வானுலகம் என்று வருமிடங்களில் எல்லாம் நச்சினார்க்கினியர் ‘தேவர் உலகம்’ என்று வேண்டாத பொருள் வலிந்து குறிப்பிடுகின்றார். அவ்வாறே இவ்விடத்தில் பொருள் வலிந்து கூறியிருக்கக் கூடும். அழகிய ஞாயிறாகிய கண்ணையுடைய பெரிய வானம் என்ற கருத்தினை,

**“வான் கண் விழியா வைகறை யாம்” (சிலம்பு.10:1)**

என்று சிலப்பதிகாரமும் குறிப்பிடுகின்றது.

**இடுமயிர்**

**“கொடிபடு சுவல இடுமயிர்ப் புரவியும்” (மதுரைக்.391)**

இவ்வடியிலுள்ள ‘இடுமயிர்’ என்பதற்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோவும், ‘கிட்டவாசங்கள்’ என்று உரை கூறுகின்றனர். பொ.வே.சோமசுந்தரனார், ‘இடுமயிர்’ என்று பொருள் விளக்குகின்றார். இவற்றின் வழி ‘இடுமயிர்’ என்பதற்கு நச்சினார்க்கினியர் காலத்தில் ‘இட்ட வாசங்கள்’ என வழங்கியிருப்பதனை அறியமுடிகிறது. ஆனால் ‘இடுமயிர்’ என்பது இன்றும் வழக்கில் காணப்படுகின்றது. பெண்கள் ஒப்பனை செய்யும் பொருட்டுக் தலையில் ‘இடுமயிர்’ கட்டிக் கொள்வது வழகினுள் உள்ளது.

**வரைவின் மகளிர்: (கொண்டி மகளிர்)**

**“நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்” (மதுரைக்.584)**

இவ்வடியிலுள்ள ‘கொண்டி மகளிர்’ என்பதற்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோவும், ‘பரத்தையர்’ என்று விளக்குகின்றனர். மேலும் நச்சினார்க்கினியர் ‘அங்ஙனம் விளையாடி வசீகரித்து உறவு கொண்டு பொருள் வாங்குதல் அவர்க்கியல்பு’ என்று கொண்டி மகளிரின் இயல்பினையும் சுட்டுகின்றார். பொ.வே.சோமசுந்தரனார் ‘கொண்டி மகளிர்’ என்பதற்கு, ‘வரைவின் மகளிர்’ என்று உரை கூறுகின்றார். ‘கொண்டி மகளிர்’ என்பது பரத்தையரைக் குறித்து வந்தமை பற்றி,

**“நறுந்தா துண்டு நயனில்கலை**
**வறும்பூத்துறக்கும்வண்டு போல்குவம்” (மணி.18:19-20)**

என்றும்,

**“பயன்பல வாங்கி வண்டிற் றுறக்கும்**
**கொண்டி மகளிரை” (மணி.18:108-109)**

என்ற மணிமேகலை அடிகளாலும் அறியமுடிகிறது.

**கூளியர்**

***"காய்சின முன்பிற் கடுங்கட் கூளியர்" (மதுரைக்.691)***

இவ்வடியிலுள்ள 'கூளியர்' என்பதற்கு நச்சினார்க்கினியர், வை.மு.கோ, பொ.வே.சோமசுந்தரனார் மூவரும் 'ஆயக்கரையில் இருந்த வேட்டுவர்' என்று பொருள் கூறுகின்றனர். மேலும், பொ.வே.சோமசுந்தரனார், 'கூளியர் மறவர், ஆயக்கரை, ஆய்த்துறை, சுங்கம் கொள்ளுமிடம் நாட்டின் எல்லையில் இருக்கும் படைஞர்'[88] என்று பொருள் விளக்குகின்றார். நச்சினார்க்கினியர் கூறிய 'வேட்டுவர்' என்ற பொருளினையே மற்ற இருவரும் கூறுகின்றனர். இவற்றின்வழி நச்சினார்க்கினியர் காலத்தில் கூறப்பட்ட 'வேட்டுவர்' என்ற சொல்லே மற்ற இருவரின் காலத்திலும் வழக்கிலிருந்தமையை அறியமுடிகிறது.

**கொடுங்கோல்**

***"ஆர்கலி முனைஇய கொடுங்கோல் கோவலர்" (நெடுநல்.3)***

இவ்வடியிலுள்ள 'கொடுங்கோல்' என்பதற்குக் 'கொடிய கோல்' என்று நச்சினார்க்கினியரும், பொ.வே.சோமசுந்தரனாரும் பொருள் கூறுகின்றனர். வை.மு.கோ. 'வளைந்த கோல்' என்று உரை கூறுகின்றார். 'கொடுங்கோல்' என்பதற்கு ஆடு, மாடுகளுக்கு வருத்தத்தைச் செய்கின்ற கொடுமையான கோல் எனப் பொருள் கூறல் பொருந்தாது. கோவலர்கள் தான் வளர்க்கும் கால்நடைகளை வழிநடத்துதற் பொருட்டுக் குச்சியால் அவற்றை லேசாகத் தட்டுவரே அன்றி அவற்றை அடித்துத் துன்புறுத்துதலைச் செய்யார். இதேவேளை 'வளைந்த கோல்' எனப் பொருள் கொள்வோமாயின், கால்நடைகளுக்குத் தேவையான இலை, தழைகளைப் பறித்தற் பொருட்டுக் கோவலர்கள் 'தொரட்டி' எனப்படும் கோலைக் கையில் வைத்திருப்பதை அறியலாம். அவ்வளைந்த கோலை இன்றும் கால்நடை மெய்ப்போர் கைகளில் காணமுடிகிறது. எனவே கொடுங்கோல் என்பதற்குக் கொடிய கோல் என்பதைவிட 'வளைந்த கோல்' எனப் பொருள் கொள்ளல் பொருத்தமானதாக அமைகின்றது எனலாம். மேலும் சங்க இலக்கியங்களில்

‘கொடு’ எனும் சொல் வளைந்த எனும் பொருளில் வந்துள்ளமையும் இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

***“கொடுங்குழாய்! துறக்குநர்அல்லர்” (கலித்.13:26)***

***“ஒருங்கா வயத்தின் கொடுங்கேழ; கடுங்கண்” (கலித்.65:24)***

***“திண்தேர்க் கொடுஞ்சினைக்கையற்ற” (கலித்.85:18)***

***“கொடுங்கோல் மாடத்து நெடுமலைத்துவன்றி” (மலைபடு.110)***

***“குளிர்புரை கொடுங்காய் கொண்டன” (மலைபடு.110)***

என்ற அடிகளாலும் அறியமுடிகிறது.

**இனநிரை**

***“ஏறுஉடை யினநிரை வேறுபுலம் பரப்பி” (நெடுநல்.4)***

‘இனநிரை’ என்பதற்கு நச்சினார்க்கினியர் ‘இனமும் நிரையும்’ என உம்மைத் தொகையாகக் கொண்டு இனம் என்பது எருமையும் ஆடும் என்றும், நிரை என்பது பசுவையும் குறிப்பதாக உரை கூறுகின்றார். வை.மு.கோவும், பொ.வே.சோமசுந்தரனாரும் ‘தொகுதியாக’ உள்ள (எருமை, ஆடு, பசு) மூன்று நிரைகளையும் எனப் பொருள் கூறி பசுத்திறள், எருமைத்திரள், ஆட்டுத்திரள் என்ற இவை மூன்றும் நிரையெனப்படுதலால் ‘இனநிரை’ என்றார் என்று விளக்கம் அளித்துள்ளார்.

‘இனம்’ என்பதற்கு ‘எருமையும் ஆடும்’ என்று பொருள் கொள்வதற்கான இலக்கியச் சான்றுகள் பெரும்பாலும் காணப்படவில்லை. ‘இனம்’ என்பதற்குத் தொகுதி, கூட்டம் எனப் பொருள் கொள்வதற்கான இலக்கியச் சான்றுகள் சங்க இலக்கியங்களில் மிகுதியான அளவில் காணப்படுகின்றன. சான்றாக,

***“கழை வளர் சாரல் களிற்றினம் நடுங்க” (மதுரைக்.242)***

***“துணை பறை நிவக்கும் புள்ளினம் மான” (மலைபடு.55)***

***“இலங்கு ஏந்து மருப்பின் இனம்பிரி ஒருத்தல்” (மலைபடு.297)***

**“கல்லென்று இரட்ட புள்ளினம் ஒலிப்பு”   (குறிஞ்சிப்.228)**

என்ற அடிகளால் அறியமுடிகிறது.

**மாக்கள்**

**“முடலை யாக்கை முழுவலி மாக்கள்”   (நெடுநல்.32)**

இவ்வடியிலுள்ள ‘மாக்கள்’ என்பதற்கு நச்சினார்க்கினியரும், பொ.வே.சோமசுந்தரனாரும் ‘மிலேச்சர்’ என்று உரை கொண்டுள்ளனர். ‘மிலேச்சர்’ என்பதற்கு நச்சினார்க்கினியரின் உரையின் அருஞ்சொற் பொருள் அகராதியில் ‘கீழ்மக்கள்’ என்று பொருள் கூறப்பட்டுள்ளது.

நச்சினார்க்கினியர் ‘மிலேச்சர்’ என்ற சொல்லைக் கீழ்மக்கள் என்னும் பொருளில் கூறியிருப்பாரானால் அக்கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. கள்ளை அருந்திவிட்டுத் தெருக்களில் சுற்றித் திரிவதனால் அவ்வாறு கூறியிருப்பாராயின், சங்க காலத்தில் கள்ளுண்ணுதல் தவறான பழக்கமாகக் கருதப்படவில்லை. அரசர்களும், புலவர்களும் கூட கள் உண்டு மகிழ்ந்திருந்ததைச் சங்க இலக்கியங்கள் சுட்டும். இதனை,

**“சிறிகட் பெறினே எமக்கீயும் மன்னே**
**பெரியகட் பெறினே யாம்பாடத் தாம் மகிழ்ந்துண்ணும் ....”[89]**

என்னும் ஔவையாரின் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. குளிரின் தன்மையை விளக்கிக்கூறும் பொழுது கோவலர்கள் குளிரால் நடுங்கினர் என்பதையும், மாடங்கள் நிறைந்த பழைய ஊரில் வாழ்வோர் குளிரைத் தாங்கும் உடல் வலிமை கொண்டோராய் இருந்தனர் என்பதையும் உணர்த்துவதாகவே நெடுநல்வாடையின் சூழல் அமைகின்றது. எனவே இவ்விடத்தில் நச்சினார்க்கினியர் குறிப்பிடும் மிலேச்சர் என்பதற்கு ‘கீழ்மக்கள்’ என்றும் கருத்து பொருந்தாது எனலாம். கள்ளுண்ணுதலைச் சங்க காலத்தில் தவறான பழக்கமாகக் கருதவில்லை. ஆனால் நச்சினார்க்கினியர் காலத்தில் கள்ளுண்ணுதலைத் தவறான பழக்கமாகக் கொண்டிருந்தால் ‘கீழ்மக்கள்’ என்று உரை கூறியிருக்கக்கூடும்.

'மாக்கள்' என்பதற்கு 'மனிதர்' என உரை கொண்டுள்ளார் வை.மு.கோ. கீழ்மக்களாயினும் மேல்மக்களாயினும் அவர்களை 'மனிதர்' எனப் பொதுச் சொல்லால் குறிப்பது பொருத்தமானதாக அமைகின்றது. சங்க இலக்கியங்களில் 'மாக்கள்' என்னும் சொல் மனிதர்களைக் குறிப்பதாகப் பல இடங்களில் பயின்று வந்துள்ளது. சான்றாக,

**"தவம் செய்மாக்கள் தம் உடம்பு இடாஅது" (பொருநர்.91)**

**"முடலை யாக்கை முழுவலி மாக்கள் பெரும்" (பொருநர்.61)**

**"பூவும் புகையும் ஆயும் மாக்கள்" (மதுரைக்.515)**

**"நலைத்துறை வீழிஇய மதன் வழி மாக்கள்" (மலைபடு.280)**

என்ற அடிகளைச் சான்றாகக் குறிப்பிடலாம்.

**வெள்ளி வள்ளி**

**"வெள்ளி வள்ளி வீங்கிறைப் பணைத்தோள்" (நெடுநல்.36)**

'வெள்ளி வள்ளி' என்பதற்கு நச்சினார்க்கினியரும், பொ.வே.சோமசுந்தரனாரும் 'வெளுக்கப்பட்ட சங்கு வளையல்' என்று உரை குறிப்பிடுகின்றனர்.

'வெள்ளியால் இயன்ற வளை' எனப் பொருள் கொள்கிறார் வை.மு.கோ. சங்க காலத்தில் சங்கு வளையல்கள் மிகுதியான பயன்பாட்டில் இருந்ததைக் கருதி நச்சினார்க்கினியர் சங்கு வளையல் எனக் குறிப்பிட்டிருக்கலாம். எனவே பயன்பாட்டின் அடிப்படையில் பார்க்கும் பொழுது 'வெள்ளி வள்ளி' என்பதற்கு 'வெளுக்கப்பட்ட சங்கு வளையல்' என்னும் நச்சினார்க்கினியர் உரை பொருத்தமானதாக அமைகிறது எனலாம். இன்று சங்கு வளையல்கள் மருத்துவ நோக்கில் குழந்தைகளுக்கு மட்டும் அணியப்பெருகின்றன.

**வானுறநிவந்த**

**"வான் உற நிவந்த மேன்நிலை மருங்கின்" (நெடுநல்.60)**

'வானுறநிவந்த' என்பதற்கு நச்சினார்க்கினியர், 'தேவரூரைத் தீண்டும்படி உயர்ந்த மேலாம் நிலத்திடத்து' என்று உரை விளக்குகின்றார். வை.மு.கோவும்,

பொ.வே.சோமசுந்தரனாரும் 'வானத்தை அளாவ ஓங்கிய மேல் மாளிகை' என்று பொருள் கூறுகின்றனர். வை.மு.கோவும், பொ.வே.சோமசுந்தரனாரும் கூறிய கருத்தே இவ்விடத்தில் பொருத்தமானதாக அமைகின்றது. கட்டடங்கள் இருந்த நிலையினை உணர்த்துவதாக இவ்வடி குறிக்கப்பெறுகின்றது. நச்சினார்க்கினியரின் உரையில் வைதீக சமயச் சார்பு வெளிப்படுகின்றது.

**விடர்**

***"அருவிடர் அமைந்த களிதரு புணர்ச்சி" (குறிஞ்சிப்.212)***

இவ்வடியிலுள்ள விடர் என்பதற்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோவும், 'அரிய முழைஞ்சுகளிடத்தே' என்று உரை கொண்டுள்ளனர். பொ.வே.சோமசுந்தரனார், 'அரியகாடு' என்று பொருள் கூறுகின்றார். சங்க இலக்கியங்களில் 'விடர்' எனும் சொல் முழைஞ்சினைக் குறிப்பதாகப் பல இடங்களில் பயின்று வந்துள்ளது. சான்றாக,

***"பெருங்கல் விடரளைச் செறிய" (முருகு.314)***

***"கம சூழ் கோடை விடர் அகம் முகந்து" (மதுரைக்.308)***

***"கூவல் அன்ன விடரகம் புகுமின்" (மலைபடு.266)***

இவற்றின் வழிச் சங்க காலத்தில் கூறப்பட்ட விடர் என்ற சொல் நச்சினார்க்கினியர் காலத்தில் முழைஞ்சு என்று கூறப்பட்டுள்ளது. 'விடர்', 'முழைஞ்சு' என்பன 'இடம்' என்ற பொருளை உணர்த்துவதாகவே அமைந்துள்ளன.

**கொண்மூ**

***"மாமலை அணைந்த கொண்மூப் போலவும்" (பட்டினப்.95)***

என்ற அடியிலுள்ள 'கொண்மூ' என்பதற்கு நச்சினார்க்கினியர், 'செக்கர் வானம்' என்று பொருள் கொண்டுள்ளார். வை.மு.கோவும், பொ.வே.சோமசுந்தரனாரும் முகில் (வானம்) என்று பொருள் கூறுகின்றனர். 'கொண்மூ' என்பதற்கு 'வானம்' என்பதே இயல்பான பொருள். ஆனால் நச்சினார்க்கினியர் வலிந்து பொருள் கூறுகின்றார்.

**நிழத்தல்**

***"விளைபுனம் நிழத்தலில் கேழல் அஞ்சி"   (மலைபடு.195)***

இவ்வடியிலுள்ள 'நிழத்தல்' என்பதற்கு நச்சினார்க்கினியரும், வை.மு.கோவும் 'நொக்குதல்' என்று பொருள் கொண்டுள்ளனர். பொ.வே.சோமசுந்தரனார் 'அழித்தல்' என்று உரை கூறுகின்றார். 'நொக்குதல்' என்பது 'உண்டு குறையச் செய்தல்' ஆகும். இவர் காலத்தில் 'நொக்குதல்' என்னும் பொருளில் வழங்கியமையை அறியமுடிகிறது. குறிஞ்சிப்பாட்டில் 'அழித்தல்' எனும் பொருளிலே இச்சொல் வழங்கப்பட்டுள்ளதை,

**"சே மடிந்த பொழுதின் வாய்மடுத்து**
**இருபுனம் நிழத்தலில்"**   ***(குறிஞ்சிப்.155-156)***

எனும் அடிகளால் அறிய முடிகின்றது.

**கூப்பிடு கடக்கும்**

***"கூப்பிடு கடக்கும் கூர்நல் லம்பிற்"   (மலைபடு.421)***

என்ற அடியிலுள்ள 'கூப்பிடு கடக்கும்' என்பதற்கு நச்சினார்க்கினியர், 'கூப்பிடாத அவ்வெல்லையைக் கடவா நிற்கும்' என்று பொருள் கூறுகின்றார். வை.மு.கோ. 'கூப்பிடு செல்லக்கூடிய எல்லையையும் கடந்து நிற்கும் எனவே, கூப்பிடு செல்லக்கூடாது எனவும், அப்பாற்பட்ட அவ்வெல்லையையும் கடந்து நிற்கும்' என்று உரை விளக்குகின்றார். பொ.வே.சோமசுந்தரனார், 'கூப்பிடு தொலையையும் கடவா நிற்கும்' என்று பொருள் கொண்டுள்ளார்.

'கூப்பிடு' என்பது கூப்பிடு தூரம்; எனவே, ஓரெல்லை குறிப்பது; அதாவது ஒருவன் கூப்பிட்டாற் பிறன் கேட்குத் தூரம்; ஒரு குரோச வளவு என்றது திவாகரம். 'கடக்கும் என்ற சொல்லாற்றலால்', 'கூப்பிடாத அவ்வெல்லையையும் கடவா நிற்கும்' என்பது பெறப்படுதலின், நச்சினார்க்கினியர் அங்ஙனமே உரை வகுத்தார். அவர் 'கூவா நிற்கும்' என்றதும் 'கடவாநிற்கும்' என்ற பொருளதே"[95] என்று வை.மு.கோ., நச்சினார்க்கினயரின் உரையினை விளக்கிக் கூறுகின்றார்.

**உரை கிடைக்கப்பெறா இடங்கள்**

பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியரின் உரை கிடைக்கப்பெறாத இடங்களைக் கீழ்வருமாறு குறிப்பிடலாம்.

> ***"பயில்வுற்***
> ***றின்சுவை மூரற் பெருகுவீர்"*** ***(பெரும்பாண்.195-196)***
>
> ***"கீழ"*** ***(பெரும்பாண்.393)***
>
> ***"நெடுங்கையானை"*** ***(பெரும்பாண்.394)***
>
> ***"வெளிறு இல் கந்தின் கதன் அடக்கிய களிறு"(பெரும்பாண்.396)***
>
> ***"தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து"*** ***(நெடுநல்.90)***
>
> ***"சினைஇய வேந்தன் செல்சமங் கடுப்பத்***
> ***துணைஇய மாலை துன்னுதல் கானூஉ"*** ***(குறிஞ்சிப்.229-230)***
>
> ***"சிறுபூ நெருஞ்சியோ டறுகை பம்பி***
> ***யழல்வா யோரி யஞ்சுவரக் கதிர்ப்பவும்"*** ***(பட்டினப்.256-257)***
>
> ***"பலநா ணில்லாது நிலநாடு படர்மின்"*** ***(மலைபடு.192)***
>
> ***"உடம்புணர்பு யனைத்துங்"*** ***(மலைபடு.526)***
>
> ***"துவன்றி"*** ***(மலைபடு.529)***
>
> ***"வானத் தன்ன வளமலி யானைத்***
> ***தாதெருத் ததைந்த முற்ற முன்னி"*** ***(மலைபடு.530-531)***

முதலிய அடிகளுக்கு எந்தப் பிரதியிலும் நச்சினார்க்கினியரின் உரை கிடைக்கவில்லை. இவை அனைத்திற்கும் உ.வே.சாமிநாதையரின் உரையே கிடைக்கின்றது. இவரின் உரையினைப் பின்பற்றியே வை.மு.கோவும், பொ.வே.சோமசுந்தரனாரும் இவ்வடிகளுக்கு உரை எழுதியிருக்கக்கூடும் எனலாம். இவ்வடிகளுக்கு நச்சினார்க்கினியரின் உரை கிடைக்கப்பெறவில்லை என்பதை இவ்விருவரும் தாங்கள் எழுதிய உரைப் பகுதியில் குறிப்பிடவில்லை.

**தொகுப்புரை**

- ❖ நச்சினார்க்கினியரின் உரை தலைப்பிற்கு விளக்கம் கூறுதல், உவமைக்கு விளக்கம், சொற்கள் மற்றும் தொடர்களுக்கு விளக்கம் கூறுதல் என்ற மூன்று நிலைகளில் அமையப்பெறுகின்றது.
- ❖ பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியரின் உரை விளக்கம் இன்றேல் பல உவமை, சொற்கள், தொடர்கள் போன்றவற்றிற்குப் பொருள் புரியாமல் இருந்திருக்கக்கூடும்.
- ❖ நச்சினார்க்கினியர் பத்துப்பாட்டிற்குக் கொண்டு கூட்டு பொருள்கோள் முறையில் விளக்கம் கூறியுள்ளார். இக்கொண்டு கூட்டுமுறை விளக்கம் ஒரு சில இடங்களில் குழப்பத்தை விளைவித்திருப்பினும் பல இடங்களில் பொருத்தமுடையதாகவே அமையப்பெறுகின்றது.
- ❖ பத்துப்பாட்டு உரையில் தம் காலத்துப் பாடவேறுபாட்டினையும் சுட்டிக்காட்டி அதற்கான விளக்கத்தினையும் குறிப்பிட்டுள்ளார்.
- ❖ பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியரின் உரையினை முதல் உரையாகக் கூறுகின்றனர். ஆனால் தனது உரை நூலில் ‘கூறுவாருமுளர்’, ‘என்பாருமுளர்’, ‘உரைப்பாருமுளர்’ என்று கூறியிருப்பதிலிருந்து அவருரைக்கு முன் உரை இருந்திருக்கக்கூடும் என்பதை அறியமுடிகிறது.
- ❖ பிற உரையாசியரின் கருத்தினைக் கூறுகின்ற போது உரையாசிரியரின் பெயரினைக் குறிப்பிடவில்லை. நச்சினார்க்கினியரைப் போலவே கொண்டு கூட்டு முறையில் உரை எழுதியிருப்பதனை இவரது உரை வழி அறியமுடிகிறது.
- ❖ பத்துப்பாட்டிற்குப் பல உரைகள் தோன்றியிருப்பினும் ஆரம்பக் காலத்தில் நச்சினார்க்கினியரின் உரையினைத் தொடர்ந்து வை.மு.கோவும், பொ.வே.சோமசுந்தரனாரும் உரை இயற்றியுள்ளனர்.

- இவ்விருவரும் நச்சினார்க்கினியரின் உரையினைப் பின்பற்றி 'கொண்டு கூட்டு' முறையில் உரை எழுதாமல் நேர்பொருள் அளிக்கின்ற முறையில் உரை எழுதியுள்ளனர்.
- நச்சினார்க்கினியர் தம் கால வழக்க நிலைகளில் பயன்படுத்திய சொற்களையும் உரையில் பயன்படுத்தியுள்ளார். தம் சமயக் கொள்கைகளையும் வலிந்து பொருள் கூறுகின்றார்.

**சான்றெண் விளக்கம்**

1. பத்துப்பாட்டு நச்சினார்க்கினியர் (உ.ஆ.), ப.79.
2. தொல்காப்பியம் நச்சினார்க்கினியர் (உ.ஆ.), ப.
3. பத்துப்பாட்டு நச்சினார்க்கினியர் (உ.ஆ.), ப.272.
4. மேலது, ப.287.
5. மேலது, ப.338.
6. மேலது, ப.338.
7. மேலது, பக்.444-445.
8. மேலது, ப.481.
9. இரா.மோகன், உரை மரபுகள், ப.276.
10. பத்துப்பாட்டு, நச்சினார்க்கினியர் (உ.ஆ.), ப.530.
11. மேலது, ப.641.
12. மேலது, ப.32.
13. மேலது, ப.107.
14. மேலது, ப.149.
15. மேலது, ப.168.
16. மேலது, ப.172.
17. மேலது, ப.219.
18. மேலது, ப.230.
19. மேலது, ப.256.
20. மேலது, ப.273.
21. மேலது, ப.283.
22. மேலது, ப.347.
23. மேலது, ப.376.
24. மேலது, ப.425.
25. மேலது, ப.428.
26. மேலது, ப.429.

27. மேலது, பக்.498-499.

28. மேலது, ப.503.

29. மேலது, ப.504.

30. மேலது, ப.534.

31. மேலது, ப.540.

32. மேலது, ப.544.

33. மேலது, ப.547.

34. மேலது, ப.604.

35. மேலது, ப.610.

36. மேலது, ப.611.

37. மேலது, ப.618.

38. மேலது, ப.628.

39. மேலது, ப.640.

40. மேலது, ப.650.

41. மறைமலையடிகள், முல்லைப்பாட்டு, (உ.ஆ.), ப.58.

42. மு.அண்ணாமலை, நச்சினார்க்கினியர், ப.21.

43. பொ.வே.சோமசுந்தரனார், பத்துப்பாட்டு, ப.149.

44. மறைமலையடிகள், முல்லைப்பாட்டு, (உ.ஆ.), ப.84.

45. மேலது, பக்.84-86.

46. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு, ப.465.

47. மேலது, ப.555.

48. மேலது, ப.563.

49. இரா.மோகன், உரை மரபுகள், ப.281.

50. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு, ப.35.

51. மேலது, ப.102.

52. மேலது, ப.121.

53. மேலது, ப.160.

54. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு, ப.212.

55. மேலது, ப.216.

56. மேலது, ப.273.

57. மேலது, ப.340.

58. மேலது, ப.340.

59. மேலது, ப.459.

60. மேலது, ப.459.

61. மேலது, ப.459.

62. மேலது, ப.486.

63. மேலது, ப.487.

64. மேலது, ப.501.

65. மேலது, ப.510.

66. மேலது, ப.534.

67. மேலது, ப.551.

68. மேலது, ப.553.

69. மேலது, ப.607.

70. மேலது, ப.607.

71. மேலது, ப.628.

72. மேலது, ப.629.

73. மேலது, ப.629.

74. மேலது, ப.655.

75. பொ.வே.சோமசுந்தரனார், பத்துப்பாட்டு, ப.49.

76. தொல்காப்பியம் புறத்திணையியல், நூற்.12-15.

77. பொ.வே.சோமசுந்தரனார், பத்துப்பாட்டு, ப.49.

78. நச்சினார்க்கினியர், பத்துப்பாட்டு மூலமும், உரையும், ப.50.

79. பொ.வே.சோமசுந்தரனார், பத்துப்பாட்டு, ப.74.

80. மேலது, ப.105.

81. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு, ப.68.

82. பொ.வே.சோமசுந்தரனார், பத்துப்பாட்டு, ப.96.

83. மேலது, பக்.151-152.

84. வை.மு.கோ. (உ.ஆ.), பத்துப்பாட்டு, ப.6,

85. மேலது, ப.33.

86. மேலது, ப.67.

87. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), பத்துப்பாட்டு, ப.453.

88. பொ.வே.சோமசுந்தரனார், பத்துப்பாட்டு, ப.211.

89. இளங்குமரன் (உ.ஆ.), புறநானூறு, ப.375.

90. வை.மு.கோ. (உ.ஆ.), பத்துப்பாட்டு, ப.79.

## முடிவுரை

தாம் உரை எழுதிய பத்துப்பாட்டின் ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் 'மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று' எனும் தொடராலும் 'நவின்ற வாய்மை நச்சினார்க்கினியன்' என்று உரைச்சிறப்புப் பாயிரம் குறிப்பிடுவதாலும் அறிஞர்களின் கருத்துகளின் வழியும் இவ்வுரையாசிரியரின் இயற்பெயர் நச்சினார்க்கினியன் என்பதும், அந்தணர் மரபைச் சேர்ந்தவர், மதுரையைச் சார்ந்தவர் என்பதும் தெளிவாகிறது.

'தூய ஞானம் நிறைந்த சிவச்சுடர்' என்று இவரது உரைச் சிறப்புப் பாயிரம் இவரைக் குறிப்பிடுவதால் இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதை அறியமுடிகிறது.

சீவகசிந்தாமணி உரையில் சூடாமணி நிகண்டின் கருத்தினைக் குறிப்பிட்டுள்ளார். சூடாமணி நிகண்டின் காலம் கி.பி.14 ஆம் நூற்றாண்டாகும். இவற்றின் வழி நச்சினார்க்கினியரின் காலம் கி.பி.14 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி 15 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி எனத் துணியலாம்.

இவரின் உரைச்சிறப்புப்பாயிரம் தொல்காப்பியம், கலித்தொகை, பத்துப்பாட்டு, குறுந்தொகை இருபது பாடல்கள், சீவகசிந்தாமணி ஆகிய நூல்களுக்கு உரை இயற்றியுள்ளதாகக் குறிப்பிடுகின்றது.

நச்சினார்க்கினியர் முதலில் சீவகசிந்தாமணிக்கு உரை எழுதி அதனை சைனர்கள் மறுக்க; பின் தொல்காப்பியத்திற்கு உரை இயற்றினார் என்பதை இவரது உரையின் வழி அறியமுடிகிறது. இதற்கு உ.வே.சாமிநாதையர் கூறும் கருத்துப் பொருத்தமுடையதாக அமைகின்றது.

நச்சினார்க்கினியர் மாணவர்களுக்கு எளிதில் புரியும் வண்ணம் பல்வேறு வகையான இலக்கியங்களுக்கும், இலக்கணத்துக்கும் விளக்கம் எழுதி தனது ஆசிரியப் பணியைச் செம்மையான முறையில் செய்துள்ளார். மேலும்,

தன் வாழ்நாள் முழுவதும் உரை எழுதும் பணியினை மேற்கொண்டிருந்தார் என்பதும் தெளிவாகிறது.

சமூகம் என்பது மக்கள் தொகுதி. அவர்களின் நோக்கம், தேவை, பழக்க வழக்கம், நம்பிக்கை, பண்பாடு, கலாச்சாரம், மற்றும் மனித உறவுகள், கல்வி, மதம், சாதி, மொழி, இனம் அனைத்தும் உள்ளடங்கிய நிலையமாகக் கருதலாம்.

மன்னர்கள் அக்காலத்தில் தம் பிறந்த நாளைச் சிறப்பாகக் கொண்டாடியுள்ளனர். அரசர்கள் படைத்தலைவர்க்கு ஏனாதி பட்டம் வழங்கிச் சிறப்புச் செய்துள்ளனர். அரசனின் அவையில் பல சான்றோரும் கூடி தருக்கம் நிகழ்த்தியுள்ளனர் என்பதை இவரது உரையின் வழி அறியமுடிகிறது.

நச்சினார்க்கினியர் ஏரகம் (மலைநாட்டகத்தொரு திருப்பதி) ஆவினன்குடி, வேலூர், மலைநாடு, தண்பணைநாடு, காட்டுநாடு, சாலியூர் போன்ற முற்காலத்து ஊர்ப்பெயர்களைத் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

நச்சினார்க்கினியர் காலத்தில் தலையில் அணியக் கூடிய அணிகலனை 'சீதேவி' என்றும் காதில் அணியக்கூடிய அணிகலனை 'தாளுருவி' என்றும் அழைத்துள்ளனர்.

புடைவையைச் சீரை, வடங்கள் என்ற பெயரால் குறிப்பிட்டுள்ளனர். மேலும் இருபாலரின் உடையினையும் 'புடவை' என்ற சொல்லால் இவர் காலத்தில் வழங்கியுள்ளனர்.

ஆடையின் தூய்மை, மற்றும் அதன் சிறப்புக் கருதி ஆடையினை மடிப்புடைவை, தூமடி என்ற சொற்களால் குறிப்பிட்டுள்ளனர். மகளிரின் உள்ளாடை மற்றும் வெளியாடையை 'அறுவை' என்ற சொல்லால் கூறியுள்ளனர்.

கும்மாயத்தைப் பருப்புச்சோறு என்றும், வெல்லத்தைக் கருப்புக்கட்டி என்று கூறும் வழக்கம் இருந்துள்ளமை புலனாகிறது. இன்று வெல்லத்தின் ஒருவகையினைக் கருப்பட்டி என்று கூறும் வழக்கம் காணப்படுகின்றது.

இக்காலத்தில் வீட்டினைப் பல அறைகளாகப் பிரித்துக் கட்டுவதைப் போன்று, மண்டபம், கூடம், தாய்க்கட்டு, அடுக்களை எனப்பல அறைகளைக் கொண்டதாக நச்சினார்க்கினியர் காலத்தில் கட்டியுள்ளனர்.

உழவு, நெசவு, தச்சு, மட்கலம், தோல், உலோகம், கொல்லு, அணிகலன், சுண்ணம், சாயப்பாக்குத் தயாரித்தல், நூல், அட்டிற்றொழில் மற்றும் அந்தனர் தொழில்களான ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் முதலான பதினெட்டு வகைத் தொழில் முறைகளைத் தனது உரையின்வழிப் பதிவு செய்துள்ளார்.

பெரியோரை மதித்தல், கற்பொறி இடுதல், கல்வியில் கரை கண்டார், இஞ்சியைப் பாவை எனல், அடி வருடுதல், இனம், வளையல் அணியாமை, ஆடைக்குக் கஞ்சி இடுதல், யாகத்திற்குச் சந்தனம் பூசுதல், பாக்கு வேகவைத்தல், சுண்ணம் இடித்தல், கொடி நடுதல், சொல் வழக்கு, தந்தையின் உரிமை போன்ற பதினான்கு வகையான பழக்க வழக்கங்களைத் தனது உரையின் வழி வெளிப்படுத்தியுள்ளார். இன்றும் இப்பழக்க வழக்கங்களில் சில நடைமுறையில் காணப்படுகின்றன.

மகளிர் தம் இல்லத்திற்கு வரும் விருந்தினரைத் தத்தம் பிள்ளைகளுக்கு அண்ணன், அம்மான் போன்ற உறவுமுறைகள் சொல்லி உபசரித்ததனைத் தமது உரையில் குறிப்பிட்டுள்ளார். அம்மான் என்பது மாமனைக் குறிக்கப் பயன்படுத்தும் சொல். இன்றும் இச்சொல் வழக்கினுள் உள்ளது.

நச்சினார்க்கினியர் ஏழு வகையான நம்பிக்கைகளைத் தனது உரையில் குறிப்பிட்டுள்ளார். அந்தணர்கள் இரண்டு பிறவிகள் மீது நம்பிக்கை கொண்டுள்ளனர்.

முதற்சூல் கொண்ட பெண்கள் குழந்தையை இடுக்கணின்றிப்பெற தெய்வத்தை வணங்கியுள்ளனர். நீராடினால் தீவினைபோகும் என்று

நம்பியுள்ளனர். கதவினில் தெய்வம் உறையும் என்று நம்பிக்கைக் கொண்டு நெய்யும் வெண்சிறுகடுகும் அணிந்துள்ளனர். இன்றும் இந்நம்பிக்கைகள் மக்களிடம் பெரிதும் காணப்படுகின்றன.

நச்சினார்க்கினியரின் உரை தலைப்பிற்கு விளக்கம் கூறுதல், உவமைக்கு விளக்கம், சொற்கள் மற்றும் தொடர்களுக்கு விளக்கம் கூறுதல் என் மூன்று நிலைகளில் அமையப்பெறுகின்றது.

பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியரின் உரை விளக்கம் இன்றேல் பல உவமை, சொற்கள், தொடர்கள் போன்றவற்றிற்குப் பொருள் புரியாமல் இருந்திருக்கக்கூடும்.

நச்சினார்க்கினியர் பத்துப்பாட்டிற்குக் 'கொண்டுகூட்டுப் பொருள்கோள்' முறையில் விளக்கம் கூறியுள்ளார். இக்கொண்டுகூட்டு முறை விளக்கம் ஒரு சில இடங்களில் குழப்பத்தை விளைவித்திருப்பினும் பல இடங்களில் பொருத்தமுடையதாகவே அமையப்பெறுகின்றது.

இருபத்திரெண்டு இடங்களில் தம் காலத்துப் பாட வேறுபாட்டினைச் சுட்டிக்காட்டி அதற்கான விளக்கத்தினையும் குறிப்பிட்டுள்ளார்.

பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியரின் உரை முதல் உரை என்று இதுவரை கூறப்படுகின்றது. இருப்பினும் பத்துப்பாட்டிற்கு அவர் எழுதிய உரையில் ஐம்பத்தெட்டு இடங்களில் 'என்பாருமுளர்', 'கூறுவாருமுளர்', 'உரைப்பாருமுளர்' என்று குறிப்பிடுகின்றார். இவ்வாறு குறிப்பிடுவது பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியர் உரைக்கு முன்னதாகப் பழைய உரைகள் இருந்திருக்கக்கூடும் எனலாம். தம் காலத்தில் அச்சொற்களுக்கு வேறொரு பொருள் வழங்கியதை இவ்வாறு குறிப்பிடுகின்றார் என்பதை ஊகிக்க இடமுண்டு.

பிற உரையாசிரியரின் கருத்தினைக் கூறுகின்ற போது உரையாசிரியரின் பெயரினைக் குறிப்பிடவில்லை. நச்சினார்க்கினியரைப் போலவே கொண்டு கூட்டு முறையில் உரை எழுதியிருப்பதனை அவர்களது உரை வழி அறியமுடிகிறது.

பத்துப்பாட்டிற்குப் பல உரைகள் தோன்றியிருப்பினும் ஆரம்பக் காலத்தில் நச்சினார்க்கினியரின் உரையினைத் தொடர்ந்து வை.மு.கோவும், பொ.வே.சோமசுந்தரனாரும் உரை எழுதியுள்ளனர்.

இவ்விருவரும் நச்சினார்க்கினியரின் உரையினைப் பின்பற்றியும், வேறுபட்டும் உரை எழுதியுள்ளனர். நச்சினார்க்கினியரின் கொண்டு கூட்டு முறையில் உரை எழுதாமல் நேர்ப்பொருள் அளிக்கின்ற முறையில் உரை எழுதியுள்ளனர்.

நச்சினார்க்கினியர் தம் கால வழக்கு நிலைகளில் பயன்படுத்திய சொற்களையும் உரையில் பயன்படுத்தியுள்ளார். மேலும் சில இடங்களில் தம் சமயக் கொள்கையினையும் வலிந்து பொருள் கூறுகின்றார்.

பத்துப்பாட்டின் ஆறு பாடல்களுக்கு அவரது உரை கிடைக்கப்பெறாத நிலையில் உ.வே.சா.வின் உரை அதனை நிவர்த்தி செய்கின்றது.

## துணைநூற்பட்டியல்

### முதன்மை நூல்

1. நச்சினார்க்கினியர் (உ.ஆ.) - பத்துப்பாட்டு மூலமும் உரையும்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
மறுதோன்றி அச்சகம்,
தஞ்சாவூர்.
மூன்றாம் பதிப்பு-1961.

### துணைமை நூல்கள்

1. நச்சினார்க்கினியர் (உ.ஆ.) - தொல்காப்பிய பொருளதிகாரம்,
கழக வெளியீடு,
சென்னை-1.
இரண்டாம் பதிப்பு-1995.

2. மேலது - தொல்காப்பிய எழுத்ததிகாரம்,
சாரதா பதிப்பகம்,
சென்னை-600 014.
முதற்பதிப்பு-ஜுன் 2009.

3. இளம்பூரணர் (உ.ஆ.) - தொல்காப்பிய பொருளதிகாரம்,
கழக வெளியீடு,
சென்னை-1.
பனிரெண்டாவது பதிப்பு-2000.

4. வெள்ளைவாரணன்.க. - தொல்காப்பியம் புறத்திணையியல்,
உரைவளம்,
மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்,
பல்கலை நகர்,
மறுபதிப்பு-1983.

5. மேலது - தொல்காப்பியம் பொருளதிகாரம்,
உரைவளம்,
மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்,
பல்கலை நகர்,
மறுபதிப்பு-1983.

**இலக்கிய நூல்கள்**

1. கோபாலகிருஷ்ணமாச்சாரியர் - பத்துப்பாட்டு,
வை.மு. (உ.ஆ.) வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியார் கம்பெனி,
17, தெளிசிங்கப்பெருமாள் கோயில் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை-5.
சார்வரி முதற்பதிப்பு-1961.

2. சோமசுந்தரனார்.பொ.வே., - பத்துப்பாட்டு,
கழக வெளியீடு,
522, டி.டி.கே. சாலை,
ஆள்வார்பேட்டை,
சென்னை-18.
முதற்பதிப்பு-2007.

**திறனாய்வு நூல்கள்**

1. அண்ணாமலை.மு. - நச்சினார்க்கினியர்,
பழனிபிரசுரம்,
செந்தில் பதிப்பகம்,
புதுக்கோட்டை,
முதற்பதிப்பு-ஜுன் 1956.

2. அப்துல்மஜீத்.அ. - ஆய்வுக்கொத்து,
ஆராய்ச்சிப் பேரவை,
சென்னை-29.
முதற்பதிப்பு-1973.

3. அரவிந்தன்.மு.வை. - உரையாசிரியர்கள்,
மணிவாசகர் பதிப்பகம்,
8/7, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை-600 108
முதற்பதிப்பு-1968.

4. அருணாச்சலம்.மு. - தமிழிலக்கிய வரலாறு,
14ம் நூற்றாண்டு,
சாந்தி வித்தியாலயம்,
மாயூரம்.
முதற்பதிப்பு-1970.

5. அறவாணன்.க.ப. - இலக்கியச் சமூகவியல்,
தமிழ்க்கோட்டம்,
91, இரண்டாம் தெரு,
மோகன் நகர்,
புதுச்சேரி-605 005
முதற்பதிப்பு-டிசம்பர்-1992.

6. ஆதிநாராயணன்.எஸ்பி. - மனித உள்ளம்,
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை-14.
முதற்பதிப்பு-1973.

7. ஆறுமுகம்.அ. - சங்க இலக்கியத்தில் குடும்பம்,
உடைமை அரசு,
பாவேந்தர் பதிப்பகம்,
திருமழபாடி.
முதற்பதிப்பு-1994.

8. மேலது - நச்சினார்க்கினியரின் இலக்கியத்திறன்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
முதற்பதிப்பு-ஆகஸ்டு-1988.

9. இந்திரசித்து.கா
இளவரசன்.இரா. - சூரியகாந்தன் படைப்பிலக்கியத் திறனாய்வுகள், (தொகுதி-2),
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்,
முதற்பதிப்பு-அக்டோபர்-2005.

10. இராகவையங்கார்.மு. - ஆராய்ச்சித் தொகுதி,
பாரி நிலையம்,
சென்னை-1.
இரண்டாம் பதிப்பு-1964.

11. இராசகோபால்.ர. - புதிய பார்வைகள்,
பல்லவி பதிப்பகம்,
194, கண்ணா காம்ப்ளக்ஸ்,
மேட்டூர் ரோடு,
ஈரோடு-11.
முதற்பதிப்பு-2008.

12. இராசமாணிக்கனார்.மா. - பத்துப்பாட்டு ஆராய்ச்சி,
சென்னைப் பல்கலைக்கழகம்,
முதற்பதிப்பு-1970.

13. இளங்குமரன்.இரா. - இலக்கண வரலாறு,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை-600 108.
முதற்பதிப்பு-பிப்ரவரி-2009.

14. காந்தி.கா. - தமிழர் பழக்க வழக்கங்களும்
நம்பிக்கைகளும்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை-600 113.
இரண்டாம் பதிப்பு-2003.

15. கார்த்திகேசு சிவத்தம்பி - தமிழ்ச் சமூகமும் பண்பாட்டின் மீள்
கண்டுபிடிப்பும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்,
41-B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை-600 098.
முதற்பதிப்பு-நவம்பர்-1994.

16. குருசாமி.ச. - நச்சினார்க்கினியர் உரைநெறி,
இராணி பதிப்பகம்,
6, வினோத் வேதா அடுக்ககம்,
அமைந்தகரை, சென்னை-600 029
முதற்பதிப்பு-ஆகஸ்டு-2008.

17. குருநாதன்.இராம. - குறிஞ்சி காட்டும் சமுதாயம்,
தமிழ்ச்சாரல்,
எண்.138, சாய்நகர், மூன்றாவது தெரு,
விருகம்பாக்கம்,
சென்னை-600 092.
முதற்பதிப்பு-ஆகஸ்டு-2007.

18. கோமதிசங்கர்.கே.எம்.கே. - சமூகவியல் நோக்கில் நீதி இலக்கியம்,
சரயு பப்ளிகேஷன்ஸ்,
மேலகரம்-627 818.
தென்காசி.
முதற்பதிப்பு-அக்டோபர்-1989.

19. சசிவல்லி.வி.சி. - தமிழர் திருமணம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை-600 113.
முதற்பதிப்பு-1985.

20. மேலது - பண்டைத் தமிழர் தொழில்கள்,
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை-600 113.
முதற்பதிப்பு-நவம்பர்-1989.

21. சாரங்கபாணி.இரா. - சங்கத் தமிழ்வளம்,
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்-608 001
முதற்பதிப்பு-டிசம்பர்-2003.

22. சுப்பிரமணியன்.ச.வே. (உ.ஆ.) - பத்துப்பாட்டு,
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர்-630 307.
முதற்பதிப்பு-அக்டோபர்-2003.

23. சுப்பிரமணியன்.ந. - சங்க கால வாழ்வியல்,
(சங்கத் தமிழரின் அரசுமுறையும்
சமூக வாழ்வும்),
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்,
அம்பத்தூர், சென்னை-98.
முதற்பதிப்பு-ஆகஸ்டு-1986.

24. சுப்பிரமணியப்பரமேசுவரன் - நச்சினார்க்கினியரின்
இலக்கியத் திறனாய்வு,
குயில் பண்ணை,
சேலம்-636 003.
முதற்பதிப்பு-மே-2000.

25. செபமாலை ராசா - சமுதாயப் பகுப்பாய்வு,
வைகறைப் பதிப்பகம்,
திண்டுக்கல்-624 001.
முதற்பதிப்பு-நவம்பர்-2007.

26. சேதுராமன்.பி. - ஆற்றுப்படை இலக்கியத்தில்
தமிழர் வாழ்வியல்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்,
அம்பத்தூர்,
சென்னை-98.
முதற்பதிப்பு-டிசம்பர்-2011.

27. சோமசுந்தரம்.சி.எஸ்.எஸ். - சமூக சிற்பிகள்,
உலகத் தமிழ்ப் பண்பாட்டுக் கழகம்,
அடையாறு,
சென்னை-20.
முதற்பதிப்பு-மார்ச்-1991.

28. துரைசாமி பிள்ளை ஔவை.சு. - புறநானூறு,
(உ.ஆ.) கழக வெளியீடு, பகுதி 201-400,
சென்னை.
மறுபதிப்பு-1972.

29. தேவநேயப்பாவாணர்.ஞா. - பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும்,
பூம்புகார் பதிப்பகம்,
127, பிரகாசம் சாலை,
சென்னை-600 108.
முதற்பதிப்பு-மார்ச்-2009.

30. நமச்சிவாயம் - தமிழர் உணவு,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை-600 113.
முதற்பதிப்பு-1981.

31. பகவதி.கு. - தமிழர் ஆடைகள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை-600 113.
இரண்டாம் பதிப்பு-2003.

32. பக்தவத்சல பாரதி - தமிழர் உணவு,
(தொ.ஆ.) காலச்சுவடு பதிப்பகம்,
669, கே.பி.சாலை, நாகர்கோவில்-629 001.
முதற்பதிப்பு-டிசம்பர்-2011.

33. பரமசிவன்.தொ. - பண்பாட்டு அசைவுகள்,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்-629 001.
முதற்பதிப்பு-டிசம்பர்-2001.

34. பரிமேலழகர் - திருக்குறள்,
(உ.ஆ.) சாரதா பதிப்பகம்,
எண்.3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
சென்னை-600 014.
முதற்பதிப்பு-டிசம்பர்-2002.

35. பாக்கியமேரி - வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், அம்பத்தூர், சென்னை-98 முதற்பதிப்பு-ஜுன்-2008.

36. பாஸ்கல் கிஸ்பர்ட் - சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், தமிழ் வெளியீட்டுக் கழகம், முதற்பதிப்பு-1964.

37. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ.) - நற்றிணை, கழக வெளியீடு, சென்னை. மறுபதிப்பு-1967.

38. பெருமாள்.அ.கா. - உணவுப் பண்பாடு, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், அம்பத்தூர், சென்னை-98. முதற்பதிப்பு-ஏப்ரல்-2012.

39. மறைமலை அடிகளார் - வேளாளர் நாகரிகம், சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1963.

40. மோகன்.இரா. - உரை மரபுகள், மெய்யப்பன் பதிப்பகம், 53, புதுத்தெரு, சிதம்பரம்-608 001 முதற்பதிப்பு-டிசம்பர்-2003.

41. ஜான் ஜெயராஜ்.மோ. - திருக்குறள் விவிலியத்தில் அறமதிப்புகள்-ஓர் ஒப்பாய்வு, தமிழாய்வு மன்றம், கொட்டிவாக்கம், சென்னை-96. முதற்பதிப்பு-2009.

42. ஜெகதீசன்.அ. - சங்க இலக்கிய மதிப்பீடுகள்,
ஸ்நேகா பதிப்பகம்,
348, டி.டி.கே. சாலை,
சென்னை-14.
முதற்பதிப்பு-ஜனவரி-2008.

43. ஜெயா.வ. - சங்கப் பெண்பாற் புலவர்களின்
மொழியும் கருத்தும்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை-600 113.
முதற்பதிப்பு-2003.


**களஞ்சியம்**


1. - கலைக்களஞ்சியம் தொகுதி-4,
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு-1956.

## 1. திருமுருகாற்றுப்படை

| வ.எண் | அடி எண் | வேறுபடும் பாடங்கள் |
|---|---|---|
| 1. | 194 | கொலைஇய / குலைஇய |
| 2. | 199 | குண்டு சுனை / கார்க் குண்டு சுனை |
| 3. | 227 | மாண்டலைக் கொடி / ஆண்டலைக்கொடி |

## 2. பொருநராற்றுப்படை

| வ.எண் | அடி எண் | வேறுபடும் பாடங்கள் |
|---|---|---|
| 1. | 38 | உயவும் / உயவி |

## 3. சிறுபாணாற்றுப்படை

| வ.எண் | அடி எண் | வேறுபடும் பாடங்கள் |
|---|---|---|
| 1. | 264 | மழை மணிமயில் கலாபம் / மணி மயில் கலாபம் |
| 2. | 245 | ஆன விருப்பின் / ஆன மரபின் |

## 4. பெரும்பாணாற்றுப்படை

| வ.எண் | அடி எண் | வேறுபடும் பாடங்கள் |
|---|---|---|
| 1. | 50 | ஆரை / ஆர்வை |
| 2. | 169 | கட்டி / அட்டி |
| 3. | 278 | நல்அடை / நெல்லடை |
| 4. | 364 | முப்புடைத்திரள் / மூப்புடைத்திரள் |
| 5. | 473 | அரிசெத்து / அரி செய்தென்று |

## 5. மதுரைக்காஞ்சி

| வ.எண் | அடி எண் | வேறுபடும் பாடங்கள் |
|---|---|---|
| 1. | 197 | வாய் நட்பினையே / வாய் நடப்பினையே |
| 2. | 362 | அறைவனர் நுவல / அறைவன நுவல |
| 3. | 527-528 | சேறும் நாற்றமும் பலவின் சுளையும்<br>வேறுபட கவினிய தேம்மா கனியும்<br>சேறு நாற்றமும் வேறுபடக் கவனிய<br>பலவின் சுளையுந் தேமாங் கனியும் |

## 6. நெடுநல்வாடை

| வ.எண் | அடி எண் | வேறுபடும் பாடங்கள் |
|---|---|---|
| 1. | 40 | செவ்வி யரும்பின் / செவ்வரி யரும்பு |
| 2. | 45 | மனையுறை புறவின் / இறையுறை புறவும் |
| 3. | 62 | கட்டளை திரியாது / கட்டளை தெரியாது |
| 4. | 139-140 | வாயுறை / வாயுற |
| 5. | 185 | தா துளியும் / தாழ் துளியும் |

## 7. குறிஞ்சிப்பாட்டு

| வ.எண் | அடி எண் | வேறுபடும் பாடங்கள் |
|---|---|---|
| 1. | 161 | வெடிபடுத்து எதிர / வெடிபடுத்தார்த்து |
| 2. | 211 | நெஞ்சு அமர்ந்து / நெஞ்சமைந்து |

## 8. பட்டினப்பாலை

| வ.எண் | அடி எண் | வேறுபடும் பாடங்கள் |
|---|---|---|
| 1. | 166 | பாகு உகுத்த / உகுத்த பாகு |

## 9. மலைபடுகடாம்

| வ.எண் | அடி எண் | வேறுபடும் பாடங்கள் |
| --- | --- | --- |
| *1.* | *203* | புலந்து / புலர்ந்து |
| *2.* | *206* | பகல்நிலை தளர்க்கும் / பகைநிலை தளர்க்கும் |
| *3.* | *229* | யோரியாற்றியவின் / ஓராற்றியவு |

| திருமுருகாற்றுப்படை | | | | | |
|---|---|---|---|---|---|
| **வ. எண்** | **அடி எண்** | **பாடலடி** | **நச்சினார்க்கினியர்** | **வை.மு.கோ.** | **பொ.வே.சோமசுந்தரனார்** |
| 1. | 3 | இமைக்கும் | கண்களின் இதழ்கள் இரண்டினையும் குவித்தல் | கண்களின் இதழ்கள் இரண்டினையும் குவித்தல் | ஒளிர்தல் |
| 2. | 60 | மா | அவுணரெல்லாரும் தம்முள்ளே எதிர்ந்தார் வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங் கொண்டிருந்து சாதித்ததொருமாவை வெட்டினான் | கீழ்நோக்கின பூங்கொத்துக்களையுடைய மாமரத்தை வெட்டின | கீழ்நோக்கின பூங்கொத்துக்களையுடைய மாமரத்தை வெட்டின |
| 3. | 68 | வரிபுனை பந்தொடு பாவை தூங்க | பகைவரை மகளிராக்கி அவர் கொண்டு விளையாடுதற்குத் தூக்கின | நூலால் வரிந்து புனையப்பட்ட பந்தும் பாவையும் அறுப்பாரின்மையின் தூங்கியே கிடப்ப | நூலால் வரிந்து புனையப்பட்ட பந்தும் பாவையும் அறுப்பாரின்மையின் தூங்கியே கிடப்ப |
| 4. | 106 | வசிந்து | படைக்கலன்களால் வடுப்பட்டென்று பொருளுரைத்தல் இறைவனாதலிற் பொருந்தாது | சுடரையுடைய படைக்கலன்களை யெறிந்து பகைவர் மார்பைப் பிளந்து அவற்றை வாங்குதோள் | சுடரையுடைய படைக்கலன்களை யெறிந்து பகைவர் மார்பைப் பிளந்து அவற்றை வாங்குதோள் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 5. | 111 | ஒருகை மார்பினோடு விளங்க | இறைவன் மோனமுத்திரையைத் தானாய் தானாயே யிருந்து காட்ட ஊமைத் தசும்புள் நீர் நிறைந்தாற்போல ஆனந்தமயமான ஒளி மாணாக்கர்க்கு நிறைதலின் அதற்குரிய மோன முத்திரை | ஒரு கை முனிவர்க்குத் தத்துவங்களைக் கூறி உரையிறந்த பொருளை உணர்த்தும் காலத்துத்திரு மார்போடு விளங்கா நிற்ப | ஒரு கை முனிவர்க்குத் தத்துவங்களைக் கூறி உரையிறந்து பொருளை உணர்த்தும் காலத்துத்திரு மார்போடு விளங்கா நிற்ப |
| 6. | 128 | மானின் உரிவை | கிருட்டினாசினம் போர்த்த | கிருட்டினாசினம் போர்த்த | கருமானின் தோல் போர்த்த |
| 7. | 138 | மாசில் தூவுடை | தெய்வத் தன்மையால் அழுக்கேறாத உடை | அழுக்கேறாத உடை | அழுக்கேறாத உடை |
| 8. | 216 | தலைதந்து | முதற்கை கொடுத்து | இருப்பிடம் கொடுத்து | இருப்பிடம் கொடுத்து |
| 9. | 226 | கந்துடை நிலை | ஆதீண்டு குற்றியையுடைய இடம் | அதீண்டு குற்றியையுடைய இடம் | திருவருட் குறியாக நடப்பட்ட தறி இடம் |
| 10. | 229 | குடந்தம்பட்டு | வழிபட்டு (குடவென்பது தடவென்பது போல வளைவை உணர்த்துவதோர் உரிச்சொல்லாகலின் அதனடியாகப் பிறந்த பெயருமாம்) | வழிபட்டு | வழிபட்டு |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **பொருநராற்றுப்படை** | | | | | |
| 11. | 52 | கடன் கழித்தல் | காட்டின் கண்ணே தங்குகின்ற தெய்வத்திற்கு மனமகிழ்ச்சியாகச் செய்யும் முறைமைகளைச் செய்து (தடாரியை வாசித்தல்) | காட்டின் கண்ணே தங்குகின்ற தெய்வத்திற்கு மனமகிழ்ச்சியாகச் செய்யும் முறைமைகளைச் செய்து | காட்டின் கண்ணே தங்குகின்ற தெய்வத்திற்கு மனமகிழ்ச்சியாகச் செய்யும் முறைமைகளைச் செய்து |
| 12. | 14 | நிரல் அமை | ஒன்றோடொன்று சேராத | ஒன்றோரொன்று சேராத | அளவு வொப்புமையந்த |
| **பெரும்பாணாற்றுப்படை** | | | | | |
| 13. | 160 | பூஞ்சுமடு | பூவாற் செய்த சுமடு | அழகிய சுமடு | மெல்லிய சுமடு |
| 14. | 165 | கருநாகு | கரிய எருமை நாகு | கரிய எருமை நாகு | எருமையினையும் அவையிற்றின் கருவாகிய கன்றுகள் |
| 15. | 172 | மேம்பால் | எல்லா மணமும் பொருந்தும் பசுக்கறந்த பாற்கையைத் தடவின மயிர் | பலரும் விரும்புகின்ற பசுக்கறந்த பாற்கையைத் தடவின மயிர் | ஏனைப் பாலினும் மேன்மையுடைய ஆன்பாலைத் தடவின மயிர் |
| 16. | 217 | பஞ்சாய் கோரை | தண்டானாகிய கோரை | தண்டானாகிய கோரை | தண்டானாகிய கோரை |
| 17. | 263 | வெண்கோடு | வஞ்சிமரமும் காஞ்சி மரமுமாகிய வெள்ளிய கொம்பு | வெள்ளிய மரக்கொம்புகள் | வெள்ளிய மரக்கொம்புகள் |
| 18. | 355 | தனிமனை | ஒப்பில்லாத மனை | தனிப்பட்டுள்ள அல்லது ஒப்பில்லாத மனை | தோப்புக் குடிகளுடைய தனித்தனியாக அமைந்த மனை |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 19. | 424 | பொன்பூப்ப | தன்னை விரும்பியிருந்தோர் தேசம் திருமடந்தையார் பொலிவு பெற்றிருப்ப | தன்னை விரும்பியிருந்தோர் தேசம் திருமடந்தையார் பொலிவு பெற்றிருப்ப | தன்னை விரும்பியிருந்தோர் நாடுகள் பொன்பூத்துத் திகழா நிற்பவும் |
| 20. | 445 | இடைத்தெரிந்து உணரும் | நடுநிலையை ஆராய்ந்து அறியும் மயக்கம் தீர்ந்த அறிவு | நடுநிலையை ஆராய்ந்து அறியும் மயக்கம் தீர்ந்த அறிவு | தன்னால் விரும்பப்பட்டார் தனக்குக் கூறாமலே அவருளந் தெளிந்து உணரா நின்ற மயக்கமற்ற நற்காட்சியை உடையனாய் |
| **முல்லைப்பாட்டு** | | | | | |
| 21. | 12 | பசலை | வருத்தத்தையுடைய கன்று | வருத்தத்தையுடைய கன்று | இளங்கன்று |
| 22. | 50 | நிழத்திய | எறிந்துவிட்ட (கோயில்பணி மடங்கினால் மணியெரிந்து விடுதல் இயல்பு) | அடிக்கப்பட்டு அடங்கிய | நுணுகிய |
| 23. | 55 | பொழுது அளந்து அறியும் பொய்யா மாக்கள் | அறிவில்லாதோருடைய வாழ்நாளை இத்துணையென்று அளந்தறியும் பொய்யாத காட்சியையுடையார் | இவ்வளவாயிற்றென்று நாழிகை வட்டிலைக் கொண்டு அளந்தறியும் தன்மையுள்ள தனக்கு ஏற்பட்ட தொழிலைத் தவறாமல் செய்யவல்ல பொழுதறியுமவர் | நாழிகையை அறிந்து இத்துணையென்று அறியும் பொய்த்தலில்லாத நாழிகைக் கணக்கர் |

| மதுரைக்காஞ்சி | | | | | |
|---|---|---|---|---|---|
| 24. | 8 | இரவு செய்யும் வெள் திங்கள் | இராப்பொழுதையுண்டாக்கும் வெள்ளிய மதி | இராப்பொழுதை யுண்டாக்கும் வெள்ளிய மதி | இராப்பொழுதின் கண் ஒளி செய்யும் வெண்மையான திங்கள் |
| 25. | 60 | நிலம் தந்த பேருதவி | நாட்டிலிருக்கின்ற அரசர் நிலங்களையெல்லாங் கொண்ட பெரிய உதவி மலையும் காடும் அரணாக இருந்த அரசை அழித்த வலியாலே நாட்டிலிருக்கின்ற அரசர் தத்தம் நாடுகளை விட்டாரென்றதாம் | நாட்டிலிருக்கின்ற அரசர் நிலங்களையெல்லாங் கொண்ட பெரிய உதவி | இவ்வுலகத்தைத் திருத்திக் கொடுத்த பெரிய உதவிகளையும் |
| 26. | 87–88 | நெல்லின் ஊர் | சாலியூர் | சாலியூர் | நெல்லூர் |
| 27. | 165 | நிலத்து ஆற்றும் குழூஉப்புதவின் | நிலத்து உள்ளோரையெல்லாம் போக்கும் வாசல் காப்போருடைய வாசலின் கண்ணேயிருந்து | நிலத்து உள்ளோரை யெல்லாம் போக்கும் வாசல் காப்போருடைய வாசலின் கண்ணேயிருந்து | நிலத்தின் கண்ணே நின்று தொழில் செய்கின்ற நிலையோடு கூடின கதவு |
| 28. | 354 | திண்ணிய போர்க் கதவின் | திண்ணிய செருவினையுடைய கதவு | திண்ணிய செருவினை யுடைய கதவு | திண்ணியவாய்ப் பொருத்தப்பட்ட கதவு |
| 29. | 357 | வானம் மூழ்கி | தேவருலகிலே சென்று | ஆகாயத்தே சென்று | ஆகாயத்தே சென்று |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 30. | 384 | அங்கண் மால் விசும்பு | அழகிய இடங்களைத் தன்னிடத்தேயுடைய பெரிய ஆகாயம் (தேவருலகம் முதலியவற்றைத் தன்னிடத்தே யுடைமையின்) | அழகிய இடங்களை தன்னிடத்தேயுடைய பெரிய ஆகாயம் | அழகிய ஞாயிறாகிய கண்ணையுடைய ஆகாயம் |
| 32. | 391 | இடுமயிர் | இட்ட வாசங்கள் | இட்ட வாசங்கள் | இடுமயிர் |
| 33. | 584 | கொண்டி மகளிர் | பரத்தையர் (அங்ஙனம் விளையாடி வசிகரித்து உறவு கொண்டு பொருள் வாங்குதல் அவர்க்கியல்பு) | பரத்தையர் | வரைவின் மகளிர் |
| **நெடுநல்வாடை** | | | | | |
| 34. | 691 | கூளியர் | வேட்டுவர் | வேட்டுவர் | வேட்டுவர் (மறவர்) |
| 35. | 3 | கொடுங்கோல் | கொடியகோல் | வளைந்தகோல் | கொடியகோல் |
| 36. | 4 | இனநிரை | இனமும் நிரையும் | தொகுதியாகவுள்ள நிரையும் | தொகுதியாகவுள்ள நிரையும் |
| 37. | 32 | மாக்கள் | மிலேச்சர் | மனிதர் | மிலேச்சர் |
| 38. | 36 | வெள்ளி வள்ளி | வெளுக்கப்பட்ட சங்கு வளையல் | வெள்ளியால் இயன்ற வளை | வெளுக்கப்பட்ட சங்கு வளையல் |
| 39. | 60 | வானுற நிவந்த | தேவரூரைத் தீண்டும்படி உயர்ந்த மேலாம் நிலத்திடத்து | வானத்தை அளாவ ஓங்கிய மேல் மாளிகை | வானத்தை அளாவ ஓங்கிய மேல் மாளிகை |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **குறிஞ்சிப்பாட்டு** | | | | | |
| *40.* | *212* | விடர் | அரிய முழைஞ்சு | அரிய முழைஞ்சு | அரிய காடு |
| **முல்லைப்பாட்டு** | | | | | |
| *41.* | *95* | கொண்மூ | செக்கர் வானம் | வானம் | வானம் |
| **மலைபடுகடாம்** | | | | | |
| *42.* | *195* | நிழத்தல் | நொக்குதல் | நொக்குதல் | அழித்தல் |
| *43.* | *421* | கூப்பிடு கடக்கும் | கூப்பிடாத அவ்வெல்லையைக் கூவா நிற்கும் | கூப்பிடு செல்லக்கூடிய எல்லையையும் கடந்து நிற்கும் எனவே கூப்பாடு செல்லக்கூடாது. அப்பாற்பட்ட அவ்வெல்லையும் கடந்து நிற்கும் | கூப்பிடு தொலையையும் கடவா நிற்கும் |

## உரை கிடைக்கப்பெறாத இடங்கள்

| வ.எண் | நூற்பெயர் | அடி எண் |
|---|---|---|
| 1. | பொருநராற்றுப்படை | 195-196 |
| 2. | பெரும்பாணாற்றுப்படை | 193-194, 196 |
| 3. | நெடுநல்வாடை | 90 |
| 4. | குறிஞ்சிப்பாட்டு | 229-230 |
| 5. | பட்டினப்பாலை | 256-257 |
| 6. | மலைபடுகடாம் | 192,526,529,530,531 |